மூ— கவர்ந்த*செங்கட்கருமுகிலைச்செய்யவாய்ச்செழுங்கற்பகத்தை* யெங்குச்சென்றாகிலுங்கண்டி துவோத
க்கவாறென்மினே* ‖ ரு ‖
என்மின்னுநூன்மார்ப னென்கரும்பெருமா னென்கண்ணன்*

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

ஆ— கடாக்ஷங்களாலும் ஸத்யோபமான பணிமொழிகளினாலும் திருமேனியிலழகாலும் ஸூக்ஷ்மநாபமான் வசிஷ்டமத்தாலு மென்னுடைய ஜ்ஞாநேந்த்ரியங்களையும் ஸவமானித்துக்கொண்டுபோனவனை த்திருநாட்டிலேசென்றாகிலுங்கண்டு உம்முடையதக்கவாறிதுவோவென்று சொல்லவேணுமென்று தான்வள ர்த்தகிளிகளைக்குறித்துச்சொல்லுகிறாள். ‖ ரு ‖

(என்மின்னுநூன்மார்பன்) இதுவோ தக்கவாறென்றுசொல்லவேணுமென்று தான்வளர்த்தபூவைகளை ஸவே க்ஷிக்கப் பின்னையும்அவைபோகாதிருந்தவாறே நம்மபேக்ஷிதமவன் செய்தருளாவிடில்செய்வதென்னென்று போகாதிருந்தனவாகக்கொண்டு ஸ்வீயாஸம்வேத்ய திவ்யஸம்ஷணஸம்ஷிதமான திவ்யாபரணத்தையும் தன்

இ—யர்லே செய்யவாய்ஸ்வஸாத்யமும் திருமேனியினழகாலுமென்கிறவித்தாலேகருமுகில்ஸ்வஸாத்யமும் ஸூக்ஷ்மநேத்ராதியாலே செழுங்கற்பகஸ்வஸாத்யமும் சொல்லிற்றாய்த்து. நெஞ்சைச்சொன்னது உபல க்ஷணமென்கிறகநத்தாலே ஜ்ஞாநேந்த்ரியங்களை. எங்குச்சென்றாகிலுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய் கிறார் (திருநாட்டிலேஇத்யாதியால்) ‖ ரு ‖

✳ ஆரும்பாட்டு:✳

அவனென்னையநாதரித்துப்போயிருக்கிறானென்றுகீழெல்லாஞ்சொன்னவ ளிப்பாட்டிலே நமக்கன்றி நல் காதனென்பானேனென்ன் வவதரிப்பிக்கிறார் (இதுவோவித்யாதியால்) போகாதிருந்தனவாகக்கொண்டென்னு மளவுமவதாரிகை. கொண்டென்றது — உபேக்ஷித்தென்றபடி. இதுக்கு ஜ்ஞானவாக்யத்தில் க்ரியை போடேயந்வயம். இதுவோதக்கவாறென்று சொல்லவேணுமென்கிறவித்தாலே த்ருதீயவாக்ய தாத்பர்யஞ்சொ ல்லிற்றாய்த்து. ப்ரயோஜநவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸ்வீயேத்யாதியால்) அதல ஸம்ஷிதமான

ஸ — ஊர்ந்துஎன்றது- ஸகஸம்பாவிதஜாதபாகம்.வந்து-என்னோடுஸம்ஶ்லேஷிக்கைக்காகயிப்படிஸலேஶமாகவ ந்து, வினைபேனை- விஶ்லேஷித்தாலவன் யரித்திருக்கிறாப்போலே யிருக்கவொட்டாதவாவத்தைப்பண்ணினவெ ன்னை, நெஞ்சங்கவர்ந்த - ஜ்ஞஸ்ஸைஸம்ஹ்ருதித்தவனை, ஜ்ஞஸ்ஸை பவஹரித்தவனைவென்றபடி. என்னை ஜ்ஞஸ்ஸை யவஹரித்தவனென்று இகரத்தக்கவும் த்ருஷ்டிஸ்வாஹாவ்யாத்பவனும். என்னுடையஜ்ஞஸ்ஸையபஹ ரிததவனைவென்றபடி. செங்கண் - என்பக்கல்வீக்ஷியாலே சிவந்தகண்களையுடையவனை, செங்கட்க ருமுகிலென்கிறவிடத்தில் ணகாரஸ்யககாரேவசிர டகாராதேஶ:. கருமுகிலை - காளமேகநிபனை, செ ய்யவாய் - என்னைவிஶ்லேஷிக்கிறஸமயத்திலே வாடாமகம்சொல்லப்புக்கு ஸ்மிதம்பண்ணும்போது மிகவும் சிவந்தவராத்தையுடையவனை, செழுங்கற்பகத்தை - அழகியதாகநிற்கிற கல்பகத்தை, செழுஎன்றது அழகி யது மோகத்தில் கல்பகம்போலன்றிக்கே ஸாத்நைவைக்கொடுக்கிற விலக்ஷணகல்பவ்ருக்ஷமாயிருக்கிறவனை யென்றபடி. எங்குச்சென்றாகிலுங்கண்டு — எங்கேபோயாகிலுங்கண்டு, திருநாட்டிலேபோயாகிலுங்கண்டெ ன்றபடி. இதுவோதக்கவாறு - இப்படியவள்நெஞ்சையு மவஹரித்துக்கொண்டு உம்முடையநெஞ்சை அவள் பக்கலிலே ஸம்ஶ்லேஷித்தும்வையாதேதிரப்போருகையோவுமக்குத்தக்கப்ரகாரம், என்மினே-என்னுங்கோள், இப்படிசொல்லுங்கோளென்றபடி. ‖ ரு ‖

தீவினையேன்வளர்த்த - க்ரூரமான வாவத்தை யுடையவளான நான்வளர்த்த, உங்களுடைய காயமும் நான் செய்யவேண்டியிருக்க வுங்களைக்கொண்டென்காயமுஞ் செய்துகொள்ளும்படியான வாவத்தைப்பண்ணி னவ்ளான என்னாலே வளர்க்கப்பட்டவையான வென்றபடி. சிறு- ஜாதிகளான, பூவைகளே - ஶாரிகைகா ள்? என் - என்னுடையவனை, மின்னுநூல்மார்பை யெனக்கு ஹோதமாக்கினவனை வென்றபடி. மின்னு நூல் மின்னாநிற்கிற நூலையுடையத்தான, ஸதாஜ்வலநஸ்யஜ்ஞாவவீதஶாலியானவென்றபடி. மார்பன்- வக்ஷஸ் ஸையுடையவனை, என்- என்னுடையவனை, தன்னுடையகழுத்ததிருமேனியையெனக்குவோதமாக்கினவனை வென்றபடி. கரும்பெருமான் - நீலவர்ணனானஸ்வாமியாந, உதூநீலஸத்ருஶமான திருமேனியினழகைக்காட் டி யென்னையடிமை கொண்டவனைவென்றபடி. என்கண்ணன் — என்னுடைய க்ருஷ்ணன், தன்ஸ்வரூபவத்து

மூ—வந்திருந்தும்முடைய மணிச்சேவலுநீருமெல்லா* மந்தரமொன்றுமின்றியலர்மேலசையுமன்னங்கா* ளென்றிருமார்வர்க்கென்னையின்னவாறிவள்காண்மினென்று* மந்திரத்தொன்றுணர்த்தியுரையீர்மறுமாற்றங்களே* ॥௰॥

மாற்றங்களாய்ந்துகொண்டுமதுசூதபிரானடிமே*

ஆ—மென்று சிலபக்ஷிகளைநோக்கிச்சொல்லுகிறாள். ॥௯॥

(வந்திருந்து) திருவோலக்கத்திலேயெழுந்தருளியிருந்த ஸமயத்தில் திருவுள்ளமப்ரஸந்நமாயிருக்கிறபோது சொல்லாதே அவ்வோலக்கங்கலைந்து ஏகாந்தஸேவா காலத்திலேயெழுந்தருளினால் அங்கே பிராட்டியினுடைய திவ்யஸந்நிதியிலே திருவுள்ளத்திலேபடும்படி யென்திறம் விண்ணப்பஞ்செய்து அவன் அருளிச்செய்தருளின மறுமாற்றங்கொண்டு என்னருகேவந்திருந்து சொல்லவேணுமென்று ஸுந்தரஸம்ஸ்லேஷ ஸமேதமான, அன்னங்களைக்குறித்துச்சொல்லுகிறாள். ॥௰॥

(மாற்றங்கள்) பொலிந்துநின்றபிரான் திருவடிகளிலேநாற்றங்கொள்பூம்பொழில்சூழ்குருகூர்ச்சடகோபன்

## ✻ பத்தாம்பாட்டு. ✻

இ—மந்திரத்துஎன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (திருவோலக்கத்திலேயித்யாதியால்) என்னையின்னவாறித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்திறமித்யாதியால்) வந்திருந்துரையீரென்றதையித்துத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னருகேவந்தித்யாதியால்) உம்முடையமணியித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸுந்தரஸேதித்யாதியால்) ॥௰॥

## ✻ நிகமனம். ✻

மதுசூதபிரானடிமேல்நாற்றங்கொளென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பொலிந்துநின்றவித்யா

ஸ—கிம்வாவசநெயம்'' என்கிறபடியே யவற்றைக்கேட்கையேஎனக்குப்போதுபோக்காயிருக்கும்படி எப்போதுமந்தவார்த்தைகளையே சொல்லவேணுமென்றபடி. ॥௯॥

உம்முடைய - உங்களுடைய, மணி - ஸௌந்தர்யமான, என்னுடையநாயகனென்னைவிட்டுப்போனாப்போலன்றிக்கேஸதாஸம்ஸ்லேஷசாலிகங்களானவென்றபடி. சேவலும் - பார்யாஸஹிதங்களும், நீரும் - ஸ்த்ரீகளானநீங்களும், ஸாத்விகத்திலே ஸ்த்ரீபும்ஸபேத முண்டாயிருந்தாலும் அது திவ்யதம்பதிகளுடைய ஸம்ஸ்லேஷத்துக்குபயுக்தமாயிருக்குமாப்போலே இவற்றினுடைய ஸ்த்ரீபும்ஸபேதமும் தன்கார்யஞ்செய்கைக் குபயுக்தமென்றிருக்கிறாள். எல்லாம் - ''ஸபுத்ரபௌத்ரஸஹகண:'' என்னுமாப்போலே மற்றுமுள்ள உங்களுடைய ஸமூஹங்களுமெல்லாருமென்றபடி. அந்தரம் - இடைவெளி, பரஸ்பரஸம்ஸ்லேஷத்துக்கு விச்சேதமென்றபடி. ஒன்றுமின்றி - விச்லேஷத்துமில்லாமல், அலர்மேல் - புஷ்பங்களின்மேலே, பத்மங்களின்மேலேஎன்றபடி. அசையும் - ஸம்ஸ்லேஷரஸத்தாலே அசையாநிற்கிற, இவையும்தன்தோழிமாரைப்போலே சூதங்களாயிருந்து விடாதே யிப்படி ஸஹசரங்களாயிருக்கை தன்கார்யத்துக்கு உபயுக்தமென்றிருக்கிறாள். அன்னங்காள் - ஹம்ஸங்காள், என்திருமார்வருக்கு - எனக்கு ஸ்வாமியான பெரியபிராட்டியாரைத் திருமார்பிலே யுடையவரான ஸ்வாமிக்கு, இதுக்குஉணர்த்தியென்கிறத்தோடே ஸம்பந்தம். என்னை - ஸுநந்யகதிகெயானவென்னை உத்தேசித்து, இதுக்கு ஒரு வார்த்தை யென்கிறத்தோடே ஸம்பந்தம். இவளின்னவாறு - இவளிப்படிப்பட்ட ப்ரகாரத்தையுடையவளானாள், ஆறு - ப்ரகாரம். காண்மினென்று - கண்டுகொள்ளுமென்று, தன்ப்ரகாரம் வாசாமகோசரமல்லாமையாலேஇன்னவாறென்று ஸாமாந்யேநசொல்லுகிறாள். யத்வா:—இன்னவாறு காண்மினென்றுபலமான உங்களுடம்பைக்காட்டுங்கோளென்கிற கருத்தாலே யிப்படி நிர்தேசிக்கிறாள். மந்திரத்து - மந்திரத்திலே. பிராட்டியுந்தானுமாய் ஏகாந்தமாயிருக்கிறஏகாந்தஸேவாஸமயத்திலே யென்றபடி. ஒன்று - ஒருவார்த்தையை, உணர்த்தி - அறிவிப்பித்து, மறுமாற்றங்கள் அவனருளிச்செய்த ப்ரத்யுத்தரங்களை, மறுமாற்றம் - ப்ரத்யுத்தரம், வந்து - அவன்பக்கல் நின்றுமிங்கேவந்து, இருந்து - என்ஸமீபத்திலேயிருந்து உரையீர் - நீங்கள்சொல்லவேணும். * * * ॥௰॥

மதுசூதபிரான் - ஜ்ஞானமயதேவாதிவேதத்தை யபஹரித்துக்கொண்டுபோன தைத்யரைநிரஸித்து ஜகதுபகாரகனான பொலிந்து நின்றபிரானுடைய, அடிமேல் - திருவடிகளிலே, பேசென்று ஸ்வாதந்த்ர்யத்வயும்

ஈ—தா—தெய்வத்தாலும், (ஸாமாந்யாதபா) வெங்கட்புள்ளூர்துவந்து — விரோதிநிரஸநசீலனை யென நினைத்தவனை வாஹநமாகவுடையவனாகைபாலும், (ஸ்ரீஸ்ரீதேவஸேனாபத்யாச) என்கண்ணன் தனைமன்றுநீள் கழல்மேல்தண்டுழாய்நமர்சன்றிநல்கான் - அஸ்ரீதர்ந்திடக் கொண்டு தைஸ்வர்யத்தாலும்;(சாரூர்) பூவைகள்போல் நிறத்தன் - பூவைப்பூப்போலேயிருக்கிற திருநிறத்தாலும், (ஸாம்ராஜ்யமாக) மாசறுநீலச்சுடர்முடி- யிருநீலக்காவுஜ்ஜ்வலங்கொண்டு சேர்ந்திருக்கிற திருவபிஷேகத்தாலே ஸூசிதமான விபூதித்வயஸாம்ராஜ்யமாதத்தாலும், (சுவதிராவபரமேஷ்டிஸ்வாமித்யச) சாத்திரள்மாமுகில்போல் கண்ணன்விண்ணவர். கோனே - சுவதாரஜ்ஞமியிலும் ப்ரகாசிக்கிற அபர்வருமமராகளதிபதித்வத்தாலும், மகாரத்தாலே "என் திருமார்வற்கு" என்று மேலிற்பாட்டில்சொல்லுகிற ஸ்ரீயஃபதித்வம் ஸூசிதமாகிறது, இப்படிகளாலெம்பெருமானை ஸகலமநுஜநங்களிட்டழைக்கும்படியான விபூதியுபத்தையுடையனாக "பொன்னுலகாளீரோ" என்கிறதுலகத்திலே ஆழ்வார் ப்ரகாசிப்பித்தருளினரென்கிறார். ௰௭௨

ஸ்ரீமதே சடகோபாய நம: ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ஆறும்பத்தில் எட்டாந்திருவாய்மொழி முற்றிற்று.

# ஒன்பதாந்திருவாய்மொழி.

மூ—நீராய்நிலனாய்த்தீயாய்க் காலாய்நெடுவானாய்ச்* சீரார்சுடர்களிரண்டாய்ச் சிவனாய் அயனாய்*

ஆ—(நீராய்) இப்படி தூதுப்ரேஷணம்பண்ணியு மெம்பெருமான் வரக்காணாமையாலேயவனைத்தம்முடைய பெரியஆர்த்தியோடேகூடத் திருநாட்டிலேகேட்கும்படி கூப்பிட்டழைக்கிறார். வ்யூஹாதிவிபவமிகாரஸவ-

## ஒன்பதாந்திருவாய்மொழி.

இ— இப்படி தூதப்ரேஷணம்பண்ணினவநந்தர மவன்வருகை யவஸ்யம்பாவியாக வேண்டியிருக்க அந்தரமுதவானவிடங்களிலே கண்டிருக்கிறவிவர் இத்திருவாய்மொழியிலே ஆர்த்தராய்க் கூப்பிடுகைக்கு யைமேதென்றோ? தூதப்ரேஷணத்தாலே அவன்வரக்காணாமையாலே தாமாகவவனைக்கூப்பிட்டு அழைக்கிறாரென்றில்? தூதப்ரேஷணத்தால் வாராதவன் தாமாகவழைத்தால் வருவனென்றிருக்கைக்கு நிபந்தநமேதென்னவதரிப்பிக்கிறார் (இப்படிதூதேத்யாதிநா) "மரங்களுமிரங்கும்வகை மணிவண்ணவோ! வென்றுகூவுமா" லென்கிறபடியே தம்முடையவார்த்த்யதிசயத்தாலே சேதனரங்களான மரங்களுங்கூட விரங்கிறபடியைக்கண்டவிவர் இழிற்பாட்டில் பெரியவார்த்தியோடேகூட தாமாக்கூப்பிடம்பண்ணினால் ஸர்வேஸ்வரனுப் ஸர்வஜ்ஞனாயிருக்கிறவன் நீராயுருகிவந்து விழாதிருக்கமாட்டானென்று பார்த்து இப்படி கூப்பிட்டழைக்கிறாரென்றுகருத்து. * * * * * * *.

## முதற்பாட்டு

சிவனாயயனாயென்று ப்ரஹ்மருத்ரர்களுக்கிவன் ஆத்மாவென்றபோதே மற்றப்பேர்க்குமாத்மாவென்னுமிடம் கைமுத்யஸித்தமென்றுகருத்தாலே யருளிச்செய்கிறார் (ப்ரஹ்மேத்யாதி) (நீராயித்யாதி) சுடர்களி

ப—நீராய் - ஜந்துக்களுக்கு விஷயஸாதநமாயிருக்கிற ஜலமாய் நிலனாய் - ஸகலருக்கும் ஆதாரமாயாஸ்ரயமாயிருக்கிறபூமிக்குமுண்டாக்குகிற வ்யாப்தியாய், தீயாய்- ஸாமான்யவாயுவுடன் வழியாய், தீ - அக்நி, காலாய் - தேஹஸஞ்சார ஸாதநமான ப்ராணனாய், காலென்று ப்ராணன், நெடு- விபுவுமான, ஸகலத்துக்குமவகாசப்ரதமாய்க்கொண்டுஸகலத்தையுமவ்யாப்தித்துக்கொண்டிருக்கிறவென்றபடி. வானாய் - ஆகாசமாய், சீரார் - ஸ்ரீயினாலே குணங்களான, சீர் - ஸ்ரீ, ஸர்வஸஞ்சாரவிரோதி ஸஹஜஸ நிரந்தரமாயும் ஸகலத்துக்கு ஸ்வப்ரயோஜனமாயுமிருக்குள்ளதிகளாலே குணங்களானவென்றபடி. சுடர்களிரண்டாய் இரண்டு ஜ்யோதிஸ்ஸுக்களாய், சந்த்ரஸூர்யர்களா யென்றபடி. சிவனாய் - ருத்ரனாய், அயனாய் - சதுர்முகனாய்? ஸர்வாத்மாவானவனே யென்றபடி. ஸம்போதி. நீராய்நிலனாயென்று தொடங்கிசிவனாயயனாயென்று

மூ—மாயவம்மானே *நண்ணி புன்னை நான் கண்டுகந்து கூத்தாட* நண்ணியொருநாள் ஞாலத்தூடேநடவாயே*॥
ஞாலத்தூடேநடந்துநின்றும்

ஆ—ள்ள திவ்யஸம்ஸாரிகளும் ஸ்ரீ கராகைக்கன்றோ? ஆதலால் அவர்களுடைய உஜ்ஜீவநார்த்தமாக ஸௌகா ஸ்திக்ஷமயான என்னுடைய மாதுங்களாலே உன்னைஸ்பர்சித்துன்னழகையு முன்னடையையுங் கண்ணாலே கண்டுகந்து அந்தஸ்ரீ க்ருதிமயத்தாலே நான்கூத்தாடும்படி வந்தொருநாள் ஞாலத்தூடேநடவாயென்கிறார். ॥உ॥

(ஞாலத்தூடே) வாஸனையும் வஸுவதீத்திருமகளையும் ஸ்ரீவஸுதேவர் திருமகளையும்மற்றுஸம்வேத்ய

இ—ஞகத்யமிவைக்கேட் டுன்விஶ்லேஷியழியாமைக்காக நீ வரவேணுமென்றிவ ரருளிச்செய்தவாறே உம்மு டைய வாத்ஸல்யமிபாலேயிவை ஸௌகாவிஷ்டங்களாகுவிவைத்தைஸ்ரீ தங்களாக்குகைக்காக நமக்குவி ஷமல்லாத காரியத்தை நாம் செய்யப்போமோவென்றருளிச்செய்ய ஸ்ரீயஃபதியான நீ உன்விஶ்லேஷியான வாஸநாக்கள் ஸ்ரீ கராகைக்காகவன்றோ ஸம்ஸாரன்பக்கலிலே யாவகளுப்சென்றது, அப்படியே இத்தைபுஞ்செய்யவே ணுமென்கிறாரென்றுகருத்து. வ்யாக்யானத்தில் ஸங்கதாயமருளிச்செய்கிறார் (ஆதலாலித்யாதியால்) உஜ்ஜீவநார்த்தமாகவென்கிறதற்கு நடவாயென்கிறத்தோடே ஸம்பம். நண்ணிபுன்னையென்கிறதற்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (ஸௌகாஸ்ரீத்யாதியால்) ‘யதாதம்ஸம்ஸாரஷவ்யம் பரவெத்ருஸ்லாகாவிக்ஷமிதேதத் ஸஸ்யஸௌயம்ஸகாரதம் தயாகாஸாரதபாம்ஸயி’ என்கிறஸ்லோகமிங்கே யஙிவ்ருதம். கண்டுவென்கிறதற் குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உன்னழகையுமித்யாதியால்) ॥உ॥

✳ மூன்றும்பாட்டு. ✳

ஞாலத்தூடேநடந்தென்கிறவிடத்திலே யதார்த்திஸாரத்தையருளிச்செய்கிறார் (வாஸனையுமித்யாதியால்)

ஸ—தாகச் சொன்னது ஆஶ்ரிதர்பேறே தன்பேறாகயிருக்குமென்று வ்யஞ்ஜிப்பிக்கைக்காக. மாய- ஆஶ்சர்ய சேஷ்டிதனை, ஸ்ரீயஃபதியானவன் க்ஷத்ரியாய் வந்தபடியும்வடிவழகைக்காட்டி யஸாரனை வஶீகரித்தபடி யும் “கொள்வனுன் மாவலிமூவடி” யென்றுபோலே சில முக்ஷஜ்ஞதங்களைப் பண்ணினபடியும் சிற்றடியைக் காட்டிப் பெரியவடியாலே யளந்துகொண்டபடியும் முதலான வாஶ்சர்யங்களை யுடையவனை யென்றபடி. அம்மானே- ஸ்வாமிந் “தேவாநாம் தாநவாநாஞ்ச ஸாமாந்யமதிதைவதம்” மென்கிறபடியேபொதுவான ஸ்வாமி த்வத்தாலேயிறே யஸாரனையும் ஸம்ரக்ஷிக்கவேண்டித்தென்றுகருத்து. உன்னை- நிரதிசயஸௌந்தர்யமுடை யான உன்னை, நண்ணி- கிட்டி, ஸௌகாஸ்திக்ஷமிதங்களான வென்னுடைய அவயவங்களாலே ஸ்பர்சித்தெ ன்றபடி. கண்டு- கண்ணாலே ஸாக்ஷாத்கரித்து, உகந்து- மிகவும் ஹர்ஷியாதனுப், நான்கூத்தாட-நான் ஆரம்பம்பண்ணும்படி, ஐஶ்வர்யனைப்போலே உன்பக்கலொன்றைவாங்குகைக்காக வாதல் ஶேஷாவ்ருத்தியைப்போ லே என்னுதென்றபிமானித்து வைத்ததொன்றை யுனக்குக்கொடுக்கைக்காகவாதல் நீ வரவேணுமென்கிறேனா ல்வேன் “ஸம்ஸ்ருஷ்டாஶேஷ்யமௌவிந வனதனுஃவாஸம்யந” என்கிறபடியே நான் ஸம்ஸாரமேகக்கண்ட நாஶவிக்கைக்காக ப்ரார்த்திக்கிறேன். எனக்கு வேணுமென்றிருப்பாரோடும் என்னுதான வஸ்துவைக்கொ டுக்கிறேனென் றிருப்பாரோடுமோ நீ கலப்பது. உன்னைக்கண்டநாஶவிக்கையே ப்ரயோஜநமாயிருப்பார் க்குன்னைக் காட்டலாகாதே,வென்று கருத்து. நண்ணி- கிட்டி, நானிருக்கிறவிடத்திலே வந்தென்றபடி. ஒரு நாள்- ஒருநாளாகிலும், பலநாள் செய்யச் சொல்லுகிறேனே. முன்புசெய்ததை பின்னையுமொருநாள் செய் தலாகாதே. மண்ணும் விண்ணும் மகிழநடப்பது ஸம்ஸாரன் முன்பேபோ- ஸம்ஸாரப்ரயோஜனர்முன்னே நடந்தலாகாதோவென்று கருத்து. ஞாலத்தூடே- ஸம்ஸ்ருஷ்டத்திலே, ஊடு- மத்யம், ஸம்ஸ்ருஷ்டியிலேயென்றபடி. நடவாய்- வெயிலிலு வாடித்திலே நடந்தாப்போலே நடந்துவரவேணும். ॥உ॥

ஞாலத்தூடே - ஸம்ஸ்ருஷ்டத்திலே, ஜநங்களில்லாத வொருமூலையிலேயன்றிக்கே ஸகலருங்காணும்படி யாக மத்யஸம்ஸ்ருஷ்டியிலே யென்றபடி, ஸஹாஸ்ரநம் பண்ணுவார்முன்னே நடக்கக்கடவதையை- காடாவிஷ்க மாகத் தான்வந்தாலும் கூடாகூடியாதார் முன்னே நடந்தாய் இதென்ன ஸௌஶீல்யமென்று கருத்து. நடந்தும்- “ஆர த்ஸ்ரீபயளாஸ, ஸஹஸ்ராஶாயிஸீஸ்வராஸஜௌநாஸஹாவயஃ, விஷ்ணுஸ்ஸாக்ஷாத்வெண ஸ ஸாரஸஸ்யாதவெ” என்கிறபடியே ஸவிலாஸமாக ஸஞ்சாரங்களைப்பண்ணியருளியும், நடந்துமென்கிற விட த்தில் மகாரம் ஸம்யியிலே ஸஸ்வமா யிருக்கிறது. நின்றும் “ஸவஸ்ஸ்யவதிஷ்டும் ஶஶயநம் ஸஜ்ஜித ✈

மூ— பெருமானே* கிளர்ந்தபிரமன்சிவனிந்திரன்விண்ணவர்சூழ* விளங்கவொருநாள் காணவாராய் விண்மீதே* ॥ சு ॥

விண்மீதிருப்பாய்மலைமேனிற்பாய் கடற்சேர்ப்பாய்* மண்மீதுழல்வாயிவற்றுளெங்கு மறைந்துறைவாய்*

ஆ—பக்கலுள்ளவாவங்களை நிஶ்ஶேஷமாக நீயே நிரஸித்தருளி ஜீவநாயமாக ஏழ்ந்தருளுகிறபடியையக் கண்டு ப்ரஹ்மாதிகளான ஸகலதேவதைகளும் ப்ரீதியோடு ஸேவிக்கும்படி ஸர்வேஶ்வரனான உன்னுடைய திருமேனியில் தேஜஸ்ஸாலே ஸகலலோகங்களும் விளங்கும்படி ஸ்ரீமஹாவராஹமாய் வந்து தோற்றினாப்போலே ஒருநாள்காணவாராய்? விண்மீதேயென்று கூப்பிடுகிறார். ॥ சு ॥

(விண்மீது) திருநாட்டிலும் திருமலையிலும் திருப்பாற்கடலிலும் மற்றும் ஸந்நிதியிலுள்ள திருநகரிகளிலும்

இ— ஸம்ஶ்லேஷ ஸம்ருத்தி. எங்ஙனேயென்னில்? ப்ரத்யக்ஷங்கள் ப்ரஸங்கங்களாயிருக்கஇன்னந்தளர் வேணோவென்று நீர்கூப்பிடப்போமோவென்ன? அதுக்குத்தாம் அருளிச்செய்கிறாரென்றுகருத்து. கிளர்ந்த வென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஜீவநாதாதியால்) விளங்கவென்கிறவிடத்தில் சுபாஶ்ரயத்தைப்பருளிச்செய்கிறார் (பாவநாதியால்) இன்னதுவிளங்கவென்று விஶேஷியாதே விளங்கவென்று ஸாமாந்யஞ்சொன்னதுக்கு தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸகலாதியால்), காரியவாக்யத்திலபிப்ராயமருளிச்செய்கிறார் (ஸ்ரீமஹாவராஹாதியால்). ॥ சு ॥

### ✳ஐந்தாம்பாட்டு.✳

மண்மீதுழல்வாயென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸந்நிதியிலிதாதியால்) இவற்றுளென்கிற

ம—துனவென்றபடி. ஆஶ்ரிதர்க்கு விரோதிநிவர்த்தகங்களான திருவடிகளே உனக்கும் விரோதிநிவர்த்தகங்களாய்த்தென்றுகருத்து. பெருமானே - ஸ்வாமீ? ஶேஷிவஸ்துவான உன்னையவஸரன்பக்கல் நின்றும் ரக்ஷித்த உனக்கு ஶேஷவஸ்துவான வென்னை ப்ரதிபந்தகங்கள் நின்றும் ரக்ஷிக்கை அறிமையோவென்றுகருத்து. கிளர்ந்த - ஜ்ரும்பிதனாய், யென்னைரக்ஷிக்கைக்காக ஸகாரனாய வருகிறவுன்னைக் கண்டு ப்ரஹர்ஷ ஸம்ப்ரமனாய வென்றபடி. இது ப்ரஹ்மாதிகளுக்கெல்லாம் விஶேஷணம். பிரமன் - ப்ரஹ்மாவும், சிவன் - ருத்ர னும், இந்திரன் - இந்த்ரனும், விண்ணவர் மற்றுமுள்ள தேவதைகளும், சூழ - உன்னைச்சுற்றிலும் ஸேவிக்க, விளங்க - உன்னுடைய தேஜஸ்ஸாலே ஸர்வலோகங்களும் விளங்கும்படி, விண்மீதே - ஆகாஶத்தின்மேலே, விண் - ஆகாஶம், மீதென்றுவரிஶப்தவாச்யம். ஆகாஶத்தினுடைய ஸமீபத்திலே என்றபடி. நா னிருந்த ஸந்நிதியிலே வரச்சொல்லுகிறேனோ ஆகாஶத்திலேயத்தனை முயர்ந்த ப்ரதேஶத்திலே வரவமையுமென்றுகருத்து. ஒருநாள் - "ஶதவர்ஷஸஹஸ்ராணி ஶதவர்ஷஶதாநி ச" என்னுமாப்போலே பதினோராயிர யாண்டு வரச்சொல்லுகிறேனோ. ஒருநாள் வந்தாலமையுமென்றுகருத்து. காணவாராய் - நான்கண்ணாலே காணும்படி வரவேணும், என்தலையிலே திருவடிகளை வைத்தருளவேணுமென்கிறேனோ என்கண்ணுக்குத் தோற்றும்படி வரவேணுமென்று கருத்து. ॥ சு ॥

விண்மீது - பரமபதத்தின் மேலே, இருப்பாய் - திருநாட்டிலுள்ளார்க்குமோஹநுக்கொண்டிருக்கிற வனே? ஸர்வேஶ்வரனே: இது ப்ரகாரதாத்பர்யம். பரமபதத்திலிருக்குமாப்போலே பரிவாரமுக்கொண்டே திருமலைமுதலான விடங்களிலுமிருக்கிறாயென்று வ்யஞ்ஜிப்பிக்கைக்காகச்சொன்னபடி. மலைமேல்நிற்பாய் - திரு நாட்டிலுள்ளார்க்கும் ஸந்நிதியிலுள்ளார்க்கும் ஸேவிக்கலாம்படி திருமலைமேலேநின்றருளுகிறவனே? கடல் - க்ஷீரஸமுத்ரத்திலே, சேர்ப்பாய் - ப்ரஹ்மாதிகளுக்காஶ்ரயணீயனாம்படி கண்வளர்ந்தருளுகிறவனே, சேருகை - ஶயனிக்கை, மண்மீது - ஸந்நிதியின்மேலே, திருவயோத்யை ஸ்ரீமதுரை முதலான திவ்யதேஶங் களிலேயென்றபடி. உழல்வாய் - ஸஞ்சரிக்கிறவனே, உழலுகை - ஸஞ்சரிக்கை. உன்னழகாலேஎல்லாரையும்வ ஶீகரிக்கைக்காக ராமக்ருஷ்ணாதிரூபேண ஸஞ்சரிக்கிறவனே, என்றபடி. இவற்றுள் - இந்த ஸ்தாவரஜங்கமாத்மக வஸ்துக்களில், எங்கும் - எல்லாத்திலும், மறைந்து ஒருவர்க்குந்தெரியாதபடி. உறைவாய் - வஸியாநிற்கிறவனே

மூ—எண்மீதியன்றபுறவண்டத்தா யெனதாவி* யுண்மீதாடி யுருக்காட்டாதேயொளிப்பாயோ* ॥௯॥
பாயோரடிவைத்ததன்கீழ்ப்பரவைநிலமெல்லாந்* தாயோரடியாலெல்லாவுலகுந்தடவந்த* மாயோனுன்னைக்காண்பான்வருந்தியெனைநாளுந்* தீயோடுடன்சேர்மெழுகா யுலகிற்றிரிவேனோ* ॥கூ॥

ஆ—இவற்றிலும் ஸம்ஸாரத்திற்காளான ப்ரஹ்மாதிகளிலும் ஸர்வஸ்யமான ஸம்ஸாரங்களிலுமுள்ளும் என்னுடைய வுள்ளும் எங்கும் ஸ்ரீகாமயாக ஸந்நிஹிதனாயிருந்துவைத்து எனக்கு ஒருத்தனுக்கு உன்திருவடியைக்காட்டாதொளிக்கவோபார்த்தருளிற்றென்கிறார்.

(பாயோரடிவைத்து) என்னை யுன்றிருவடிகளிலேசேர்க்கவேணுமென்று லோகவிக்ராந்தவ்யாஜத்தாலே விலையில்லாதொரு ரத்நங்கெடுத்துத்தேடுவாரைப்போலே பெரியவருத்தத்தோடே யுன்திருவடியாலே என்னைத்தேடிக்கொண்டுதிரிந்தவுன்னை நான்காணவேணுமென்றாசைப்பட்டு "எங்குற்றாயெம்பெருமான்" என்று வருந்தித்தேடிக்காணப்பெறாதே லோகமெல்லாம் தீயோடுடன்சேர்மெழுகுபோலே உருகிநின்றுயிவ்வுலகத்திலே

இ—த்துக்கு இவற்றிலுமென்று ப்ரதிவசனமிட்டு அதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸம்ஸாரத்திற்கதி யாலே) எண்மீதியன்ற புறவண்டத்தாயென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸர்வஸ்ய மிக்கதியால்) எனதாவியுண்மீதாடியென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னுடையவுள்ளுமிதரர் கீழால்) உருக்காட்டாதேயொளிப்பாயோவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (எனக்கிதரர்கீழால்) "ஸாஞ்ஜ்யோதிர பாவஸம்வேத்ய" என்கிறபடியே ஸேஷர்க்கு ப்ராப்யனாய்க்கொண்டு பரமபதத்திலேயிருக்கிற நமக்கந்தராத்மதையிட்டு வரப்போமோவென்ன? பரமபதந்தொடங்கி யெங்கும்வஸிக்கிற நீ எனக்குன்னைக்காட்டாதிருக்கை யாதுமேவென்கிறாரென்று ஸங்கதிஸந்நிவேசம். ॥௯॥

* ஆரும்பாட்டு. *

பாஸுரத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னையிதரர்கீழிருந்தவுன்னையென்னுமளவாலே) வருத்தத்தோடேயென்றது - ப்ரயாஸத்தோடேயென்றபடி. இத்தாலிப்பாட்டுக்கு ஸங்கதியும்ஸந்நிவேசம். ஸர்வஸம்பன்னரல்லவோ? நாமெங்கும்ஸந்நிஹிதராயிருந்தோமேயாகிலும் நம்மைக்காண்கைக்கு நீர ஸாதநரோவே ன்றவனுக்கவிஷயமாகவெண்ணி நீயென்னைத்தேடித்திரியாநிற்க நான் ஸாதநனென்னக்கூடுமோ வென்கி யால) தாத்பர்யவாக்யத்தி லக்ஷணவிஸேஷத்தைபருளிச்செய்கிறார் (காணவேணுமிதரர்கீழ் காணப்பெறாதேயென்று) எனைநாளுமென்

ப—எண்மீது-ஸங்கல்பத்துக்குமேலே, இயன்றவத்யந்தநின்றதான, ஸங்கல்பாதீதமானவென்றபடி புறவண்டத்தாய்-ஸம்போதி. எனது - ஸ்வீயமான, ஆவியுள் - ஆத்மாவுக்குள்ளே, ஸ்வரூபத்திலேயென்றபடி. ஆடி - நடையாடி, வஸித்தென்றபடி. உரு, ரூபத்தை, உன்னுடைய திவ்யரூபத்தையென்றபடி. மீது - மிசவும், தே - என்கண்ணுக்குக்காட்டாதே, ஒளிப்பாயோ, மறைக்கக்கடவையோ. காட்டா

ஓரடி - ஒருதிருவடியை, பாய்வைத்து - பரப்பிவைத்து, பாயென்றது வ்யாபகம். ஒருதிருவடியை ஸகல பூமிகளையும் வ்யாப்தமாகும்படி விஸ்ருதமாக ஸமுத்திரத்திலே வைத்தென்றபடி. அதன் கீழ் - அந்த திருவடிகளின்கீழ், அந்தத்திருவடிகளுக்குள்ளே யடங்கும்படி யென்கை. பரவை நிலமெல்லாம் - ஸமுத்ரம், ஸமுத்ரத்தோடே கூடினஸமுத்ரநிலமெல்லாம். பரவை - ஸமுத்ரம், ஸமுத்ராவாஸங்கள் தாய் - தாவி, அளந்தென்றபடி. ஓரடியால் - மற்றையடியாலே, எல்லாவுலகும் - ஸகலலோகங்களான வெல்லா லோகங்களையும், தடவந்த - கடாகத்திலேவிழுந்த ரத்நத்தை தேடுவார் காலாலேதடவுமாப்போலே என்னைத் தேடிக்கொண்டு தடவினவனென்றபடி. மாயோன் - ஆஸ்சர்யசேஷ்டிதனே? இப்படி யென்பக்க லுண்டான வ்யாமோஹத்தை யுடைய வாஸ்சர்யசேஷ்டிதனே யென்றபடி. ஸம்போதி. உன்னைக்காண்பான் - உன்னைக்காணவேணுமென்றிட்டென்றபடி. வருந்தி - ப்ரயாஸப்பட்டு, உன்னைக் காணப் பெறாமையாலே க்லேஸப்பட்டு. எனைநாளும் - ஸர்வகாலமும், இதுசகும்மெழுகா யென்கிறதோடே அந்வயம். தீயோடுடன் - அக்நியோடேகூட, தீ - அக்நி, சேர் - சேர்த்ததான, அக்நிஸம்ஸ்ருஷ்டமான வென்றபடி. மெழுகாய் - மெழுகினுடைய ஸ்வபாவத்தையுடையனென்றபடி, உலகில் - லோகத்திலே, ஹேயமான லீலாவிபூதியிலே யென்றபடி.

௯—ஆவிதிகைக்கவைவர் குமைக்குஞ் சிற்றின்பம்* பாவியேனைப் பலநீகாட்டிப் படுப்பாயோ* தாவிவையங் கொண்ட தடந்தாமரைகட்கே* கூவிக்கொள்ளுங்கால மின்னங்குறுகாதோ* ௯

ஆ—வானோமென்னில்? ஜ்ஞாநலாபநமொஹமாவாய் உர்வபஹார்மாயதுஷ்டமாய் அத்யுக்ரமாயிருக்கையாலே ஐவைஷயிகமாவம ஸ்வாராஷ்ட்ரமோகையாலே அந்தவிஷயங்களைக்காட்டி யுன்னையிழப்பித்தென்னைத்தரைப்படுத்தாதே லோகமெல்லாம் நிறையும்படிமலர்ந்து உன்திருவடிகளாகிற தாமரைத்தடாகத்திலே என்னைவாங்கியருளாயென்றபேக்ஷிக்க அப்போதேசெய்தருளாமையாலே அக்காலம்வந்தால் செய்கிறோமென்றுஆறக்கொண்டு அக்காலம் இக்காலமெல்லாம்முடிந்தாலும் வரக்கடவதன்றோவென்று கூப்பிடுகிறார்.

இ—செய்கிறார் (ஜ்ஞாநேத்யாதியால்) குமைக்குமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பூர்வேத்யாதியால்) சிற்றின்பமென்கிறவிடத்தில் விசேஷணத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அத்யுக்ரமாயென்று), இது உபலக்ஷணமென்கிறகருத்தாலே யருளிச்செய்கிறார் (அத்யுக்ரமென்று) இவ்விசேஷணங்களெல்லாம் ஹேதுகர்ப்பங்களென்றுநினைத்ததால் ஸ்வீகாரத்தைப்பருளிச்செய்கிறார் (வைஷயிகேத்யாதியால்) ஸ்வாராஷ்ட்ரமோகையாலேயென்கிறத்துக்கு தரைப்படுத்தாதேயென்கிறத்தோடே அந்வயம். வைஷயிகமாவ ஸ்வாராஷ்ட்ரமோகையாலே அத்தைக்கொடுக்கையே தரைப்படுத்துகையன்றோ வென்றுகருத்து. பலசிற்றின்பம்காட்டி என்றநுவதித்துத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அந்தவிஷயங்களைக்காட்டியென்று) படுப்பாயோவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உன்னையிழப்பித்தேத்யாதியால்) இழப்பித்தென்றது - உன்னைநானிழக்கும்படி பண்ணியென்றபடி. அத்யுக்ரமாயிருக்கிற விவரிந்தக்ஷணத்திலே என்னையுன்திருவடிகளிலே சேர்க்கவேணுமென்று சொல்லாதேகாலமின்னங்குறுகாதோவென்றுசிலகாலவிளம்பத்தை இசைந்துசொல்லுகை யஸம்பதமன்றோவென்ன உபதாிப்பிக்கிறார் (லோகமெல்லாமித்யாதி செய்கிறோமென்றுஆறக்கொண்டென்னுமளவாலே) என்றுஆறக்கொண்டென்றது - என்றெண்ணிஆறி உபேக்ஷித்தென்றபடி. இவ்வாக்யத்தில் லோகமெல்லாமித்யாதி தடாகத்திலேஎன்னுமளவாலே த்ருதீயபாதார்த்தமும் சொல்லித்தாய்த்து. வாங்கியருளாயென்றது - நீசேர்த்துக்கொள்ளவேணுமென்றபடி. சதுர்த்தபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அக்காலமித்யாதியால்) இக்காலமென்றது - ஶாஸ்த்ரஸம்வஸ்ரயாஸம

ப—ஆவி - ஆத்மாவானது, ப்ராணவாசிபான ஆவிஶப்தமிங்கே லக்ஷணயா ஆத்மாவைக் காட்டுகிறது: திகைக்க - ப்ரமிக்கும்படி. ஆராத்யவிஷயாஸக்தியாலே ஜ்ஞாநங்களெல்லாம் ஸாதங்களாம்படி. ஐவர் - ஐந்துபேர்கள், பஞ்சேந்த்ரியங்களென்றபடி. குமைக்கும் - பிடிக்கும்படியான, என்விஷயத்தைக் காட்டு என் விஷயத்தை காட்டென்று தனித்தனியே என்னைப் பீடிக்கும்படி பண்ணுகிறவையான வென்படி. ஒருவனையிழைப்பற்றி ஐந்து பதர்கள் ஹிம்ஸிக்குமாப்போலே யிவையும் ஹிம்ஸிக்கிறனவென்றுகருத்தாலே ஐவரென்று சேதநஸமாதிசேஷிக்குமாப்போலே நிஷேதிசித்தது. பல - பஹுக்களான, சிற்றின்பம் - சிறியஸாவங்களை, இன்பம் - ஸாவம், அத்யுங்களான விஷயஜந்யஸாவங்களை யென்றபடி. காட்டி - அஸ்துங்களைச்சொல்லுகைக்கு ஸாவங்களைக்காட்டுவாரைப்போலேகாட்டி, பாவியேனை - விஷயங்களோடு பொருந்தாத ஜந்மத்தைப்பெற்றுப் பின்னையுமந்தவிஷயங்களாகிற விஷபாநங்கள் நிவியங்களாய் வதிக்கிற தேசத்திலே யிருக்கும்படி வாவியானவென்னை, நீ - ரக்ஷகனானநீ, படுப்பாயோ - நசிப்பிப்பாயோ, உன்னை யறியாதே ஸம்ஸாநுப் போம்படி பண்ணப்பார்க்கிறாயோ வென்றபடி. இந்தவிஷய விஷயபாநங்களின் நடுவேஎன்னைவைத்தபோதேஇப்படிசெய்கிறது நிஸ்சயமன்றோவென்றுகாருத்துகருத்து. உமமை யுஜ்ஜீவிப்பிக்குங்காலம் வந்தவாறே யுஜ்ஜீவிப்பிக்கிறோமென்னச் சொல்லுகிறார்மேல். தாவி - "த்ரீணிபதாவிசக்ரமே" என்கிறபடியே விக்ரமணம்பண்ணி, வையம் - ப்ருதிவியை, கொண்ட - ஸ்வீகரித்ததான, தடம் - விசாலமான, நிரதிசயபோக்யமான என்றபடி. தாமரைகட்கே - தாமரைகளிலே, இதுபூர்வகாதிஶயோக்தி ஸாமாநாதிகரண்யம்போலேயிருக்கிற திருவடிகளிலேயென்றபடி. அங்கே இங்கே என்னுமாப்போலே தாமரைகட்கேயென்று ஸப்தமி. கூவிக்கொள்ளுங்காலம் - அடியேனை நீயழைத்துக்கொள்ளத் தக்ககாலம், கூவிக்கொள்ளுகை - அழைத்துக் கொள்ளுகை, திருவடிகளிலே யழைத்துக்கொள்ளுகையாவது - திருவடிகளிலே நிரந்தரகைங்கர்யமனுபவிக்கும்படியழைத்துக்கொள்ளுகை. இன்னம் - இத்தனைபாயிரங்காலம் போனபின்பும், குறுகாதோ - கிட்டிவாராதோ! குறுகுகை - கிட்டுகை

த்ர—தா—ஸாத்ம்யாதிஹ ஸ்தித்ர) அணிமேகவண்ணு - ஸாக்ஷாத்காரவிஷயமாகஸ்வரூபத்தையுடையவனுகையாலும், ஸ்ரீ ஸம்பந்தத்தாலே அநந்யார்ஹமாயெயிலே 'திருமாமகள்கேள்வா தேவா' என்றுசொல்லப்படுகிறநிரதிஶயஶ்ரீ ஸ்தம் ஸம்ருத்திக்கப்படுகிறது, (த்வாநாம்விஶ்வாஸதாநாத்) புணராநின்றமரமேழ் ஒன்றெய்தவொருவில்வலவாவோ— ஸப்தஸாலங்களைஷேதித்துக்காட்டி "விஶ்வஸநீயஸுகவி:" என்கிறபடியே ஸ்வாஶ்ரிதர்க்கு விஶ்வாஸத்தையு ண்டாக்குமவனுகையாலும், (ஸாமராஜ்யநாத்) இமையோர்களேத்தி யிறைஞ்சியினமினமாய் இமையோரதி பதியே - அயர்வறுமமரர்கள் திரள்திரளாகவந்து ஸ்தோத்ரம்பண்ணியடிமைசெய்ய அவர்களாஶ்ரயணத்துக்கு ஸ்ரீஸ்ரனுய் நிற்கையாலும், (திவ்யதேஶாவஸ்த்ர) நீலார்கண்டத்தம்மானுமித்யாதி - தேவதாஷ்யாதி விஶஸ்ரஷ்டு வெல்லாருமாஶ்ரயிக்கும்படி திவ்யமான திருமலையிலேநின்றருளுகையாலும், (ஸ்ராவ்யாஸ்ராவ்யத்வ யோராவிர்பாவதிஜநயோ:) வந்தாய்போலேவாராதாய் வாராதாய்போல்வருவானே - ஆஶ்ரிதர்க்கரியனைப் போலே ஸாத்யனுமாய் அநாஶ்ரிதர்க்கெளியனைப்போலேதுஸ்ஸாத்யனுமாயிருக்கையாலும், (ஸந்நிஹிதத்வ ஸமாத்) அகலகில்லேனிறையுமித்யாதி- ஸர்வர்க்குமாஶ்ரயணீயையாய் தன்னை யாஶ்ரயித்திருக்கிற பெரியபி ராட்டியாரோடு பிரிவில்லாதவனுமாய் வாத்ஸல்யஸ்வாமித்வ ஸௌஶீல்ய ஸௌலப்ய ஸர்வஜ்ஞத்வ ஸர்வஶக்தித்வ ஸத்ய ஸங்கல்பத்வ பரமகாருணிகத்வ க்ருதஜ்ஞத்வ ஸ்திரத்வபரிபூர்ணத்வ பரமோதாரத்வாதி கல்யாணகுணவி ஶிஷ்டனுமாகையாலே சகிஞநரான வெல்லாராலும் ப்ராப்யத்வனுகையாலும், ஸர்வதேஶங்களிலும் ஸாந்நிஹித்யவனை திருவேங்கடமுடையானை ஸர்வலோகஶரண்யனுக "உலகமுண்டபெருவாயா" என்கிறதஶகத்திலே ஆழ்வார் உபபாதித்தருளினுரென்கிருர். ॥ ௭௯ ॥

ஜகஸம்ஸாராபமித்யம்ஸ்யதி தத்ஸமஸ்தாயிநாம்யோஜநாஸக்தம்
கஷ்டக்ஷம்மேஸ்வஶுரிமெத்ருவிப்யதி தவிஜநம்ஸ்வாமித்வேஸ்யதக்ஷம் ।
யுக்த்யாதீநாம்நிஷ்டாநம்யடகவஶம்தமாஸக்திபாதம்ஶாணி
வெவ்யப்ருஸ்யுத்யுநஸக்தம்ப்ரபத்நஸாஹம்ஸாதஹஷதேஷஶரண்யம் ॥ ॥ ௮௦ ॥

இப்படி ஷஷ்டஶதகத்திலே பத்துதஶகங்களாலும் ப்ரதிபாதிதங்களான அர்த்தங்களைஸங்க்ரஹித்தருளுகிருர்.

ஆபத்ஸகாஷ்காரமாக ஸஹாயனுமாய், ஆஶ்ரிதரிருந்தவிடத்தில் தானேவந்துமேல்விழுமவனுய், விஸ்வங்களானவஸ்த்ரக்களை வடிப்பிக்குமவனுய், ஸ்வீயசரித்ரங்களாலே ஸர்வசித்தாகர்ஷகனுமாய், போக வாபிகவாயாஜநங்களோடே விவடிப்பிக்குமவனுய், ஆஶ்ரிதருடைய அஹங்காரமமகாராதிதோஷகனுமாய் விஶ்லேஷஸம்பத்திலு மாஶ்ரிதர்க்கு வ்யஸநாதிகளையுண்டாக்குமவனுய், ஆஶ்ரிதரைத் தன்னோடேவடிப்பி த்தஜநங்களிட்டவழக்காம்படியான விபூதித்வயத்தையுடையனுமாய், விஶ்லேஷத்துக்கஸஹனுமாய், ப்ர பதநத்துக்கு ஸாதநனுமான திருவேங்கடமுடையானை ஸர்வலோகஶரண்யனுக ஷஷ்டஶதகத்திலே ஶடகோபர் ஸ்தாபித்தருளினரென்கிருர். ॥ ௮௧ ॥

ஸ்ரீ த்ரமிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளீ ஷஷ்டஶதகாநுஸந்தாநம்.

ஆரும்பத்தில் பத்தாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

த்ரமிடோபநிஷத்ஸார:.

கநாத்யுஜ்ஜ்வலநந்த ஸாரஸகாரணா கருஜநித: ப்ரணைதாஶ்ரவார: ப்ரபதநவிபாகாஸக்ததித:
தத்ராவாயேஷ்டவஜ்ஞம் விரவிரஹித ஸர்வதவட நஸாரவக்லேஷதேஷ ஶாநிரஶாரணோபாதிஶரணம் ॥ ௫௫ ॥
ஶாஸ்த்ரஸாரஸாரமெவயம் ஸ்வயதேஹிம தம்மெவரியடகம் ரிபுத்ருக்ஷம்ஸ்வாரவிவடநம் ஸ்வாமித்வஸாரம்
நிதாநம்யுக்த்யாதே வஸ்தவஶமஸக்தி அயதாதநஸக்தமெதவட்யுஜவிகய ஶரண்யஸ்தித்தித்வ ॥ ௫௬ ॥

இஶ்லோகத்தில் கீழ்பத்துகளுக்கும் மேல்பத்துக்குமுள்ள ஸங்கதியை அருளிச்செய்கிருர் (கநாதீத்யாதி) ஸௌலப்ய ஸௌஶீல்ய ஶாஸ்த்ராஶ்ரயவிக்ரஹக ஸர்வஸௌஹார்த்ததிஶாயிகங்களாலே ஸர்வஸமாஶ்ரயணீயனுய் ஆஶ்ரிதஹிதனுய் நிரதிஶயாநந்த ஸ்வரூபியாயிருக்கிற பரமபுருஷனுடைய, காரணவிஶேஷமின் னதென்றறுதியிட வொண்ணுதையாலே நிர்ஹேதுகமென்னலாம்படி ஸ்வாபாவிகமான க்ருபையென் னும் காரணமடியாக அவன்தான் வேதநனை ப்ரபதநத்திலேமூட்டும்படிகளிருக்கும் படியை ஐந்தாம்பத் தில் அருளிச்செய்தார். பரமைகாந்தத்தின்படியே விவேகநிர்வேத விரக்த்யாதிகளையுண்டாக்கினபடி யென்கை. மேல் ஆரும்பத்தில்—நெடுங்காலமிழந்த நம்மைத்திருவுள்ளம்பற்றமகன்என்றுகொண்டு அவனது

மூ—வேதியாநிற்குமைவரால்வினையேனைமோதுவித்துன்றிருவடிச்*சாதியாவகைநீதடுத்தென்பெறுதியந்தோ*
வாதியாகி யகலிடம்படைத்துண்டுமிழ்ந்துகடந்திடந்திட்ட* சோதிநீண்முடியாய்தொண்டனேன்மதுசூத
௩॥
-னனே*
சூதுநானறியாவகை சுழற்றியோரைவரைக்காட்டியுன்னடிப்* போதுநானணுகாவகைசெய்துபோதிகண்

ஆ—காரணத்வேந ஸர்வேச்வரனாய் ஸ்வாதந்த்ர்யத்தாலே ஜகத்தைப் படைத்த ஸர்வசக்தியான
-ம்மைக ப்ரயோஜநனுமாயிருந்த வுனக்குப்ப்ரக்ருதியிலே என்னைவைத்தவநாதகாலமெல்லாம் ஸம்ஸார
-மான விஷயங்களாலும்பாதிப்பித்துன்திருவடிகளைச்சேராதபடி தடுத்தாலென்னப்ரயோஜநமுண்டென்கிறார்.॥
(சூது) இந்த்ரியவச்யமான வென்னுடைய பாபத்தைப்போக்கவல்லையுமாயென்னுடைய பாபத்தை
ப்போக்குகைக்காக கர்த்தவ்யாந்தரவனுமாயிருந்துவைத்துன்திருவடிகளைப்பெறுகைக்குபாய முன்திருவடிகளே

இ—மாகிறவர்த்தத்தையருளிச்செய்கிறார் (ஸர்வேச்வரனித்யாதியால்) தொண்டனேனித்யாதிக்குத்தாத்பர்யமரு
ளிச்செய்கிறார் (ஜ்ஞானித்யாதியால்) ப்ரயோஜநத்திலே யதார்த்தமிக்கிறவர்த்தத்தை யருளிச்செய்கி
றார் (ப்ரக்ருதியிலேயித்யாதியால்) வேதியாநிற்குமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அநவரத
த்யாதியால்) ஐவரால்மோதுவித்தென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இந்த்ரியங்களாலுமித்யாதியால்)
சாதியாவகையென்கிறதையுரைக்கிறார் (சேராதபடியென்று) என்பெறுதியென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செ
௩॥
ய்கிறார் (என்னவித்யாதியால்)

✳ நாலாம்பாட்டு. ✳

யாதுமித்யாதி குழவியித்யாதித்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இந்த்ரியேத்யாதியால்) வினையேனி
த்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னுடைய பாபத்தைப்போக்குகைக்காக கர்த்தவ்யாந்தரவனு
மிருந்துவைத்தென்று) சூதுநானறியாவகையென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உன்திருவடிகளை

மூ—ஆதியாகி - காரணபூதனாய், அகலிடம் - விஸ்தீர்ணையான ப்ருத்வியை, இடம் - ப்ருத்வி. படைத்து -
ஸ்ருஷ்டித்து, உண்டு - ப்ரளயத்திலே வயற்றிலேவைத்து, உமிழ்ந்து - பாநஸ்ருஷ்டிகாலே உத்காரணம்பண்ணி,
கடந்து - பிறர்ஸ்வஹஸ்தியாமே த்ரிவிக்ரமனாயளந்து, இடந்திட்ட - வராஹனாய்ஸ்தாபித்தவனான, இப்படிஸர்வ
விட கார்யமுக்தனாயிருக்கிற உனக்குஎன்னாலே ஸாதிக்கவேண்டியதொன்றுண்டோ என்றுகருத்து. சோதிநீ
ள்முடியாய் - ஜ்யோதிர்மயமாய்உத்துங்கமான கிரீடத்தையுடையவனான, முடியையுடையவன்முடியான். முடியா
யென்றுஸம்போதியில்ஸாம்பவமாயிருக்கும். ராஜாதிராஜனாயவாத்ஸல்யகுணனாயிருக்கிற உனக்குகீழைக்குஅந
வாப்தமாய் உதவாதவாத்ஸல்யமொன்றுண்டோ என்றுகருத்து. தொண்டனேன் மதுசூதனனே - பவனான
வென்னுடைய விரோதிநிரஸநனே, தொண்டன்- பவன், இஸ்வபத்தாலே தன்னைச்சொல்லிக்கொள்ளும்போது
தொண்டனேனென்றுஸம்பவமாயிருக்கும். உன்னுடைய ஜ்ஞானங்களையநுபவிக்கையிலேபவனானவெனக்கு
ஐயாஎன்கிற அஸுரனைப்போலே அநிஷ்டமாயிருந்தப்ரக்ருதிஸம்பந்தாதிகளைப்போக்கும்ஸ்வாமியனே என்றபடி.
வேதியாநிற்கும் - வேதியாநிற்கிற, வேயநம்பண்ணுகை - பாரத்தாலேஉருவும்படிபோடுகை. மிகவும்ஹிம்ஸியா
நிற்கிறஎன்றபடி. ஐவரால்-ஐந்துபேர்களாலே, பஞ்சேந்த்ரியங்களாலே என்றபடி. வினையேனை- உன்னுடையாக்ஷ
த்துக்குவிஷயமாகவொட்டாதபடியான பாபத்தையுடையவனானவென்னை, மோதுவித்து - ப்ரஹரிப்பித்து,
மோதுகை - ஸர்வமாகப்ரஹரிக்கை, உன்திருவடி- உன்னுடையதிருவடிகளை, சாதியாவகை- ஸாதியாதபடி.
ஞானடையாதபடி என்கை. தடுத்து - நிரோதித்து, நீஎன்பெறுதி - நீ என்னப்ரயோஜநம் பெறப் புகுகிறாய்,
ஒருப்ரயோஜநமுமில்லையென்றபடி. ஸ்ரீஸாதாழ்வானை நீ ஸத்ருப்ரதிஜ்ஞனைக்காகப் பிரித்துவைத்தாய், என்
னைவிச்லேஷிப்பித்து வைக்கிறதுக்கு என்னப்ரயோஜநமுண்டு, நான் படுகிற வ்யஸநத்தாலுனக்கு ஒருப்ர
யோஜந முண்டாகில் எனக்கிதுவே யமையுமென்று கருத்து. அந்தோ!- ஐயோ, ரக்ஷகனாயிருக்குமவனே
௩॥
பாயகனாவதே என்று சோகிக்கிறபடி.

யாதும்- ஸகலசேதநங்களும், யாவரும் - ஸகலசேதநரும், இன்றி- இல்லாமல், சேதநாசேதநங்க
ளிலே ஒன்றும் விடாமல்என்றபடி. ஙின்னகம்பால்- உன்னுள்ளுக்குள்ளே, அகம் - உள்ளு. பாலென்று ஸப்தமீ
விபக்த்யர்த்தம். உன்வயிற்றுக்குள்ளே யென்றபடி. ஒடுக்கி- ஒடுங்கப்பண்ணி, ஓராலின்- ஒருவடவ்ருக்ஷத்தினுடைய

...ளார்பெருமானேயோ* ॥ரு॥

விண்ணுளார்பெருமாற்கடிமைசெய்வாரையுஞ்செறுமைம்புலனிவை* மண்ணுளென்னைப்பெற்றாலென்செ

ஆ— நிராயிப்பித்த தன்னைக் கைவிடுவாரைப்போலே யிராநின்றாய், நீயென்னைக்கைவிட்டால் வேறெனக்கு ரக்ஷகருளரோ? ஆதலால் ஸம்ஸாரிகளுக்கஸாதியாயிருந்த திருநாட்டிலே அயர்வறுமமரர்கள் சூழவெழுந்தருளியிருந்த வுன்திருவடிகளிலே யடியேனைவாங்கியருளாயென்கிறார். ॥ரு॥

(விண்ணுளார்) திருநாட்டிலே அயர்வறுமமரர்களதிபதியாயிருந்த உன்திருவடிகளிலே யடிமைசெய்கிற வயர்வறுமமரர்களையுங்கூட ஸ்வவஸமாக்கி யுன்திருவடிகளையிழப்பிக்கவல்ல விந்த ஸப்தாதிவிஷயங்கள் தன்னிலமாவது பின்னை நீயுங்கைவிடுவது ஆனாலென்னை என்செய்யா இவைசெய்யும்வாரமெய சொல்லவுமல்ல இந்தவாமெய்யாலே கூப்பிடுகிற வென்னுடையசொற்களிலும் கண்ணும் ஷாஸஸ்ஸங்காஸமான வென்னுடைய ஹ்ருதயத்திலு முன்னைக்காணப்பெறுமையாலே யவஸமான வென்னுடைய அக்ஷராதிகரணங்களிலு

இ—உத்யாதியால்) நெகிழ்ப்பானொக்கின்றாய் என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (கைவிடுவாரை உத்யாதியால்) ஆர்மருந்தினியாகுவாரென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நீயென்னையித்யாதியால்) விண்ணுளார்பெருமானேயென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆதலாலித்யாதியால்) இத்தால் நீயென்னை உபேக்ஷிக்கப்பார்க்கிறாயென்று கீழ்ப்பாட்டிலேசொல்லி இப்பாட்டிலே இப்படிகைவிடாதே என்னையாஸ்ரிக்கவேணுமென்கிறாரென்று ஸங்கதிஸாதிதை. ॥ரு॥

## ✷ ஆறும்பாட்டு. ✷

விண்ணுளார்பெருமாற்கடிமைசெய்வாரையுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (திருநாட்டிலே உத்யாதியால்) செறுமைம்புலனிவையென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸ்வவஸமித்யாதியால்) விஷயங்களென்கிறதற்கு என்செய்யாயென்கிறத்தோடேயன்வயம். மண்ணுள் என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தன்னிலமாவதென்று) மற்றுநீயும்விட்டாலென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பின்னையித்யாதியால்) தன்னிலமென்றது - தங்கள் காரியங்களைத்தட்டில்லாமல் செய்யலாம்படியான ஸ்தலமென்றபடி. இவ்விடம் ப்ராக்ருதவிஷயங்களுக்குத் தன்னிலமாயிருக்க நீயுமென்னைக்கைவிட இப்படியானவிந்தவிஷயங்கள் என்னையென்னபாடுபடுத்தாவென்றுகருத்து. என்செய்யாஎன்கிறவிடத்தில் ஹ்ருதயமருளிச்செய்கிறார் (இவைசெய்யுமித்யாதியால்) பண்ணுளாய்கவிதன்னுளாய்என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இந்தவாமெய்யாலேகூப்பிடுகிறவித்யாதியால்) பத்தியினுள்ளாயென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (கண்ணும்ஷேத்யாதியால்) கண்ணுளாயித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உன்னைக்காணவித்யாதியால்) இப்வடிவு

ஸ—ஸாமாயரெல்லாரும்சூழ்ந்திருந்தாப்போலேஎன்னைச் சுற்றிலும் நிறுத்தின்றபடி. நெகிழ்ப்பானொக்கின்றாய் - நெகிழ்க்க விவக்ஷையுடையவனுக்கு ஸத்ருஸனாகா நிற்கிறாய், என்னை விஸ்லேஷிக்க விவக்ஷையுடையவனைப்போலே யிராநின்றாய் என்றபடி. இனி - ரக்ஷகனானநீ கைவிட்டபின்பு, மருந்தாகுவார் ஆர்?- இந்தவிஷயாஸக்தி ஸாமாந்யத்துக்கு நிவர்த்தகராகத்தக்கவர்களார், ஒருவருமில்லை என்றபடி. விண்ணுளார்பெருமானே - பரமபதவாஸிகளானநித்யஸூரிகளுக்குநிர்வாஹகனானவனே, ஓ என்று ஸோகாதிஸயத்தாலேஜீவனமாக வார்த்தநம்பண்ணுகிறபடி. “ஸாராஸாரவிவேகஜ்ஞா ஸாஸக்தித்ரு ஸாராஸாத ஸ்வஸமேஜநத்ய:” என்னுமாப்போலேதமக்குறவுமுறையாரான அயர்வறுமமரர்களையும் எம்பெருமானையும் நினைத்துத் தம்முடையவார்த்திஸயத்தாலே கூப்பிடுகிறார். ॥ரு॥

விண்ணுளார் பெருமாற்கு - பரமவ்யோமத்திலேயிருக்கிறவர்களுடைய ஸ்வாமியானஸர்வேஸ்வரனுக்கு, அடிமைசெய்வாரையும் - கைங்கர்யம் பண்ணுகிறவர்களையும், நித்யஸூரிகளையுமென்றபடி. செறும் - அதிக்ரமிக்குமவையான அபிபவிக்கத்தக்கவையான என்றபடி. செறுதல்- அதிக்ரமித்தல், பெரியதிருவடியையுங்கூட ஸம்ஸாரஸம்பந்தத்திலேஅவதரித்திருக்கும்போது ஸாத்த்விகனென்கிற வொருஸ்வரூபமாகிறவா ஸாரம்தப்பிப்போனவாறே உபேந்த்ரனையிருக்கிற ஸர்வேஸ்வரனையும் த்ருணீகரித்து வார்த்தை சொல்லப்பண்ணி வைத்ததிறே இவ்விஷயமென்றுகருத்து. ஐம்புலனிவை- இவைஐம்புலனென்றுமாறி அன்வயிப்பது. இந்தஸப்தாதிவிஷயங்களாகிறவை, புலமென்றுவிஷயங்களுக்குப்பேர், மண்ணுள் - ஸம்ஸ்ருதிக்குள்ளே, தங்களுக்குஅஸாதாரணமான

மூ— பெற்றால் மற்றுநீயும்விட்டால்* பண்ணுளாய் கவிதன்னுளாய்பத்தியினுள்ளாய்* பரமீசனேவந்தென்* கண்ணுளாய்நெஞ்சுளாய்சொல்லுளாயொன்றுசொல்லாயே* ॥௬॥

ஒன்றுசொல்லியொருத்தினிற்கிலாதவோரைவர்வன்கயவரை* யென்றுயான்வெல்கிற்பனுன்திருவருளி

ஆ— ஸர்வஜ்ஞனுமாய் ஸர்வஶக்தனுமாயிருந்த நீ என்னுடைய விஷயங்களெல்லாந்தீரும்படி என்னையுன்திருவடிகளிலே வாங்குகிறேனென்றுசொல்லுதல் நானுசையறும்படி வாங்கக்கடவதன்றென்று சொல்லுதலிரண்டத்தொன்று சொல்லாயென்றுகூப்பிடுகிறார். ॥௬॥

(ஒன்றுசொல்லி) இப்படி இத்தவிஷயங்களுமக்குவஶ்யமாகி இவற்றில் ப்ரவணமாகாதபடி உம்முடைய விஷயங்களை ஜயிக்கமாட்டீரோவென்னில்? ப்ரஹ்மருத்ரேந்த்ராதிகளான தேவர்களுங்கூட உன்னையொழிய இவற்றைக்கடக்கமாட்டிற்றிலர் ஸர்வஜ்ஞத்வஸர்வஶக்தித்வங்களையுமாய் உபாயத்தானுமாயிருக்கிற

இ— ஸ்ரீயஃபதியாக அருளிச்செய்கிறார் (ஸர்வஜ்ஞனுமாயென்று) பரமீசனேயென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸர்வஶக்தனுமாயிருந்தஎன்று) ஒன்றுசொல்லாயென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னுடையவிஷயங்களெல்லாந்தீராமல்) இத்தால் கீழ்ப்பாட்டிலே என்னை அங்கீகரிக்கவேணுமென்று ப்ரார்த்தித்தவர்இப்பாட்டிலே இரண்டத்தொன்றுசொல்லவேணுமென்கிறாரென்று ஸங்கதிஸூசிதம். ॥௭॥

*ஏழாம்பாட்டு.*

இந்தவிஷயங்களினின்றும் என்னையிப்போதே உன்திருவடிகளிலே வாங்கியருளவேணுமென்று ப்ரார்த்தியாநின்ற இவரின்னஞ்சிலகால விஷயங்களோடிருக்கையை இசைந்தார்சொல்லுமாப்போலே உன்னுடையக்ருபையில்லையாகில் இவ்விஷயங்களை நானென்றைக்குஜயிக்கப்புகுகிறேன் என்றுசொல்லுகை யவனாவிதமன்றோவென்ன இதுக்குத்தாத்பர்யஞ்சொல்லுகைக்காக வகதாரிப்பிக்கிறார் (இப்படியித்யாதியால்) தேவாஸுராதி குன்றம்வைத்தஎத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ப்ரஹ்மேத்யாதியால்) ஒன்றுசொல்லி ஒருத்தினில்நிற்கிலாதஎன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸர்வஜ்ஞேத்யாதியால்) வன்

ப— இந்தப்ராக்ருத லோகத்திலே என்றபடி. என்னை - விஷயங்களைஜயிக்கமாட்டாதஅஸமர்த்தனானவென்னை, பெற்றால் - தங்களுக்குபோக்யமாக வடைந்தால், மற்று - இதுதவிர, இப்படிமண்ணுக்குள்ளே என்னைப் பெற்றவித்தாய்மன்றிக்கே என்றபடி. நீயும்விட்டால் - ரக்ஷகனான நீயும்கைவிட்டால் - என்செய்யா - என்ன வீபவைப் பண்ணாது, ஸர்வாபீஷ்டங்களையும் பண்ணுமென்றபடி. பண்ணுளாய் - பண்ணுக்குள்ளே யிருக்கிறவனே, பண் - ராகம், பண்ணுக்குள்ளே யிருக்குமவன் பண்ணுளான். பண்ணுளாயென்று ஸம்போதனம், அதினால் கூப்பிடுகிற வென்னுடைய வார்த்தாஸாரத்துக்குள்ளே இருக்கிறவனே என்றபடி. என்னுடைய ஸாரத்துக்குள்ளே யிருக்கிறவனே? கேளாதவனல்லையே என்றுகருத்து. கவிதன்னுளாய்- கவிதைக்குள்ளே இருக்கிறவனே, அந்தஸாரத்துக்காப்ருய மானவென்னுடைய உக்திகளைக்கேளாதாயல்லைஎன்றுகருத்து. பத்தியினுள்ளாய் - என்னுடைய பக்திக்குள்ளே இருக்கிறவனே? எனக்குன்பக்கலுள்ள ப்ராவண்யத்தையறியாதாயல்லையேஎன்றுகருத்து. என்கண்ணுளாய் - என்னுடைய சக்ஷுரிந்த்ரியத்துக்குள்ளே யிருக்கிறவனே, நெஞ்சுளாய் - சித்தத்துக்குள்ளே யிருக்கிறவனே, சொல்லுளாய் - சொல்லுக்குள்ளே யிருக்கிறவனே, வாகிந்த்ரியத்துக்குள்ளே யிருக்கிறவனே என்றபடி. உன்னைக்காணப்பெறாதே ஸங்கடங்களான வென்னுடைய சக்ஷுராதி கரணங்களை யறியாதாயல்லையே என்றுகருத்து. வந்து - எனக்காக காலடிநடந்து வந்து, ஒன்றுசொல்லாய் - ஒன்றுசொல்லவேணும், என்னையுன்திருவடிகளிலே சேர்க்கையையாதல் சேராமையையாதல் இவற்றிலேதேனுமொன்றுசொல்லவேணும். ॥௬॥

அன்று - அந்தக்ஷீராப்திமதனஸமயத்திலே, தேவர் - தேவதைகளும், அசுரர் - அஸுரர்களும், வாங்க - வாங்கினவாறே, அவர்கள் கடையமாட்டாதேகைவாங்கினவாறேஎன்றபடி. இதுக்குவைத்த என்கிறத்தோடே அலைகடல் - அலைகிறகடலிலே, அரவம் - ஸர்ப்பத்தை, வாஸுகியைஎன்றபடி. அளாவி - ஸ்பர்சிக்கப்பண்ணி, சுற்றிஎன்றபடி. ஓர்குன்றம் - ஒரு பர்வதத்தை, மந்தரபர்வதத்தை என்றபடி. வைத்த - வைத்தவனை, அவர்களுக்குக்கடையலாம்படி திருத்தினவனை என்றபடி, எந்தாய் - ஸ்வாமி, கொடியேன் - க்ரூரனான, உன்னை யநுபவிக்க வொட்டாதபடி அதிக்ரூரமான பாபத்தைப்பண்ணினநான், பருகு - பருகும்படி, பருகுகை - பானம்பண்ணுகை, நன்றாக வநுபவிக்கும்படிஎன்றபடி. இன் - அதிபோக்யமான, அமுதே

மூ— நிலமுதலினியெவ்வுலகுக்கு நிற்பனசெல்வனவெனப்பொருள்* பலமுதல்படைத்தாயென கண்ணாவெ ன்பரஞ்சுடரே* ॥௯॥

என்பரஞ்சுடரேயென்றுன்னையலற்றியுன்னிணைத்தாமரைகட்* கன்புருகிநிற்குமது நிற்கச்சுமடுதந்தாய்*

— — — —

ஆ— ஸர்வஜ்ஞனாய ஸ்ருஷ்டிகர்த்தாவாய ஸர்வேச்வரனான ஸம்ஹாரம் பண்ணுமவனே ஸாதநமான இந்த்ரியங்களினுடைய பலத்தை ஸமூலகாஷம் கெடுக்கையாகிற வென்னுடைய அபிமத த்தைச்செய்தருளவேணுமென்கிறார். ॥௯॥

(என்பரஞ்சுடரே) ஆஸ்ரிதருடையவபேக்ஷிதத்தை முடிப்பானொருவனுமாய் முடிக்கவல்லானொருவ னுமாயிருக்கச்செய்தே உன்னுடைய ஸௌந்தர்யாதிகுணங்களாலே அநவரதம் நிரதிசயப்ரீதியாலே ப்ரீதியுக்த னாய்க்கொண்டு என்பரஞ்சுடரே யென்றுன்னையலற்றி உன்திருவடிகளிலுள்ள ப்ரேமாதிசயத்தாலே நீராயு ருகிநிற்கையாகிற வென்னுடைய ஸ்வபாவத்தையொழிய விஷயாநுபவோபகரணமான ப்ரக்ருதியை

இ— மருளிச்செய்கிறார் (ஸௌசீல்யாதிகளால) பரஞ்சுடரென்கிறதற்குத் தாத்பர்யமருளிசசெய்கிறார் (ப்ரண தேத்யாதியால) நிலமுதலந்தீவினை யென்கிறதற்குக் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸாதநேத்யாதியால்) கொடு வன்குழியினில்வீழ்க்குமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அதிகோரேத்யாதியால்) ஸ்ருஷ்டிக்கு ஸம்ஹிதகோர ஸம்ஸாரஸாகர பதித்விஷயம். ஐவராலவலமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செ ய்கிறார் (இந்த்ரியேத்யாதியால்) முதல்கெடுக்கும்வரமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸமூலகா ஷேத்யாதியால்) இத்தால் கீழ்ப்பாட்டில் அநிஷ்டநிவ்ருத்தீஷ்டப்ராப்திகளிரண்டையும் ப்ரார்த்தித்தவ ரிவ்விந்த்ரி யங்களின்றும் பயாதிசயத்தாலே பின்னையுமநிஷ்டநிவ்ருத்தியை விசேஷித்து ப்ரார்த்திக்கிறாரிப்பாட்டி லென்று ஸங்கதிஸூசிதை. ॥௯॥

## ✻ பத்தாம்பாட்டு. ✻

தாத்பர்யவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆஸ்ரிதருடையவித்யாதியால்) இருக்கச்செய்தே எ ன்கிறதற்குத் தந்தாயென்கிறத்தோடே அந்வயம். அலற்றியென்கிறவிடத்திலே ப்ரீத்யாதிசயிக்கிற ப்ரகாரத்தை யருளிச்செய்கிறார் (உன்னுடையஸௌந்தர்யேத்யாதியால்) அன்புருகிநிற்குமது நிற்கவென்கிறதற்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (ப்ரேமாதிசயத்தாலேஇத்யாதியால்) சுமடுதந்தாயென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார்

---

ஸாதநங்களான பாவங்களாகிற, கொடுவன் குழியினில்- கோரமாய் ப்ரபலமான நரகத்திலே, வீழ்க்கும்- வி ழப்பண்ணுமவையான, ஐவரை – இந்த்ரியங்களை, வலம்- பலத்தை, கெடுக்கும்வரமே – நசிப்பிக்கையா கிறவென்னுடையவபிமதத்தையே, வரம் - அபிமதம், அவதாரணத்தாலே இந்த அநிஷ்டநிவ்ருத்தியே ப்ரதாநமென்று தோன்றுகிறது. தந்தருள்கண்டாய் – நீதந்தருளவேணும் கிடாய், கண்டாயென்கிற அவ்யயம் இந்த வாக்யத்துக்கு அவஸ்யகர்த்தவ்ய த்யோதநார்த்தமான வசநமாகி. ॥௯॥

முன் – ப்ராக்காலத்திலே, அநாதிஸம்பந்தத்தால்வந்தஅஜ்ஞானகாலத்திலேஎன்றபடி. பரவை-ஸமுத்ர த்தை, கடைந்து – உத்யமம்பண்ணி, அமுதங்கொண்ட – அம்ருதத்தை ஸ்வீகரித்தவனே. மூர்த்தி - ஸ்வாமீ, அந்த அம்ருதத்தைக் கொடுத்து தேவர்களுக்குபகரித்த ஸ்வாமித்வத்தை யுடையவனே என்றபடி. ஓ என்கிறது ற்கு எற்றுகின்றனர் என்கிறத்தோடேஅந்வயம், என்பரஞ்சுடரே - என்னுடைய பரஞ்ஜ்யோதிஸ்ஸே, எனக்கு போக்யனாய் நிரதிசயஉஜ்ஜ்வலனானவனே என்றபடி. என்றுன்னையலற்றி - இப்படி யுன்னைகுறித்து ப்ரலபி த்து, உன் - உன்னுடைய, இணைத்தாமரைகட்கு- அநுரூபமான திருவடித்தாமரைகளுக்காக, இணை- அநுரூபம், தா மரையென்று ரூபகாதிசயோக்தி, பரஸ்பரமுள்ளசேர்த்தியாலேபத்மஸௌந்தர்யங்களான திருவடிகளைஎன் றபடி, அன்பு - ப்ரேமத்தாலே, அந்தர்க்ருதீபாகம் பக்ஷம். உருகிநிற்குமதுநிற்க - த்ரவீபூதனாயிருக்கை யாகிற வந்த பரமானந்தகார்யம்கிடக்க, தாத்ருசஸ்வபாவகாரணமே யிவ்வாத்மாவுக்கு உசிதமாயிருக்கச்செ ய்தே என்றபடி. சுமடுதந்தாய் - சும்மாட்டைத்தந்தாய், சுமடு என்று பாரம் வஹிக்கைக்காகத் தலையிலே கட் டுகிற சும்மாடு. விஷயாநுபவோபகரணமான தேஹஸரீரத்தைத் தந்தாயென்றபடி. ஐவர் - ஐந்துபே ர்கள், இந்த்ரியங்களென்றபடி. ஒருவரிருவரானால் நான்பொறுத்திரேனோ வென்று கருத்து. வன் - ப்ர பலங்களான, சுமக்கப் போகாதவையான வென்றபடி. சுமக்கலாம்படியான சுமைகளை யெடுத்திறுகுவார்

மூ—கண்டுபாடவல்லார்வினைபோங்கங்குலும்பகலே* ॥௧௧॥

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஆ—ஸம்ஸாரஹேதுபூதமான பாபம்நிஶ்ஶேஷமாகப்போமென்கிறார். ॥௧௧॥

திருக்குருகைப்பிரான்பிள்ளான்திருவடிகளேசரணம்.

இ— (அர்த்தம் அறிந்து பாடுகையால்) வினைபோங்கங்குலும்பகலென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ப்ரக்ருதத்வாதியால்) ॥௧௧॥

ஈ—த்திலே, இப்பத்தும்- இந்தபத்துப்பாட்டுகளையும், கண்டுபாடவல்லார்- அர்த்தங்களைத்தெளிந்து பாடும்ப ண்ணத்தக்கவர்களுக்கு, கங்குலுமென்கிறவிடத்தில் அவ்யயம் ஸாகாங்க்ஷயென ஸமுச்சயார்த்தமாதலால் இரண்டிலுமன்வயிப்பது. கங்குலும்பகலும் – ராத்ரியிலும் திவஸத்திலும், கங்குல் - ராத்ரி, ஸமுச்சயார்த்தங்களானவென்றபடி. வினை - ப்ரக்ருதிஸம்பந்த ஹேதுபூதங்களான பாபங்கள், போம் - நிஶ்ஶேஷமாகப்போய்விடும். ॥௧௧॥

ஜ்ஞாநவைராக்யாநுஷ்டாநஶேவதயே ஶ்ரீவேதாந்தாசார்யாய நம:.

ஶ்ரீ:.

த்ரமிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி:.

(உண்ணிலாவிய.)

நிஸ்ஸங்க்யாஶ்சர்யயோகாத் ஸ்வதுரஸதயா ஜகத்காரணத்வாத்
ந்யக்ரோதஶாயாஸக்தஹேதோ: த்ரிதஶபதிதயா யாஜ்ஞஸந்நிதாநாத் ।
பீயூஷஸ்யார்ப்பணாத்தேர்த்தேவ்ய ஸ்வபதிதயா லோகஸம்ரக்ஷணாத்தே:
ஶரண்யஶங்காம் ஸஹதே கதநு ஸம்பந்தஹா(ஹா)ர்திகஸ்ஸ: ॥௮௧॥

(நிஸ்ஸங்க்யாஶ்சர்யயோகாத்) எண்ணிலாப்பெருமாயனே - எண்ணிமுடியாத ஆஶ்சர்யங்களையுடையவ னாகையாலும், (ஸ்வதுரஸதயா) கன்னலேஅமுதே – கருப்புக்கட்டிபோலேயும் அம்ருதம்போலேயும் அத்யந்தபோக்யனாகையாலும், (ஜகத்காரணத்வாத்) ஆதியாகியித்யாதி - லோகங்களுக்கெல்லாம் காரண பூதனாயிருக்கையாலும், (ந்யக்ரோதஶாயாஸக்தஹேதோ:) ஓரலினிலைமீதுசேர்குழவி - லோகங்க ளொன்றும் பிரியாதபடி வயிற்றிலேவைத்துக்கொண்டு ஓரலின்தளிரிலே கண்வளர்ந்தருளுகையாலும், (த்ரிதஶபதிதயா) விண்ணுளார்பெருமானேயோ - அபர்வருமமரர்களுக்கதிபதியாகையாலும், (யாஜ்ஞஸந்நிதாநாத்) பண்ணுளாயித்யாதி - ஸ்ரீதிருடையயாஜ்ஞஸாமங்களிலே ஸந்நிஹிதனாயிருக்கையாலும், (பீயூஷஸ்யார்ப்பணாத்தே:) அன்றுதேவரசுரர்வாங்கஇத்யாதி - திருப்பாற்கடலைக்கடைந்து தேவர்களுக்கு அம்ருதத் தைக்கொடுத்தருளுகையாலும், (ஸ்வபதிதயா) என்னம்மாஎன்கண்ணா - எல்லாருக்கும் ஸ்வாமியாகையா லும், (லோகஸம்ரக்ஷணாத்தே:) நிலமுதலினிஎவ்வுலகுக்கும் – லோகங்களையெல்லாம் ரக்ஷித்தருளுகை யாலும் ஆதிஶப்தத்தாலே அநந்தரமாகயிலே ''என்பாஞ்சுடரேஎன்றுன்னையலற்றி'' என்றுசொல்லுகிறப டியே ஸ்ரீதிருக்குத்தன் வடிவழகைக்காட்டி அநுபவிப்பிக்கிற உபகாரகத்வம் ஸங்க்ருஹிக்கப்படுகிறது. (த்ரிதநம:) கொண்டமூர்த்தியோர்மூவராயித்யாதி - ப்ரஹ்மருத்ரஶரீரகனாயும் வேதநாரூபேணவிஷ்ணுவா யும் அவதரித்தனை எம்பெருமான் தன்னிடத்திலே ந்யஸ்தபாரரான நம்மை இந்த்ரியங்களோடே ஸம்பந்தி ப்பித்து ஸம்ஸாரத்திலேவைத்தபோதே கைவிடநினைத்தாயென்று ஆழ்வார் மிகவும் வ்யாகுலசித்தராய் இனி நாம் இவனிடத்தில்பண்ணும் ஶரணாகதியை ஸஹிக்குமவனென்று ''உண்ணிலாவிய'' என்கிறதஶகத்திலே உபபாதித்தருளினாரென்கிறார். ॥௮௧॥

ஶ்ரீவேதாந்தாசார்யாய நம:.

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஏழாம்பத்தில் முதற்திருவாய்மொழிமுற்றிற்று.

மூ— மாயமறிபவர்மாயவற்காளன்றியாவரோ* தாயஞ்செறுமொருநூற்றுவர்மங்கவோரைவர்க்காய்* தேசம
றியவோர்சாரதியாய்ச்சென்றுசேனையை* நாசஞ்செய்திட்டு நடந்தநல்வார்த்தையறிந்துமே* ॥கூ॥
வார்த்தையறிபவர்மாயவற்காளன்றியாவரோ* போர்த்தபிறப்பொடு நோயொடு மூப்பொடிறப்பவை*

ஆ—(மாயமறிபவர்) பாண்டவர்களுக்கு ஸர்வலோகஸாக்ஷிகமாக ஸாரத்யம்பண்ணி யவர்களுடைய தாய
ப்ராப்தராஜ்யதானஹேதுவிரோதிகளான துர்யோதநாதிகளையும் அவர்களுடையஸேனைகளையும் நாசஞ்
செய்திட்டு திருநாட்டேறவெழுந்தருளின கஷ்ணசரித்ரத்தையறிந்துவைத்து நல்லதறிவார் அந்தஸ்வரூப
ஸர்வேச்வரனுக்கன்றி யாளாவரோவென்கிறார். ॥கூ॥

(வார்த்தையறிபவர்) "ஸர்வதர்மாந்பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ" என்றுகொண்டாச்ரிதரை யா
த்ருச்சிகவிரோதகஜந்மஜராமரணாதி நிரவதிகதுக்காகரஸம்ஸாரத்தைப்போக்கி கேவ

✳ஒன்பதாம்பாட்டு:✳

இ— ஓரைவர்க்காயென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பாண்டவர்களுக்கென்று) தேசமறியவோர்
சாரதியாயென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸர்வப்ரத்யக்ஷமாக) தாயஞ்செறுமொருநூற்றுவர்மங்
கவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவர்களுடையவிரோதிகளை) நடந்தநல்வார்த்தையறிந்து
மென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (திருநாட்டேறவிரோதிகளை) அறிந்துவைத்துளன்கிறதற்கு ஆ
ளாவரோவென்கிறத்தோடே யந்வயம். ஸ்வயோஜநத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நல்லதிரோதியால்) ॥

✳பத்தாம்பாட்டு.✳

போர்த்தவிரோதி பேர்ததிருத்தத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (விவேகாதிரோதியால்) நாஸ
கரீரஸம்பந்தமும் ஜந்மவிசேஷமாகையால் போர்த்தபிறப்பொடுவென்று ஜந்மநிவ்ருத்தியைச்சொன்னபோதே

ஸ— தாயம் – தாயத்தை, தாயப்ராப்தமான ராஜ்யாம்சத்தையென்றபடி. செறும் – செறுக்கினவர்களான,
செறுக்குதல் - பாதித்தல், தாயத்தைபாதிக்கையாவது இவர்களைபோஜிக்கவொட்டாதே தாங்களபஹரி
க்கை, ஓர் – வைலக்ஷண்யத்திலும் ப்ரஸித்தியிலுமத்விதீயரான, நூற்றுவர் – சதஸங்க்யரான துர்யோத
நாதிகள், மங்க - நசிக்கும்படி, இதுக்குச்சாரதியாயென்கிறத்தோடே யந்வயம். ஓர் – அஸஹாயரான, ஒரு
ஸாரதியொழிய வேறுதுணையில்லாதவர்களானவென்றபடி. ஐவர்க்காய் - பஞ்சஸங்க்யரான பாண்டவர்களு
க்காய், அவர்களுக்குத்தானொருவனுமே ஸர்வவிதபந்துவுமாயென்றபடி. தேசமறிய – தேசமெல்லாமறி
யுமபடியாக, இது நிக்ருஷ்டக்ருத்யமாகையாலே இத்தை ரஹஸ்யமாகச்செய்யவேணுமென்றெண்ணாதே "பா
ண்டவாநாம் த்வம் ஸாரத்யம் ஸர்வலோகஸாக்ஷிகம்" என்னும்படி உபயஸேனைகளுக்கும் நடு
வே ஸர்வதேசங்களிலும் ப்ரஸித்தமாம்படியாகவென்றபடி. ஓர் - அத்விதீயனான, சாரதியாய் - ஸாரதியா
ய், சென்று - தேரைநடத்திகொண்டு ஸஞ்சரித்து, சேனையை – ஸேனையை, நாசஞ்செய்திட்டு – நாச
ம்பண்ணிவித்து, நடந்த – "ஸஜநம்கிரம்ஸ்தல ஸ்தாநாவ்ஸாநஞ்ச" மென்கிறபடியே தன்னுடைய
விந்த ஸௌசீல்யாதிகுணங்களை யறியமாட்டாதே ஸம்ருத்தியைப்படுகிற விந்த ப்ரபஞ்சத்தைவிட்டு தேஹஸ
ஹிதமாகவே தன்னுடைச்சோதிக்கெழுந்தருளின, நல்வார்த்தை - நல்லவார்த்தையை, இப்படி
யெழுந்தருளினபடியைப்பேசின இதிஹாஸத்தையென்கை. இப்படி க்ருஷ்ணனுடைய ஸௌசீல்யாதிகுணங்
களை ப்ரதிபாதிக்கையிலே ப்ரதானதாத்பர்யமாகையாலே நல்லதான இதிஹாஸத்தையென்கை. அறிந்
தும் – அறிந்திருக்கச்செய்தேயும, இதுக்காளாவரோவென்கிறத்தோடே யந்வயம். மாயம் – ஆச்சர்யத்தை,
ஆச்சர்யமான விந்தசரித்ரத்தையென்றபடி. அறிபவர் – அறிந்தவர்கள், மாயவற்கன்றி – அ
ந்தஸ்வரூபஸர்வேச்வரனான க்ருஷ்ணனுக்கல்லது, ஆளாவரோ- வேறொருவர்க்கு அடிமையாவர்களோவென்றபடி ॥கூ॥

போர்த்த - போர்த்துக்கொண்டிருக்கிற, ஸம்ஸாரதோஷாதிகளைக் காணவொண்ணாதபடி யாத்மாவைம
றைத்துக்கொண்டிருக்கிறவென்றபடி. பிறப்பொடு - ஜந்மத்தோடே, நோயொடு– அந்த சரீரஸம்பந்தமான
வ்யாதிகளோடு, மூப்பொடு - ஜரையோடு, அந்தவ்யாதிகள்போலே ஔஷதாதிகளையிட்டுப் பரிஹரித்
துக்கொள்ளவுமொண்ணாதபடியான ஜரையோடென்றபடி. இறப்பு – மரணமும், அப்படி ஜரையோடே
யாகிலும் ஜீவித்திருக்கவுமொட்டாத மரணமுமென்றபடி. அவை- அவையத்தனையும், பேர்த்து - அதுபோடே

டீ—கா— சாரதியாய்ச்சென்று 'பாண்டவாநாம் ஹிதார்த்தாய ஸர்வலோகஸாக்ஷிகளுக்காக' என்கிறபடியே எல்லாருமறிய ஸஜாதீயனைப் பரிபாலிக்கைக்கொண்டு நின்றசெயலாலும், போர்த்தபிறப்பொடு இத்யாதி - வேதாந்த ஜஞாநாநுஷ்டாநாதிநிவாரணவைலக்ஷண்யமாகத் தன்திருவடிகளிலே சேர்க்கையாகிற மோக்ஷத்தைப் பண்ணுமவனாகையாலும், எம்பெருமான் ஸ்வாபாவிகமான தன்னுடைய ஸர்வஸ்மாத்பரத்வத்தை ப்ரகாசிப்பியா நிற்கிறானென்று "கற்பாரிராமபிரானை" என்கிறதசகத்திலே யருளிச்செய்யப்பட்டதென்கிறார். ௪௯

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:.

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஏழாம்பத்தில் ஐந்தாந்திருவாய்மொழி முற்றிற்று.

❋ ✳ ❋

# ஆறாந்திருவாய்மொழி.

மூ—பாமருமூவுலகம்படைத்தபற்பநாபாவோ* பாமருமூவுலகுமளந்தபற்பபாதாவோ* தாமரைக்கண்ணாவோ

ஆ— (பாமருமூவுலகம்) இப்படியாஸ்ரிதரை ப்ரக்ருதிஸம்பந்தத்தைப்போக்கித் தன்திருவடிகளிலே சேர்த்தருளும் ஸ்வபாவங்கள்கிடக்கச்செய்தே நான்பின்னையுமிப்ரக்ருதியோடேகூட வர்த்திக்கிறவத்தனை யாகாதேயென்று தத்ஸம்ஸ்லேஷவிரோதியான தம்முடைய ப்ரக்ருதிஸம்பந்தத்தாலே கலங்கினவராய் இப் ப்ரக்ருதிஸம்பந்தத்தைப்போக்கியருளி யுன்திருவடிகளிலே யென்னைச் சேர்த்தியருளவேணுமென்று ஸர்வ வர்த்தித்திருமகனை நோக்கிக் கூப்பிடுகிறார். தேவாதி ஸ்தாவராந்த நிகிலஜகஜ்ஜநங்களான ஸமஸ்தலோகங்களையும்படைத்த பரமகாருணிகனே? பின்னையுமந்த ஸ்ருஷ்டமானலோகத்திலே ஸ்ரீவாமனனாய் வந்து அவதரித்தருளி அநாலோசிதகுணாகுணமாக ஸமஸ்தாத்மாக்களுமுஜ்ஜீவிக்கும்படி ஸகலலோகத்தையு

❋ ஆறாந்திருவாய்மொழி. ❋

இ— இப்படிஸ்ரீதசரதாத்மஜனுடைய கல்யாணகுணாம்ருதங்களை யநுபவியாநின்றுகொண்டு ஸ்ருஷ்டராயிருந்த ஆழ்வாரித்திருவாய்மொழியிலே யாக்ரந்தம்பண்ணுகை யஸம்கதமன்றோவென்ன ஸங்கதிப்பிக்கிறார் (இப்படியாஸ்ரிதரையித்யாதியால்) ஸர்வ வர்த்தித்திருமகனையித்யாதி - இத்தால் இத்திருவாய்மொழிக்கு ஆஸ்ரித ஸம்ரக்ஷணமென்கிற ஸ்வபாவம் ப்ரதிபாத்யமென்று ஸூசிதமாயிற்று. *

❋ முதற்பாட்டு. ❋

பாமருமூவுலகம்படைத்தவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தேவாத்யாதியால்) பாமருமூவுலகுமளந்தவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பின்னையுமித்யாதியால்) தனியேன்தனியாளாவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (எனக்குநீயித்யாதியால்) பற்பநாபா பற்பபாதா தாமரைக்கண்ணா

ஸ— பா - பதார்த்தங்கள், தேவாதி ஸ்தாவராந்த நிகிலஜகஜ்ஜாலங்களென்றபடி. பாவென்று பதார்த்தங்களுக்குப்பெயர் - மரு - மருவியிருக்கிற, எங்கும் வ்யாப்தங்களாகச்சேர்ந்திருக்கிறவென்றபடி. மூவுலகம் - க்ருதகம் அக்ருதகம் க்ருதகாக்ருதகமென்று த்ரிவிதங்களான லோகங்களை, படைத்த - ஸ்ருஷ்டித்தவனான, இப்படி காரணத்வேந ப்ரதாநத்தாலே ஸர்வஸத்தாப்ரதனான ஸர்வோபகாரகனானவென்றபடி. இப்படி பெற்ற தாயாயிருந்து வைத்தென்னை யுபேக்ஷிக்கலாமோவென்று கருத்து. பற்பநாபா - பத்மநாப? பத்மம்போலே பரிசுத்தமான நாபியை யுடையவனே யென்றபடி. லோகங்களை யெல்லாம் உண்டாக்கின பத்மத்தை நாபியிலே யுடையவனேயென்று சொல்லுவாருமுண்டு. ஓவென்று ஆர்த்திசயத்தாலே யாக்ரந்தம்பண்ணுகிறபடி. பா - தேவாதி ஸ்தாவராந்த பதார்த்தங்கள், மரு - மருவியிருக்கிற, எங்கும் வ்யாப்தங்களாகச் சேர்ந்திருக்கிறவென்றபடி, மூவுலகும் - மூன்று லோகங்களையும், அளந்த - த்ரிவிக்ரம ரூபத்திலே யளந்துகொண்டதான, பற்பபாதா? - பத்மஸத்ருசபாதங்களையுடையவனே, லோகங்களைஸ்ருஷ்டித்த வளவன்றிக்கே ரக்ஷணமும் பண்ணியிருக்கிறவனே யென்றபடி. ஓவென்றாக்ரந்தம், தாமரைக் கண்ணா - தாமரை விலோசநனே? லோகங்களைப்பெற்று வளர்த்தவுபகாரமாத்ரமொழிய ஸௌந்தர்யமின்றிக்கேயிருந்தாயாகில் நானறியிரேனோ,

ஆறு—வென்றுபுலன்றுறந்தவிசும்பாளியைக்காணேனே ॥எ॥

ஆளியைக்காண்பரியா யரிகாணநரியாயரக்கர்* ஊளையிட்டன்றிலங்கைகடந்து பிலம்புக்கொளிப்ப* மீளியம்புள்ளைக்கடாய் விறல்மாலியைக்கொன்றுபின்னும்* ஆளுயர்குன்றங்கள்செய்தடர்த்தானையுங்கண்டுங்கொலோ *॥

---

ஆ—ளுடைய மோஹப்ரவ்ருத்திகளும் ஸஹ்யமாம்; ஆனபின்பு என்னுடைய அபேக்ஷிதமும் ஸுஸம்பாதமென்கை ஆழும், இங்ஙனேயிருக்கச்செய்தே நீயோவென்னபேக்ஷிதம் செய்தருளுகிறிலை, நானினி புன்னைக்காணப்பெறாதே போமத்தனையாகாதேயென்கிறார். ॥எ॥

(ஆளியை) ஆளியைக்கண்டகுதிரையைப்போலேயும், ஸிம்ஹத்தைக்கண்ட நரியைப்போலேயும் ஹதசேஷரான ராக்ஷஸரெல்லாரும் பீதபீதராய் ஊளையிட்டு லங்கையினின்றும் ரஸாதலத்திலே புக்கொளிக்கும்

---

ஈ—தத்வ்யாபாரங்களாலே அவர்களைவிரோதிக்கைபாலே தத்ஸம்ப்ரவ்ருத்திகள் ஸஹ்யமன்றென்கையிலே யிவ்விடத்துக்குத் தாத்பர்யஞ்சொல்லுகையுங் கூடுமென்றுகருத்து. விசும்பாளியையித்யாதிக்குப் பாசுர தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆனபின்பித்யாதியால்) காணேனேயென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இங்ஙனேயிருக்கவித்யாதியால்) ॥எ॥

✳ எட்டாம்பாட்டு. ✳

ஆளியைக்காணபரியாயென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆளியையித்யாதியால்) அரிகாணநரியாயென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸிம்ஹத்தையித்யாதியால்) பிலம்புக்கென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ரஸாதலத்திலேபுக்கென்று) மீளியென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார்

---

ஈடு— பாகுமாக விஜயபத்தைப்பண்ணினவனையென்றபடி. ப்ரஹ்ம ஸம்ஹ்ருதியைப்பண்ணினத்தையே அநுபாஷ்யமாகச்சொல்லுகிறார். விசும்பாளியை - நாகாயிபதியை, விசும்பு - நாகம், ஐம்புலன்களுக்கொண்டு ஸ்வர்க்கத்தையாளுகிற ஸர்வேஶ்வரனையென்றபடி. ராக்ஷஸாதிகளுடைய நிரஸனாதிவ்யாபாரங்களும் ஸஹ்யமங்களென்று பரதாத்பர்யம். காணேனே - காணமாட்டேனே, இப்படி ப்ரஹ்லாதிஸம்ரக்ஷணாதி ஸர்வாஶ்சர்யப்ரவ்ருத்திமானவன் என்காபத்தைச்செய்யக்காணாமையாலே யினிநானவனை யிழந்துபோமித்தனையென்றுகருத்து. ॥எ॥

ஆளியைக்காண் - ஆளியைக்கண்டதான, ஆளியென்று யாளிக்குப்பேர். அதாவது - கஜவைரி யாயிருப்பதொரு ம்ருகவிஶேஷம். பரியாய் - அஶ்வமாய், பரி - அஶ்வம், யாளியைக் கண்ட அஶ்வம்போலே அதிபீதரா யென்றபடி. கஜவைரியைக்கண்டால் அஶ்வம் நடுங்கும்படி சொல்லவேண்டாமிறே, அரிகாண் - ஸிம்ஹத்தைக்கண்டதான, அரி - ஸிம்ஹம், நரியாய் - ஜம்புகமாய், காண்நரியென்கிறவிடத்தில் ணகாரனகாரஸவர்ண ணகாரவர்ணலோபம். ஸிம்ஹத்தைக்கண்டநரிபோலேபீதராயென்றபடி. "ஶரபேண யதா ஸிம்ஹா ஸிம்ஹேந த்விரதா யதா! த்விரதேந யதா வ்யாக்ரா வ்யாக்ரேண த்வீபிநோ யதா। ததாதே ராக்ஷஸா ராம விஷ்ணுநா ப்ரபவிஷ்ணுநா" என்று உத்தரராமாயணத்திலே ஸ்ரீவால்மீகி பகவான் சொன்ன த்ருஷ்டாந்தத்தாலே சொல்லுகிறார். அரக்கர் - ராக்ஷஸரானவர்கள், ஹதஶேஷரான ராக்ஷஸரென்றபடி. அன்று - அந்த யுத்தகாலத்திலே, ஊளையிட்டு - பயாதிஶயத்தாலே ஸ்வேதநமாகக்கூப்பிட்டு, இலங்கைகடந்து - லங்கையை யதிக்ரமித்து, குளவிகள் கூண்டைவிட்டுப்பறந்து போமாப்போலே லங்கையை விட்டென்றபடி. பிலம்புக்கு - பிலத்தை ப்ரவேஶித்து, த்ருஷ்டஜந்துக்கள் பயத்தாலே பிலத்தை ப்ரவேஶிக்குமாப்போலே ரஸாதலத்திலே ப்ரவேஶித்தென்றபடி. ஒளிப்ப - ஒளிக்கும்படி, இதுக்கடாத்தானை யென்கிறதோடேயந்வயம். மீளி - ம்ருத்யுவான, மீளியென்று ம்ருத்யுவுக்குப்பேர். ப்ரதிகூலர்க்கு ம்ருத்யுவான வென்றபடி. அம் - ஸுந்தரமான, அநுகூலர்க்கு த்ருஷ்டிமநோஹரமான வென்றபடி. புள்ளை - கருடனை, கடாய் - கடாவி, ஸ்வேச்சமாக நடத்தியென்றபடி. விறல்மாலியை - பராக்ரமவானான மாலியென்கிற ராக்ஷஸனை, ஶாகவத்தித்வவதலோபஸ். கொன்று. ஸம்ஹரித்து, பின்னும் - அதின்மேலேயும், ஆளுயர் குன்றங்கள்செய்து - ஆள்களாலே யுயர்ந்த குன்றங்களைச் செய்து, ராக்ஷஸர்களைக்கொன்று ராக்ஷஸர்களை பர்வதங்களாகக்குவித்தென்றபடி. அடர்த்தானையும் - இப்படி யவர்களை ஸம்ஹரித்த வனையும், அடர்த்தானையுமென்கிற உகாரஸாமர்த்த்யத்தாலே யவனைக்காண்கை அதிஶயமன்றோவென்று தோற்றுகிறது.

மூ— காண்டுங்கொலோநெஞ்சமே கடியவினையே முயலும்* ஆண்டிறன் மீளிமொய்ம்பிலரக்கன் குலத்தைத்தடிந்து*
மீண்டுமவன்றம்பிக் கேவிரிநீரிலங்கையருளி* யாண்டுதன்சோதிபுக்கவமரரரியேற்றினையே* ‖ கூ ‖

ஆ— படியாக ப்ரதிகூலர்க்கு ம்ருத்யு ஸத்ருசரான பெரிய திருவடி திருத்தோளிலே யேறி லங்கையைச்சென்றடர்த்து அதிவேலமாக அரியவர்களான சரீரங்களை ஸம்ஹாரம்பண்ணியருளினாப்போலே விரோதியான வென்னுடைய பாபங்களையும்போக்கி யெனக்கென்றே தன்னைக்காட்டியருளுவதென்கிறார். ‖ அ ‖

(காண்டுங்கொலோ) பின்னையுங் க்ரூரகர்மத்திலே நிரதனாய் வீர்யத்தையும் பராக்ரமத்தையுமுடைய ம்ருத்யு ஸத்ருசனுமாயிருந்த ராவணனுடைய குலத்தை ஸம்ஹாரம்பண்ணி அவனைக்கொன்றோமென்று திருவுள்ளத்திலே நொந்து அவன்றம்பியான ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு லங்கைராஜ்யத்தைக் கொடுத்தருளி மீண்டெழுந்தருளி ஸர்வேஶ்வரஜனித நிரவதிகவைபவத்தாலே விலக்ஷணமான திருவயோத்யா நகரியிலுள்ள

இ— (ப்ரதிகூலர்க்கித்யாதியால்) கடாவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (திருத்தோளிலேயித்யாதியால்) அடர்த்தென்றது - வீசித்தென்றபடி. விரலென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அதிவேலேத்யாதியால்) சரீரைச்சொன்னது உபலக்ஷணமென்றுகாட்டுகிறார் (சரீரேத்யாதியால்) பின்னுமித்யாதிகளுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸம்ஹாரமித்யாதியால்) ‖ அ ‖

✳ ஒன்பதாம்பாட்டு. ✳

கடியவினைபே முயலுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பின்னையுமித்யாதியால்) பின்னையுமென்றது - மிகவுமென்றபடி. ஆண்டிறலென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (வீர்யேத்யாதியால்) மீளிமொய்ம்பிலென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ம்ருத்யுவித்யாதியால்) அரக்கன்குலத்தைத்தடிந்து என்கிறதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ராவணனுடையவித்யாதியால்) அவன் தம்பிக்கேயென்கிறவிடத்தில் அபிப்ராயத்தையருளிச்செய்கிறார் (அவனைக்கொன்றோமித்யாதியால்) மீண்டுமாண்டென்றதைத்துத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (மீண்டெழுந்தருளியித்யாதியால்) தன்சோதிபுக்கவென்கிறதற்குத் தாத்பர்ய-

ஸ— காண்டுங்கொலோ - காணப்போமோ, அப்படியும் நமக்கொரு காலம் வருமோவென்றுகருத்து. ‖ அ ‖

கடியவினையே - க்ரூரகர்மங்களையே, ஸ்ரீஜநகராஜன் திருமகளைப் பிரிகைத்துடக்கமான அதிக்ரூரகர்மங்களையென்றபடி. அவதாரணத்தாலே ஸத்கர்மம் ஒன்றுமில்லையென்று தோற்றுகிறது. முயலும் - அபிநிவேசத்தோடே ப்ரவர்த்திக்கிறவனை, முயலுகை - அபிநிவேசத்தோடே ப்ரவர்த்திக்கை. ஆண் - ஆண்மையிலே, ஸங்க்ராமத்திலேயென்றபடி. திறல் - பராக்ரமஸாமர்த்யத்தையுடையவனை, திறல் - பராக்ரமஸாமர்த்யம். ஆண்திறலென்று வ்யதிகரண பஹுவ்ரீஹி. ஆண்திறலென்கிற விடத்திலே டகாரலோபம். ஸங்க்ராமத்திலே பார்த்தால் ஸகலபராக்ரமஸாதகனை யென்றபடி. மீளிமொய்ம்பில் - ம்ருத்யுவைப்போலே மிடுக்கையுடையவனை. மீளி - ம்ருத்யு, மொய்ம்பு - மிடுக்கு. இல்லென்று ஸப்தமீயும், ம்ருத்யுவைப்போலே அத்யுக்ரஶக்தியை யுடையவனை யென்றபடி. அரக்கன்குலத்தை - ராக்ஷஸனுடைய குலத்தை, ராவணனுடைய ஸஹோதரஸமூஹங்களும் இந்த்ரஜித் ப்ரப்ருதி புத்ரனுமான குலத்தையென்றபடி. தடிந்து - ஹேதித்து, தடிகை - ஹேதிக்கை. அவன்றம்பிக்கே - அவனுடையதம்பிக்குத் தானே, விபீஷணாழ்வானுக்கென்றபடி. ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு லங்கைராஜ்யங்கொடுத்த அவனநுகூலனாயிருந்தானென்கிற வித்தாலே யன்று. ராவணனைக் கொன்றோமே யென்று திருவுள்ளத்திலே நொந்து இனியவன்றம்பிக்காகிலும் ராஜ்யத்தைக்கொடுக்கவேணுமென்றுபார்த்து நம்முடைய ஸாம்ராஜ்யத்தாலேயிவனவன்றம்பியாயிருக்கப்பெற்றோமென்றிவ்வாகாரத்தாலேயென்றுகருத்து. விரிநீர் - விஸ்த்ருத ஜலத்தையுடைத்தான, அதிவிததஸமுத்ர பரிவ்ருதமான வென்றபடி. இலங்கை - லங்கையை, அருளி - கொடுத்தருளி, மீண்டுமாண்டு - பின்னையும் பரிபாலனம்பண்ணி, ராவணவதாநந்தரம் மீண்டெழுந்தருளி திருவயோத்யயிலே ஸகலஜனங்களையும் பதினோராயிரமாண்டு பரிபாலனம்பண்ணி யென்றபடி. தன்சோதி - தன்னுடைய ஜ்யோதிஸ்ஸை, அத்யுக்ரதேஜோமயமான தன்னுடைய பரமபதத்தையென்றபடி. புக்க - ‘விவேஶ வைஷ்ணவம் தேஜஸ் ஸஶரீரஸ் ஸஹாநுகஃ’ என்கிறபடியேயெல்லாரையுங்கூட்டிக்கொண்டு ப்ரவேசித்தவனை, அமரரரியேற்றினை - அமரருடைய ஸர்வஶ்ரேஷ்டத்தை, அரி - ஹரி. ஸிம்ஹமென்றபடி, ஏறு - வ்ருஷபம்,

மூ— ஏற்றரும்வைகுந்தத்தை யருளுநமக்காயர்குலத்* தீற்றிளம்பிள்ளையொன்றாய்ப்புக்குமாயங்களேயியற் றிக்கூற்றியல்கஞ்சனைக்கொன்றைவர்க்காய்க்கொடுஞ்சேனைதடிந்* தாற்றன்மிக்கான்பெரியபரஞ்சோதிபுக்

இ— ஸ்வஜாதீயஸஜாதீயமான ஸஜாதீயாசேஷத்தையும்ரக்ஷித்தருளி அவர்களையுங்கூடக்கொண்டு திருநாட் டிலேயெழுந்தருளி திருமாமணிமண்டபத்திலே யமர்வருமமரர்கள்நடுவே ஸ்ரீவைகுண்டநாதனான ஐபத்தோ டேகூட வெழுந்தருளியிருக்கிறவிருப்பை நெஞ்சே! நாமுமொருநாள் காணவல்லோமோவென்கிறார். ||௯||

(ஏற்றரும்) ஸ்ரீநந்தகோபர்வஸுதேவனாப்வந்துபிறந்தருளி திண்கொளசுரரைத்தேயவளர்ந்தருளி ஸம்ஸார ஸாகரத்தில்வந்து ஸ்ரீவைகுண்டனான கம்ஸனை வஞ்சித்துக்கொன்றருளி பின்னை பாண்டவர்களுக்காக ஸர்வேஷ்வரனான துர்யோதனனையும் அதர்மமான வஹாந்துடைவெஸ்ஸேனையையும் நிஸ்ஸேஷமாக நஸிப்பித் து பாண்டவர்களுக்குராஜ்யத்தைக்கொடுத்து பின்னையுமவர்களுக்கொன்றும செய்யாதானுய்த் திருநாட்டிலே

இ—மருளிச்செய்கிறார் (அவர்களையுமி த்யாதியால்) அமரரரியேற்றினையேயென்கிறதற்குத் தாத்பர்யமருளிசசெய் கிறார் (திருமாமணியி த்யாதியால்) காண்டுமகொலோநெஞ்சமேயென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நெஞ்சேயி த்யாதியால்) ||௯||

✳ பத்தாம்பாட்டு ✳

ஆயர்குலத்தீற்றிளம்பிள்ளையென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸ்ரீநந்த த்யாதியால்) மாயங்க ளேயியற்றியென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (திண்கொளி த்யாதியால்) ஸ்வஸ்தமந:, திண்கொ ள் - திண்மையைக்கொண்டிருக்கிற, வஜ்ரகொடிநிமித்தரானவென்றபடி. அசுரரை - அஸுரரை, ஸ்ரீ பூதனாதிகளான, த்ருணாவர்த்த ஸகடாஸுரர்களையென்றபடி. தேய - க்ஷயிக்கும்படி, வளர்ந்தருளி - அ வர்களைக்ஷயிக்கப்பண்ணிக்கொண்டே வளர்ந்தருளியென்றபடி. ஒன்றாய்ப்புக்கென்கிறதற்குத் தாத்பர்யமரு ளிச்செய்கிறார் (ஸம்ஸாரி த்யாதியால்) கூற்றியல்கஞ்சனைக் கொன்றென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸ்ரீவைகுண்டனானவி த்யாதியால்) ஐவர்க்காய்கொடுஞ்சேனைதடிந்தென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பின்னைபாண்டவர்களுக்கி த்யாதியால்) ஆற்றன்மிக்கானென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பாண்டவர் களுக்குராஜ்யத்தையி த்யாதியால்) பெரியவி த்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (திருநாட்டிலேயி த்யாதியால்)

ஈ— வீதிபெருவழித்திலே பேற்றினையென்று ரூடமாயிருக்கும், நித்யஸூரிகளுடைய ஸிம்ஹ ஶ்ரேஷ்டத்தை யென்றபடி. ராவணாதிஸ்ரீவைகுண்ட நிரஸநஜநிதஹர்ஷாதிஸாவ்ருத்திபாலே நித்யஸூரிகள் நடுவே ஸிம்ஹாஸனம்போலேஸ்ரீ ஐ யெழுந்தருளியிருக்குமவனை ஸர்வஸ்வத்திருமகனையென்கை. நெஞ்சமே? - என்னுடையமனஸ்ஸே, ஸம்போதநம். காண்டுமகொலோ - காண்போமோ, காணமாட்டோமோ வென்றபடி. ||௯||

ஆயர்குலத்து - கோபர்களுடைய குலத்திலே, ஈற்றிளம்பிள்ளை - ஈன்றப்பட்ட பாலகனானவனை, ஈன்றுகை - ஜனிக்கை, இது க்ருஷ்ணனுக்கு விசேஷணம் மாயங்களேயியற்றி - ஆஸ்சர்யங்களையே ஸ்ரீவஷ் ப்பித்து, இயற்றுகை - ஸ்ருஷ்டிப்பிக்கை, வஜ்ரநாதத்ருணாவர்த்த ஸகடாஸுரநிரஸநாதிகளான ஆஸ்சர்யங்களையே நடத்தியென்றபடி. ஒன்றாய்ப்புக்கு - ஒருவ்யாஜத்தாலே ப்ரவேஸித்து, யநாயாஸத்துக்கு வருகிற ஸபாக்களோடே தானும் ஸபாவ்யாஜத்தாலே உபாஸையிலே ப்ரவேஸித்தென்றபடி. கூற்றியல் - ம்ருத்யுஸ்வபாவனை, கூற்றம் - ம்ருத்யு, இயல் - ஸ்வபாவம். ம்ருத்யுவுக்கு ஸ்வபாவமாவது ப்ராணனையும் தே ஹத்தையும் பிரிக்கையிறே. ஸ்ரீவஸுதேவதேவகிகளுக்கு ப்ராணபூதனான தன்னை யவர்கள் பக்கல் நின் றும் பிரிக்குமவனையென்றபடி. கஞ்சனை - கம்ஸனை, கொன்று - ஸம்ஹரித்து, ஐவர்க்காய் - பஞ்சபாண்டவர் களுக்காக, ஸர்வவிபவாயாவு மவர்களுக்காயென்றபடி. கொடுஞ்சேனை - கொடியதான ஸேனையை, க்ஷத்ரியங்களான துர்யோதனாதிஸேனைகளையென்றபடி. தடிந்து - நஸிப்பித்து, ஆற்றன்மிக்கான் - பொ றுமைமிஞ்சினவனை, ஆற்றல் - பொறுமை. நாம் பாண்டவர்களுக்கு எல்லாம் ஸாதித்துக் கொடுத்தோமே ன்று மகிழ்தலுகாதே “ருணம்ப்ரவ்ருத்தமிவமே” என்கிறபடியே யிவர்களுக்கொன்றும் செய்யாதானுயிருக்கும வனையென்றபடி. பெரிய - ஸர்வோத்க்ருஷ்டமான, பரஞ்சோதி - பரஞ்ஜ்யோதிஸ்ஸை, ஸ்ரீவைகுண்டத்தையெ ன்றபடி. புக்க - ப்ரவேஸித்தவனை, ஸம்ஹாராவதாரணாநந்தர மெழுந்தருளினவனை, அரி - ஹரியானவன்

ஶ்ரீ:

த்ரமிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி:

(பாமருமூவுலகம்.)

நாபீபத்மோத்பவாஜ்ஞோ விதிஶிவபஜநீயாங்க்ரி ஶர்வாணத்ரா
ணதக்ஷ: ஸர்வஸம்பத்ப்ரதாநபிநந்த: ஸம்ஶ்ரிதஸ்வஸ்வாமா ।
ப்ரஹ்மாத்யாபத்விமோக்ஷாத் அஸுரநிரஸநாத் த்ராதரக்ஷோநுஜாத்
ஸ்வீயாநாம் த்ராணஶாலீ ஸ்வஹவதிஸமவாநித்யவாதீஷ்டஹாரி: ॥ ௮௬ ॥

(நாபீபத்மோத்பவாஜ்ஞ:) பாமருமூவுலகம்படைத்த பற்பநாபாவோ - ஜகத்ஸ்ருஷ்டிஹேதுவான திருநாபீகமலத்தாலே யாஜ்ஞனாகையாலும், (விதிஶிவபஜநீயாங்க்ரி:) அரனான்முகனேத்துஞ் செய்யதிருப்பாதத்தை - ப்ரஹ்மாதிகளாலே ஸேவ்யமானதிருவடிகளை யுடையனாகையாலும், (ஶர்வாணத்ராணதக்ஷ:) காத்தவெங்கூத்தாவோமலையேந்தி - கோவர்த்தநத்தையெடுத்து கோகுலத்தை ரக்ஷிக்கையாலும், (ஸர்வஸம்பத்ப்ரதாநபிநந்த:) எழில்மூவுலகுநீயேயித்யாதி - ஸமஸ்தஸம்பத்துக்களையும் ஸ்ருஷ்டி ஸ்ருஷ்டியழிக்கையாலும், (ஸம்ஶ்ரிதஸ்வஸ்வாமா) என்னுடைகோவலனே - க்ருஷ்ணனாயவதரித்தாஶ்ரிதர்க்கு ஸ்வாமியாகையாலும், இத்தாலேதானே மேலிற்பாட்டில் என்றிருமார்பனையென்று வக்ஷ்யமாணஸ்வ ரூபத்துக்கு ஹேதுவாகச்சொல்லப்படுகிற லக்ஷ்மீஸம்பந்தமுக்தமாயிற்றென்று திருவுள்ளம். (ப்ரஹ்மாத்யாபத்விமோக்ஷாத்) நிலந்தீண்டெயின்மூன்றெரித்தித்யாதி - "விஷ்ணுராத்மா பகவத:" இத்யாதிகளின்படியே ப்ரஹ்மாதிகளை விசேஷித்தநுப்ரவேசித்து அவர்கள் துடங்கின த்ரிபுரஸம்ஹாராதிகளைத் தலைக்கட்டி ஆபத்துக்களினின்றும் விடுவிக்கையாலும், (அஸுரநிரஸநாத்) ஆழியைக்காண்பரியாயித்யாதி - விரோதிகளானவஸுரர்களை போரிடத்திலும்தரிக்கவொட்டாதே நிரஸிக்கையாலும், (த்ராதரக்ஷோநுஜாத்) அரக்கன்குலத்தைத்தடிந்து மீண்டுமவன்றம்பிக்கே விரிநீரிலங்கையருளி - தத்ப்ராதாவான ராவணனை பந்துமித்ரர்களோடேகூட ஸம்ஹரித்து ஸ்வாஶ்ரிதனான விபீஷணாழ்வானுக்கு லங்காராஜ்யத்தைக்கொடுத்துரக்ஷிக்கையாலும், இவற்றாலேதானே மேலிற்பாட்டில் ஸதஸத்ரூபமாய் ஐவர்க்காய் கொடுஞ்சேனைதடிந்து என்றுசொல்லுகிற ஆஶ்ரித ரக்ஷகத்வ விரோதிநிரஸநபூர்வகமான ஸாரஸ்வாரக்ஷண முபலக்ஷிதமென்றுகருத்து. இப்படிகளாலே யெம்பெருமான் ஸ்வாஶ்ரிதர் தன்னை யநாயாஸமாகப் பெறுதே கூப்பிடுகிறவற்றைப் பரிஹரியாநிற்கிறானென்று "பாமருமூவுலகம்" என்கிறதஶகத்தாலே யாழ்வார் ப்ரதிபாதித்தருளினாரென்கிறார். ॥ ௮௬ ॥

ஶ்ரீமதே நிகமாந்தமஹாதேஶிகாய நம:

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஏழாம்பத்தில் ஆறாந்திருவாய்மொழிமுற்றிற்று.

# ஏழாந்திருவாய்மொழி.

ஆ—(ஏழையராவி) இப்படி யெம்பெருமானுடைய வாஶ்ரிதவாத்ஸல்ய குணாநுஸந்தாநத்தாலே ஸாபேக்ஷிதத்தைச்செய்தருளுமென்று ஆஶ்வஸ்தரானவாழ்வார், அவன் செய்தருளாமையாலே, பின்னையுமவனோடே ஸம்ஶ்லேஷிக்க வாசைப்பட்டு, தத்ஸௌந்தர்யாநுஸந்தாந ப்ரகர்ஷஜநிததத்ஸாக்ஷாத்காரராய், தத்ஸம்ஶ்லேஷ



இ—ஏறாளும் வைகுந்தத்தையருளும் நமக்கென்றிப்படி யாஶ்வஸ்தரான வாழ்வார் அநந்தரமே யித்திருவாய்மொழியிலே வ்யஸநதஶையிலேபோலே விரஹிணியான பிராட்டியினுடைய பாசுரங்களைப்பேசுகை யஸங்கமன்றோவென்ன வவதரிப்பிக்கிறார் (இப்படி யித்யாதியால்) அநுஸந்தாநத்தாலேயென்கிறத்துக்கு ஆஶ்வஸ்தரானவென்கிறததோடே யந்வயம். தத்ஸாக்ஷாத்காரராயென்று ஸ்வப்நஸாக்ஷாத்காரத்தைச்சொன்னபடி.

மூ— வந்துதோன்றாயன்றேலுன்வையந்தாயமலரடிக்கீழ்* முந்திவந்துயானிற்பமுகப்பேகூவிப்பணிகொள்ளாய்*
செந்தண்கமலக்கண்கைகால்சிவந்தவாயோர்கருநாயிறு* அந்தமிலாக்கதிர்பரப்பியலர்ந்ததொக்குமம்மானே* ॥
ஒக்கும்மம்மானுருவமென்றுள்ளங்குழைந்துநாணாளும்* தொக்கமேகப்பல்குழாங்கள்காணுந்தோறுந்தொலைவன்

ஆ— நிரவதிகதீவ்ர ஸங்கமாயிருப்பதொரு கருநாயிறுபோலேயிருக்கிற நீ வந்துதோன்றாய், அன்றேல் ஸநாதனஜ்யோதிர்விசேஷ விசேஷ லோகஸாரண்யமாய், லோகவிக்ராந்தமாயிருந்த உன்திருவடிமலர்களின்கீழே உன்திருவுள்ளத்திலபேக்ஷிதமான கைங்கர்யத்தை நீயருளிச்செய்வதற்குமுன்பே அறிந்துசெய்யக்கடவனாய்ச்சமைந்துநிற்க முகப்பேகூவிப்பணிகொள்ளாயென்கிறார். ௭॥

(ஒக்கும்மம்மான்) உன்திருமேனிபோலொக்குமென்று தொக்கமேகப்பல்குழாங்கள் காணுந்தோறும்

இ— வையந்தாயவென்கிறவிடத்தில் ஸூசிக்கிறவ்ருத்தாந்தத்தை யருளிச்செய்கிறார் (ஸநாஜோவிதேத்யாதியால்) வையந்தாயவென்கிறதைப்புரைக்கிறார் (லோகவிக்ராந்தமாயென்று) முந்திவந்துயானிற்பவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உன்திருவுள்ளத்திலபேக்ஷிதமென்னுமளவாலே) பின்னையுமவன் விளம்பித்தவாறே நீயிங்கேயெழுந்தருளுகல் அதுதிருவுள்ளமன்றாகில் என்னையங்கே யழைத்துக்கொண்டருளுதல் செய்யவேணுமென்று ஸங்கதிவர்ணிதையாயிற்று. ௭॥

✳ எட்டாம்பாட்டு. ✳

அவதாரிகையில் ஸங்கதாவத்தைபருளிச்செய்கிறார் (உன்னைமறந்தித்யாதியால்) இத்தால் நாமுன்னை யழைத்துக்கொள்ளுமளவும் பாஹ்யவிஷயங்களிலே ப்ரவணித்து நம்மைமறந்திருமென்ன? அவற்றில் ஸங்க

ப— செம் - ஆதாம்ரமான, தண் - ஶீதளமான, கமலம் - கமலம்போலிருக்கிற, கண் கை கால் - நயநபாணி பாதங்களையுடைத்தான, சிவந்தவாய் - ஸாரணயாபமான, ஓர் - லோகவிலக்ஷணமான, ப்ரஸித்தாதித்யனுக்கு இவ்விசேஷணங்களில்லாமையாலே ஸாதர்ம்யமொருவகைக்காக இப்படி யருளிச்செய்தபடி. கருநாயிறு - நீலஸூர்யனானது, அந்தமில்லா - அபரிமிதங்களான, கதிர் - கிரணங்களை, பரப்பி - ஸகலதிக்குகளிலும் ப்ரஸரிப்பித்து, அலர்ந்ததொக்கும் - விகஸிதனானதற்கொத்திருக்குமவனான, விஷயிஸாரூப்யம் வெளிப்படுத்தியபாவிகஸிதனான நீலஸூர்யனுக்கு ஸத்ருசனான என்றபடி. அம்மானே - ஸர்வஸ்வாமிந், வந்துதோன்றாய் - என்கண்வட்டத்திலே நீவந்து தோற்றவேணும், அன்றேல் - அன்றாகில், ஸர்வஸாமர்த்யனான உனக்கு என்னை நினைக்காண ப்ரஸங்கிக்கையாலே, இங்ஙனேயெழுந்தருளத் திருவுள்ளமன்றாகில் என்றபடி. இதுக்கு கூவிப்பணிகொள்ளாயென்கிறத்தோடே ஸம்பந்தம். உன் - உன்னுடைய, இதுக்குமலரடியோடே ஸம்பந்தம். வையந்தாய - வையத்தைத் தாவின, வையம் - லோகம், லோகவிக்ராந்தமான வஸிஷ்டசண்டாள விபாகமற ஸகலஜந்துக்கள் தலையிலும் ஸம்ஸ்பர்சித்ததான வென்றபடி. மலரடிக்கீழ - ஸௌகுமார்யமான திருவடிகளின்கீழே, முந்திவந்து - உன் திருவுள்ளத்திலபேக்ஷிதமான கைங்கர்யத்தை நீ யருளிச்செய்வதற்கு முன்பேயறிந்து செய்யுமவனாய்க்கிட்டி, யான்நிற்ப - நான்நிற்கும்படியாக, முகப்பே - உன்முன்பே, கூவி - என்னை யழைத்துக்கொண்டு, பணிகொள்ளாய் - நீ கைங்கர்யங்கொண்டருளவேணும், ஸ்வஜ்ஞானத்தாலே யறிந்திருக்கும் ஸ்ரீஹாரீதாழ்வான் ப்ரக்ருதியல்லேன், "ஜ்ஞாநத்ருஷ்டிர்விசேஷஜ்ஞ:" என்று இளையபெருமாள் ப்ரக்ருதியானவனென்றபடி. அடிமைகொண்டல்லது நிற்கவொண்ணாதெனக்கென்று கருத்து. ௭॥

அம்மானுருவம் - ஸ்வாமியுடையஸ்வரூபத்தோடே, உஜ்ஜ்வலஸ்வரூபமான திருமேனியோடேயென்றபடி. ஒக்குமென்று - ஸத்ருசமாமென்று, நீலஸ்நிக்தஶீதளத்வாதிகளாலே இந்தமேகங்கள் ஸத்ருசங்களாமென்றபடி. இதுக்கு உள்ளங்குழைந்து தொலைவனென்கிற விரண்டிடத்திலுமந்வயம். தொக்க - ஸம்ஹிதங்களான, மேகம் - மேகங்களுடைய, பல் - பஹுப்ரகாரங்களான, குழாங்கள் - ஸமூஹங்களை, காணுந்தோறும் - காணும்பொழுதெல்லாம், நாணாளும் - நாளும்நாளும், ப்ரதிதினமுமென்றபடி. நாணாளுமென்கிறவிடத்தில் ளகாரமாகவும் நகாரம் ணகாரமாகவும் ஆதேசம். உள்ளம் - ஹ்ருதயமானது, குழைந்து - ஶிதிலமாய், நான் - நாட்டார்க்கு ஸுஸ்வாபஹேதுவான தேஹாநந்தமும் துர்லபஹேதுவாம்படியான நான்; தொலைவன் - மாண்டுபோகாநிற்பன், தொலைவு - மாளுகை, ப்ராணவிஶ்லேஷத்தை யடையாநிற்பு

மூ— ஞன்* நக்கலவர் தமக்காய் அன்றைவர் பதின்மர் தாள்சாயப்* புக்க நற்றேர்த் தனிப்பாகா வாராயிதுவோ பொருத்தமே* ௮அ

இதுவோ பொருத்தமின்னாழிப் படையாயேறுமிருஞ்சிறைப்புள்* அதுவே கொடியாவுயர்த்தானே

ஆ—நானும் உள்ளங்குழைந்து தூவன நான் உன்னை மறந்திருக்க வொட்டுகிறதில்லை இந்தப் பேர்கள், உன் திருவடிகளையே ப்ராப்யமும் ப்ராபகமுமென்றிருக்குமவர்க்கு ரக்ஷகனைப், அன்றைவர் பதின்மர் தாள்சாயப்புக்க நற்றேர்த்தனிப்பாகா? அத்தேரை இங்ஙனே திருத்திக்கொண்டு வாராய், இதுவோ உன்னுடைய ப்ரணயித்வமென்கிறார். ௮அ

இ—ஸம்ப்ரமவாக்யங்களென்னை மறக்கவொட்டுகிறதில்லை யென்கிறாரென்று ஸங்கதி தோற்ற நககவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உன் திருவடிகளையே யித்யாதியால்) ராஜ்யாதிகளிலே ஆஸக்தியுண்டாயிருந்ததாகிலும் பாண்டவர்களுக்கு ஸ்ரீ நாரதாதிகளையுபதேசம் ஸ்ரீவிஷ்ணு ரக்ஷணவைபவம் ஹ்ருதயே யபாலே ஸமஸ்தாதிகளையும் முன்னைக்குறையிலில்லையிறே! தேர்த்தனிப்பாகா வாராயென்கிற ஸந்நிதியாஹாரத்தாலே ஸ்வாபிப்ராயத்தை யருளிச்செய்கிறார் (அத்தேரையித்யாதியால்) திருத்திக்கொண்டென்றது- திருப்பிக்கொண்டென்றபடி. ௮அ

*ஒன்பதாம்பாட்டு*

மின்னாழியென்று திருவாழிக்கு விசேஷணமாக்ஷேபஞ்சொன்னதால் ஸமர்த்தவாக்யத்தை யருளிச்செய்கிறார்

ஈ—னென்றபடி. நக்க- யோக்யமான, ஸ்வாராதகரை ப்ராப்யப்ராபகங்களாக வுடையவர்களானவென்றபடி. ஐவர்தமக்காய் - ஐவர்களுக்கும் ஸ்வம்மாய், தம்மென்று ஸ்வார்த்தப்ரயோகம், பாண்டவர்களுக்கு இஷ்டவிநியோகார்ஹனென்றபடி. அன்று - பாரதயுத்தம் ப்ரவ்ருத்தமான காலத்திலே, ஈரைம்பதின்மர் - பலசாலிகளான துர்யோதநாதிகளென்றபடி. ஈரைம்பது- இரண்டு ஐம்பது, ஈரைம்பது ஸங்க்யையுடையவர் ஈரைம்பதின்மர், தாள்சாய - கால்சாயும்படியாக, விலகிரு ஸேனைகள்போலே ஸந்நிகிதராம்படியென்றபடி. புக்க - ஸமஸ்தவேதவிஷ்டமான, நல்தேர் - நல்லதேருக்கு, உன்னைஸாரதியாகவுடைத்தாகையாலே ஸ்லாக்யமான ரதத்துக்கென்றபடி. தனிப்பாகா? - அத்விதீயஸாரதியே, பாகன் - ஸாரதி, ரதியானஅர்ஜுநன் முதுகின்கீழேயொதுங்கும்படி ப்ரதானனாய்க் கொண்டு ஸாரதியானவனேயென்றபடி. வாராய் - வருகிறாயில்லை, "ஸேநயோருபயோர்மத்யே ரதம் ஸ்தாபய மேऽச்யுத" என்றருளப்படிசெய்யலாவது அர்ஜுநனுக்கேயோ எனக்காக அந்தத்தேரை யிங்கே நடத்தலாகாதோ, ஆச்ரிதர் ஐவருமாய் அநேகர்களவ்யாதருமானாலோ வுதவலாவது, நான்னகாகியுமாய் ஸீதிக்கிற வேதேஷுங்கள் ஸவாத்யாந்தகளுமாறு உதவலாகாதோவென்றுகருத்தது. இதுவோ பொருத்தம் - இங்ஙனேயோவுன்னுடைய ஆச்ரிதஸம்ரக்ஷணஸ்வபாவம், ஆச்ரிதர்க்காக தூத்யஸாரத்யாதிகளைப்பண்ணினதும், ஆயுதமெடேனென்று ஆயுதமெடுத்ததும் எல்லாம்பொய்யோ, 'நாராயணகவசீதா' மென்று கவிபாடினவனும் உன்பக்கல் கைக்கூலியாகப்பொய்யைப்பாடின னித்தனையோவென்று கருத்து. வாராய் – எனக்கதெல்லாஞ்செய்யவேணுமோ, ஒருக்கால்முகங்காட்ட வமையுமேயென்றுதிருவுள்ளம். ௮அ

மின்னாழி- மின்போலேயிருக்கிற திருவாழியாகிற, ச்யாமளமான திருமேனிக்கு வித்யுத்துக்கும்போலேயிருக்கிற திருவாழியாகிற வென்றபடி. படையாய்- ஆயுதமுடையவனே, படை- ஆயுதம், படையுடையவன் படையான், படையாயென்று ஸம்போதநத்தில் ரூபம் ஏறும்- ஏறப்படுமதான, திவ்யவாஹநமான என்றபடி. இருஞ்சிறை- பெரியசிறகை யுடைத்தான, இரும் என்று பெரியது, சிறை- பக்ஷம், அதிவிசாலபக்ஷமாகியான வென்றபடி புள் அதுவே- அந்த பக்ஷியையே, வேதஸ்வரூபி ப்ரசித்தனான பெரியதிருவடியையே என்றபடி கொடியா- த்வஜமாக, உயர்த்தானே- உயரவவித்தவனே, ஆச்ரிதரக்ஷணத்தைப் ஸ்ரீமதஜேந்த்ராழ்வானுக்குப்போலே அதிசீக்ரமாய் வந்தருளி யெனக்கு வடிவழகைக்காட்டிய நாளே வேணுமென்று ஸம்போதநத்துக்கும் தாத்பர்யம். யதா- ப்ரயோஜநாந்தரங்களிற்சென்ற பாண்டவர்களான்றிக்கே ஏகாந்திகளான திருவாழியாழ்வான் முதலானோரோடு ஸம்ச்லேஷிப்பதும் பொய்யோவென்று கருத்தாகவுமாம். இதுவோபொருத்தம் - இங்ஙனே

மூ - என்றென்றேங்கிபழுதக்கா* லெதுவேயாகக்கருதுங்கொலிம்மாஞாலம்பொறைதீர்ப்பான்* மதுவார்சோலைபுத்தரமதுரைப்பிறந்தமாயனே* ॥ க௦ ॥

பிறந்தமாயா பாரதம்பொருதமாயா நீயின்னே* சிறந்தகாற்றீநீர்வான்மண்பிறவுமாய பெருமானே* கறந்தபாலுண்

ஆ—(இதுவோபொருத்தம்) திருவாழியையின்னுகவுடைய திவ்யாயுதமாகிற மீதுவைபவத்தையுடையவனே ஆஸ்ரிதருடைய ஆபத்துக்கு உதவவருகைக்கீடான பெரியதிருவடியை திவ்யவாஹநமாகவுடையவனே இதுவோமுடிந்ததென்றென்றேங்கிபழுதக்கால் ஆஸ்ரிதஸம்ரக்ஷணம் பண்ணுகையாலே ஸம்ரக்ஷணஸ்வபாவனாக மதுவார்சோலை புத்தரமதுரைப்பிறந்த ஸௌலப்யசாலியனே நீயெதுவாக நினைத்திருக்குமென்கிறார். ॥ க௦ ॥

(பிறந்தமாயா) ஸாரதியாகவும், தூதனாகவும், ஸ்ரீமதுரையிலே பிறந்தருளின ஆஸ்ரிதவத்ஸலனே, நீயிப்படி ஸர்வஸ்வதந்த்ரனாயிருந்துவைத்து உன்னைக்காட்டியருளுகின்றிலை இனியுன்னை யெங்கேகாண்கேனென்கிறார். ॥ ய ॥

இ— (திவ்யாத்யாதியால்) இருஞ்சிறையென்கிறவிசேஷணத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆஸ்ரிதருடையவித்யாதியால்) இதுவோபொருத்தமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இதுவோமுடிந்ததென்று) பொறைதீர்ப்பானென்கிறவிடத்தில் ஸம்பந்தத்தை யருளிச்செய்கிறார் (ஆஸ்ரிதஸம்ரக்ஷணத்யாதியால்) இம்மாஞாலம்பொறைதீர்ப்பானென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸம்ரக்ஷணத்யாதியால்) எதுவேயாகவித்யாதியாலே தாமித்தனைகூப்பிடச்செய்தேயும் அவன்வாராதொழிந்தவாறே நம்பக்கலவனெது நினைத்திருக்கிறானோவென்று ஸம்சயமாக விசாரிக்கிறாரென்று ஸம்கதியுக்தி. ॥ க௦ ॥

**✻ பத்தாம்பாட்டு. ✻**

பிறந்தமாயாவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸாரத்யாதியால்) இதில் தூதனாக என்கிறவித்தாலே "பாரதம்பொருதமாயா" என்கிறத்தின் தாத்பர்யமுக்தம். நீர்தீவான்மண்ணாத்யாதி பெருமானேயென்பதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நீயிப்படியித்யாதியால்) கறந்தவித்யாதிபெருமாயாவித்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உன்னையித்யாதியால்) நாம் ஸர்வஸ்வதந்த்ரஸ்

ஸ—யோவுன்னுடைய ஆஸ்ரிதஸம்ரக்ஷணஸ்வபாவம், ஸஜ்ஜனங்கள்பக்கல் ஸம்ரக்ஷணமும் போய்யோவென்றபடி. என்றென்று - இப்படிசொல்லிச்சொல்லி, ஏங்கிபழுதக்கால் - ஸர்வதா, இதுக்கு எதுவேயாகக் கருதுங்கொலென்கிறத்தோடே அந்வயம். இம்மாஞாலம் - இந்தமஹாப்ருதிவியினுடைய, பொறை - பாரத்தை, தீர்ப்பான் - தீர்க்கைக்கு இச்சையுடையவனாய்க்கொண்டு, இதுக்குப் பிறந்தஎன்கிறத்தோடே அந்வயம். மதுவார்சோலை - தேனாறுபாய்கிற உத்யானங்களையுடைத்தான, உத்தரமதுரை - உத்தரதிக்கிலுண்டானதான ஸ்ரீமதுராநகரியிலே, பிறந்த - அவதரித்தவனான, மாயன் - ஆஸ்ரிதவத்ஸலன், "தேவகீபூர்வஸந்த்யாயாமாவிர்பூதம் மஹாத்மநா" என்கிறபடியே ஸர்வேஸ்வரஸ்வபாவங்களோடே பிறந்த ஸௌலப்யகுணசாலியென்றபடி. எதுவேயாகக்கருதுங்கொல் - எதுவாகநினைத்திருக்குமோ, என் (கண்ணாரக்காண) கண்ணனீர்மார) வருவதாக நினைத்திருக்கிறானோ, கூப்பிட்டேபோவனென்று நினைத்திருக்கிறானோ அழுதேபோவனென்று நினைத்திருக்கிறானோ வென்றபடி. ॥ க௦ ॥

பிறந்தமாயா - ஸ்வாஸாதாரணதிவ்யஸம்ஸ்தானத்தை தேவமநுஷ்யஸஜாதீயமாக்கிக்கொண்டு பிறந்தஸௌலப்யசாலியனே, பாரதம் - பாரதயுத்தத்தை, பொருத - யுத்தம்பண்ணினவனான, "ஓடுநவாதம்வைத்தீ" திவ்யஸாரத்யத்தைச் செய்தருளினவனானவென்றபடி. மாயா - ஆஸ்ரிதவத்ஸலனே, ஆபத்யமெடுத்தல், பகலையிரவாக்குதலான ஆஸ்சர்யசேஷ்டிதங்களையுடையவனே என்றபடி. சிறந்த - ஸ்ரேஷ்டமான, காரணகார்யங்களாலே ஸகிம்பிதமானவென்றபடி, கால் - வாயு, தீ - அக்நி, நீர் - ஜலம், வான் - ஆகாசம் - மண் - ப்ருதிவீ, பிறவுமாய் - அந்யங்களுமாயிருக்கிற, வாய்வாதிகார்யங்களான தேவதிர்யங்மநுஷ்யாதிபதார்த்தங்களுமாயிருக்கிற வென்றபடி. தத்ஸரீரகனாயிருக்கிறவென்கை. பெருமானே - ஸர்வேஸ்வரனான, நீயின்னே - நீயிப்படியிருக்கச்செய்தே, நீயிப்படி ஸர்வஸக்தனாயிருந்துவைத்துமென்றபடி. கறந்த - கறந்தஸத்யமான, காமதேனுநாதி க்ருதபரிணாமவிஷயமானவென்றபடி. பாலுள் - க்ஷீரத்துக்குள், நெய்

மூ—ணைப்பேபோலிவற்றுளெங்குங்கண்டுகொ* ளிறந்துநின்றபெருமாயாவுன்னையெங்கேகாண்கேனே* ||௰|
எங்கேகாண்கேனீன்றுழாயம்மான்றன்னையானென்றென்* றங்கேதாழ்ந்தசொற்களாலந்தண்குருகூர்ச்சட கோபன்* செங்கேழ்சொன்னவாயிரத்துளிவையும்பத்தும்வல்லார்க* ளிங்கேகாணவிப்பிறப்பேமகிழ்வரெ ல்லியுங்காலையே* ஆழ்வார் திருவடிகளேசரணம். ||கக||

ஆ—(எங்கேகாண்கேன்) எங்கேகாண்கேனீன்றுழாயம்மான்றன்னை யானென்றென்றங்கே ஆர்த்தஸ்வரமாய் வெளிப்ரத்யக்ஷமான சொற்களாலே அந்தண்குருகூர்ச்சடகோபன் ஸுஸ்வரமாகச்சொன்ன வாயிரத்துளிவையும் பத்தும்வல்லார்கள் இந்தலோகத்திலே இஜ்ஜந்மத்திலே யெல்லாருங்காண வெம்பெருமானை யெப்போதுங்காணப்பெற்று மகிழ்வரென்கிறார். திருக்குருகைப்பிரான்பிள்ளான்திருவடிகளேசரணம். ||கக||

இ—ஸ்திதனுபிருக்கச்செய்தே இப்போதாகவர்வேணுமென்கிறதென்னென்ன? அதுக்கு உத்தரஞ்சொல்லுகிறுரென்று ஸம்கதிஸந்தர்பிசெத. ||ம||

✳ நிகமனம். ✳

அங்கேதாழ்ந்தசொற்களாலென்கிறவிடத்து லக்ஷணவிலக்ஷணத்தை யருளிச்செய்கிறுர் (ஆர்த்தநாதஸ்வரமென்று) தாழ்ந்தவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறுர் (வெளிப்ரத்யக்ஷபால்) வெளிப்ரத்யக்ஷமாக விஷயதிஸ்ஸாரஸ:. செங்கேழென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறுர் (ஸுஸ்வரத்யக்ஷபால்) ||கக||

ஸ—பேபோல்- நெய்ப்போலமபோல, ஸாத்ருஶ்யேக்ஷீரவந்ந்யவஸ்தகைஷ்ஷ:. க்ஷீரம் கண்ணுலேகாணப்படச்செய்தே அதிலுள்ளிருக்கிற நெய்போலும் காணவரிதானுப்போலென்றபடி. இவற்றுளெங்கும் - காணப்படுகிற ஸமஸ்த ஸாதிகவஸ்துக்களெங்கும். இதுக்கு நின்றவென்கிறத்தோடே யந்வயம். கண்டுகொள் - கண்டுகொள்ளு வதாக. இறந்து - இல்லாமல், கண்ணுலே காண்கையில்லாதவனை யென்றபடி. “வ்யாப்யவயவஸ்திதம்ருஷ்ண ஸஞ்சிதம்யஸ்திதம்ஜ்ஞாநம் | ஸதஸச்சாபி தத்ஸநாதநமந்தம்” என்கிறபடியே ஸத்ஸ்ர ஷாந்தத்தால் ஸயிததுக்காணுமத்தனையொழிய கண்ணுலேகாணவரியனென்றபடி. நின்ற - இப்படிவ்யா பகனாயிருந்தவனை, பெருமாயா - ஸர்வாஶ்சர்யபூதனே, உன்னை - இப்படி நித்யஸந்நிதனாயிருந்தே துர்லபனானவுன்னை, எங்கேகாண்கேன் - எவ்விடத்திற் காணக்கடவேன், திருநாட்டிலேகாண்கைக்கு ப்ராப்தியுண்டாயமறவேணும், அவதாரங்களுக்குப் பிற்பாடனுப்விட்டேன், அர்ச்சாவதாரம் நான்நினைத்தபடி ஸம்ஶ்லேஷாதிகளைச்செய்யாது, அந்தர்யாமிவிக்ரஹம் ப்ரத்யக்ஷவிஷயங்கள் கண்ணுக்குவிஷயமன்று, இனி இவ்வி ழவோடேமுடிந்துபோமித்தனையாகாதேயென்றுகருத்து. ||ம||

ஈன்- ஸ்நிக்தமான, நிரதிஶயபோக்யமான வென்றபடி. துழாய்- ஸர்வேஶ்வரத்வவிஹமான திருத்து ழாயை யுடையவனை, அம்மான்தன்னை ஸர்வேஶ்வரனை, யான்- கண்டல்லது தரிக்கமாட்டாதபடி யவ னானநான், எங்கேகாண்கேன்- எங்கேகாணக்கடவேன், என்றென்று- இப்படி நிரந்தரமாகச்சொல்லிச் சொல்லி, ஒருக்கால் சொல்லிப்ஆறியிருக்க மாட்டாதே, ஸாஹத்தளவுமிப்படியே சொல்லாநிற்பரித்தனையிறே. அங்கே- தோளுந்திருத்துழாய்மாலையுமான வவனுடையவழகிலே, தாழ்ந்த- ஆர்த்தங்களான, சொற்க ளால்- ஸூக்திகளாலே, இதுக்குச்சொன்ன வென்கிறதோடே யந்வயம். அம்- ஸுந்தரமான, தண்- ஶீதள மான, ஸாம்ஸாரஸந்தாபஹரமான வென்றபடி. குருகூர்- திருநகரியில, சடகோபன்- ஸர்வ வைஷ்ணவநிர்வாஹகர்கள் பக்கல் கௌரவமுடையரான ஆழ்வார், செங்கு- ஸுஸ்வரம், ஏழ்- எழும்படி, ஸுஸ்வர மாகவென்றபடி. ஶ்ரோத்ருக்ஷயங்க ளோக்யமாகவென்றபடி. சொன்ன- அருளிச்செய்ததான, ஆயிரத்துள் இவையும் பத்தும் வல்லார்கள்- இவையும் என்கிறவிடத்தில் உம்மை இத்திருவாய்மொ ழியில் சொன்ன ஸாதவம் துர்லபமாகையாலே, இவற்றையும் சிலர் அப்யஸிக்க வல்லரோவென்றிவ ற்றினுடைய வைலக்ஷண்யத்யோதநார்த்தம். பத்துமென்கிறவிடத்தில் உம்மை இத்தஶகத்தினுடைய கா ர்த்ஸ்ந்யார்த்தம். இங்கே- இந்தலோகத்திலேதானே, காண- எல்லாருங்காணும்படியாக, ப்ரத்யக்ஷமாக வன் றிக்கே ஸாக்ஷாத்காரமாகவென்றபடி. இப்பிறப்பே- இந்த ஜந்மத்திலேதானே, எல்லியும்- ராத்ரியும், காலை யும்- பகலும், விவாராத மொழியாதே என்றபடி. மகிழ்வர்- ஆநந்திப்பார்கள், ஸர்வதாஸமாநு பவித்தர்வார்களென்றபடி. ப்ரஜ்ஞாநவைராக்யநிஷ்ணாதமோகாதஜ்ஞாநஸேவிகாயநம:. ||கக||

ஶ்ரீ:
த்ரமிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி:
(மாயக்கூத்தா.)

ஶுப்ரஸ்மேராத்விகத்வாத் ஸாந்த்ரகிரீடதயா ஸ்வாம்யதோ தோயஶாயித்வதஶ்ச।
நீலஸ்நிக்தத்வதஶ்ச ஶ்ரிதஸம்மோஹதயா பத்மஸம்பந்நேத்ராதிமத்வாத்
ஸாரத்யாத் ஸ்வாப்ரஸந்நேர்த்தராபாரஹாரித்வதோ ஞானதத்வைகபோதாத்
ஜீவாபேக்ஷாவ்யாப்தேஶ்சா பி ச தயிதரக்ஷாதி த்ருஶ்யோ ஹரிணீ ॥௯௯॥

(ஶுப்ரஸ்மேராத்விகத்வாத்) மாயக்கூத்தாவாமனா - ஶுப்ரங்களாய் ஸ்மேரஹாஸிகளான வெண்பற்களையுடையனாகையாலும், (ஸாந்த்ரகிரீடதயா) சுடர்ச்சோதிமுடிசேர் சென்னியம்மானே - நிரவதிகதேஜோயுக்தமான திருவபிஷேகத்தையுடையனாகையாலும், (ஸ்வாம்யத:) முடிசேர்சென்னியம்மான் - அத்திருவபிஷேகத்தாலே ஸர்வஸ்வாமித்வந்தோற்ற நிற்கையாலும், (தோயஶாயித்வதஶ்ச) நீர்கடலுள் துயில்வானே - அநிருத்தரூபியாய் ஸமுத்ரத்திலே கண்வளர்ந்தருளுகையாலும், (நீலஸ்நிக்தத்வதஶ்ச) மாநீர்க்கொண்டல் வண்ணனே - நீலஜலதநிபமான திருநிறத்தையுடையனாகையாலும், (ஶ்ரிதஸம்மோஹதயா) கொண்டல்வண்ணா குடக்கூத்தா - க்ருஷ்ணனாயவதரித்து ஆஶ்ரிதர்க்கு ஸம்மோஹனனாயிருக்கையாலும், (பத்மஸம்பந்நேத்ராதிமத்வாத்) செந்தண்கமலக்கண்கைகாலினாய் - செந்தாமரைப்பூத்தாப்போலேயிருக்கிற திருக்கண்மலரையும், திருக்கைகளையும், திருவடிகளையும், நிரவதிகநிரதிஶய ஸௌந்தர்யயுக்தமான திருமேனியையுமுடையனாகையாலும், (ஸாரத்யாத் ஸ்வாப்ரஸந்நே:) தக்கவைவர்தமக்காயின்று - ஆஶ்ரிதனான அர்ஜுநனுக்கு ஸாரத்யத்தைப்பண்ணுகையாலும், (தராபாரஹாரித்வத:) இம்மாஞாலம்பொறைதீர்ப்பான் - வடமதுரையிலேயவதரித்து பூமியினுடையபாரத்தை ஶமிப்பிக்கையாலும், (ஞானதத்வைகபோதாத்) அந்தமிலாவுள்ளெய்யேபோலிவற்றுளெங்குங்கண்டுகொள் - க்ஷீரத்திலே வ்யாப்தமிருக்கிறப்போலே எல்லாவஸ்துக்களிலும் வ்யாப்தனாயிற்கையாலும், எம்பெருமான் ரக்ஷிக்குமிடத்தில் சேதநருடைய அபேக்ஷாப்ரதீக்ஷனாயிருக்கிறானென்று "மாயக்கூத்தா" என்கிற தஶகத்திலே மாறன் அருளிச்செய்தாரென்கிறார். ॥௯௯॥

ஶ்ரீமதே நிகமாந்த மஹாதேஶிகாய நம:.

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

எட்டாம்பத்தில் ஐந்தாந்திருவாய்மொழி முற்றிற்று.

# ஆறாந்திருவாய்மொழி.

ஆ—(எல்லியுங்காலையும்) எம்பெருமானென்னுடைய விடாயெல்லாந்தீரும்படி யருள்செய்தருளினன். ஒருவன் செய்தருளினபடியேயென்றென்று நினைத்துக்கிடக்கும்படி யருள்செய்தருளினன், அவ்வருள்தானென்றால்

ஆறாந்திருவாய்மொழி.

முதற்பாட்டு.

இ— நல்லவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (விடாயெல்லாந்தீரும்படியென்று) ஸ்வயமேவாகத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஒருவனின்றாயால்) பாட்டில்வ்யவதாந ஏகவாக்யமாயிருக்க தகுநேதாதம் வாக்யபேதமாய் வ்யவச்சேதத்து அருள்நல்லதென்றும் அது யாவதாத்மபாவியமென்று மிவ்வர்த்தபத்திலும் இவ்வ்யவச்சேதத்துக்குத் தாத்பர்யமென்று வ்யஞ்ஜிப்பிக்கைக்காக. பாஹ்யஸம்ஶ்லேஷவிஶ்லேஷயாலே க்ருதஜ்ஞாதரராயிருந்த ஆழ்வார் நல்லவருளென்றும் யாவதாத்மபாவியமென்று மித்தனை கொண்டாடுகைக்கு விஷயம் திருக்கடித்தானத்தில் ஸந்நிதானவிஶேஷமாக மாட்டாமையால் இவ்வுத்தரார்த்தம் ஸங்கதமன்றோவென்று ஶங்கிக்கிறார் (அவ்வருளின்றாயால்) எதுவென்றது ஜேஷ்டமமோனவாக்யம், திருக்கடித்தானத்தில் ஸந்நிதானவிஶேஷமும் ஸம்ஶ்லேஷாந விஷயமாகாதென்று ஜேஷ்டமம். இவ்வுத்தரார்த்தம் ஸங்கதமாம்படி இதுக்குத் தாத்பர்யமருளிசெய்கிறார்

மூ— எல்லியுங்காலையுந்தன்னைநினைந்தெழ* நல்லவருள்கணமக்கேதந்தருள்செய்வா* னல்லியந்தண்ணந்துழாய்முடியப்பனூர்* செல்வர்கள்வாழுந்திருக்கடித்தானமே* ॥க॥

ஆ— முன்னம்திருக்கடித்தானத்திலே வந்துபுகுந்தருளினனென்கிறார். ॥க॥
(திருக்கடித்தானமும்) பின்னையுஞ்செய்தருளுகிறான், திருக்கடித்தானத்தையும் என்னெஞ்சையுமொக்க,

இ—(முன்னமித்யாதியால்) முன்னமென்றதுக்குமேல்பாட்டுக்களிலருளிச்செய்யப்புகுகிற உபகாரவிசேஷங்களுக்கும் மேல்த்திருவாய்மொழியில் அருளிச்செய்யப்புக்கிற ஸம்ஶ்லேஷத்துக்கும் முன்னமென்றுகருத்து. இப்படி திருக்கடித்தானத்தில் அவன்வந்துநிற்கிறவிது பஹுவிதோபகாரஸாத்ய ஸம்ஶ்லேஷவிசேஷ ப்ரகாஶகமாயிருக்கிறதாகையாலே இது ஆழ்வார்க்கிப்போதுமிகவும் ஸ்வாபநவிஷடமாகவற்றுகையாலிவ்வுத்தராஸம் ஸங்கதமென்றதாயிற்று. இத்தாலித்திருவாய்மொழிக்கு ஸங்கதி ஸூசிதையாயிற்று. எங்ஙனேயென்னில்? மாயக்கூத்தனிலாழ்வாருடைய ஆர்த்தியைக் கேட்டு தத்க்ஷணமவருடைய ஆர்த்திதீரும்படி ஸம்ஶ்லேஷித்தருளுகைக்காக வருகையிலே உத்யுக்தனானவெம்பெருமான் இனி நாம் கடுகேவந்நாட்டில் ஸம்ஶ்லேஷித்தவிதிவேகத்தாலே தடுமாறியழியும்படியாய்ப் படுவாராகையாலே ப்ரீதியையுத்பாதிப்பித்துப் பின்பு ஸம்ஶ்லேஷிக்கவேணுமென்று பார்த்து பதினாலாண்டு பிரிவாலேநொந்த ஸ்ரீபரதாழ்வானுக்குத் தாமெழுந்தருளின ப்ரீதியாதித்தபின்பு திருவயோத்யையிலே புக்கருளுகைக்காகத் திருவடியை முற்படப்போகவிட்டு பெருமாள்தாம் ஸ்ரீபரத்வாஜாஶ்ரமத்திலே விட்டிருந்தருளினப்போலவும், ஸ்ரீவஸுதேவர்திருமகன் தூதுஎழுந்தருளுகிறபோது தேவேஶ்வரரான ஸ்ரீவிதுராதிகளுக்குத் தானெழுந்தருளின ப்ரீதியாதித்தபின்பு ஹஸ்திநாபுரத்திலே புக்கருளுகைக்காக "காஶ்யாம் நிவஸதிஸ்ம ப்ராதரிஷ்யதி" என்கிறபடியே காஶ்யத்திலே விட்டருளியிருந்தாப்போலவும் ஆழ்வாருக்குத் தானெழுந்தருளின ப்ரீதியாதித்தபின்புவந்து ஸம்ஶ்லேஷிக்கைக்காகத் திருக்கடித்தானத்திலே வந்துபுகுந்தருளி யிவர்பக்கல் அதிவ்யாமோஹமிருக்கிறபடியை யிவரநுஸந்தித்து ப்ரீதராய் இதைப்பேசி யநுபவிக்கிறாரென்று இங்கேஸூசிதமாகிறது. இத்தாலித்திருவாய்மொழிக்கு "ஸவிதாஸஜ்ஜக" மென்கிறமஹாவக்ஷணம் ப்ரதிபாத்யமென்றதாயிற்று. ॥க॥

✳ இரண்டாம்பாட்டு. ✳

திருக்கடித்தானத்திலிருப்பை யிப்பாட்டிலுஞ்சொல்லுகை பௌநருக்த்யமன்றோவென்ன விங்கு தலைதீர்க்கமான உபகாரவிசேஷத்தைச்சொல்லுகையிலே தாத்பர்யமென்றுகாட்டுகிறார் (பின்னையுமித்யாதியால்) (செய்தருளுகிறான்) ஒருஉபகாரவிசேஷத்தை உதிசேஷ: உமக்கு ப்ரதிபந்தகங்கள் உநகங்

ப— அல்லியம்- புஷ்பங்களாலே அழகியதான, அல்லி- புஷ்பம், புஷ்பஶோபாநுஷக்ததயா அதிஸுந்தரமான வென்றபடி. தண்- ஶீதளமான, அம்- ஸுகந்தவிஸ்தாரமான, துழாய்- திருத்துழாயை, முடி- திருமுடியிலே யுடையவனான, அப்பன்- ஸ்வாமியானவன், கீழ்த்திருவாய்மொழியிலே "மொய்பூந்தாமத்தண்டுழாய்கடிசேர்கண்ணிப் பெருமானே" என்றுநானசைப் பட்டபடியேவந்து தோற்றின ஸ்வாமியானவனென்றபடி. எல்லியும்- ராத்ரியும், காலையும்- பகலும், ஸர்வதாவு மென்றபடி. தன்னை- என்பக்கல் நிர்ஹேதுகஸௌஹார்த்தத்தைப்பண்ணின தன்னை, நினைந்து- இதென்ன ஸௌஹார்த்தமென்று விஸ்மயாவஹனாய் ஸ்மரித்துஸ்மரித்து, எழ- எழும்படி, உஜ்ஜீவிக்கும்படியென்கை. நல்ல- நல்லவையான, என்னுடைய விடாயெல்லாந்தீரும்படியான என்றபடி. அருள்கள்- க்ருபைகளை, நமக்கே- மற்றொருவருக்குக் கிடையாதபடி நமக்கே அஸாதாரணமாக, தந்து- ப்ரகாஶித்தருளி, க்ருபாகார்யங்களைச் செய்தருளியென்றபடி. அருள்செய்வான்- மேல்இடைவிடாதே க்ருபாகார்யங்களைச் செய்தருளாநிற்கிறான், ஊர்- இப்படி உபகாரியாயிருக்கிறவனெழுந்தருளியிருக்கிற திவ்யநகரம், செல்வர்கள் வாழும் திருக்கடித்தானம்- ஸ்ரீமான்கள் வாழ்கிற திருக்கடித்தானம், "லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந:" என்கிறபடியே அவிஶ்லேஷமஹாஸம்ஶ்லேஷ ஸம்பத்தையுடையவரான ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸதாதநஸ்ய கைங்கர்யங்களாலே நித்ய ஸ்ரீமான்களாய் வர்த்திக்கிற திருக்கடித்தானமென்றபடி. ॥க॥

மூ — திருக்கடித்தானமுமென்னுடைச்சிந்தையு* மொருக்கடுத்துள்ளேயுறையும்பிரான்கண்டீர்* செருக்கெடுத் தன்றுதிகைத்தவரக்கரை* யுருக்கெடவாளிபொழிந்தவொருவனே* ॥௨॥

ஒருவரிருவரோர்மூவரெனநின்று* உருவுகரந்துள்ளுந்தோறுந்தித்திப்பான்* திருவமர்மார்பன்திருக்கடித் தானத்தை* மருவியுறைகின்றமாயப்பிரானே* ॥௩॥

ஆ — தனக்கிருப்பிடமாகக்கொண்டருளினான். அவனாரென்னில்? செருக்கெடுத்தன்றுதிகைத்தவரக்கரை யுருக் கெடவாளிபொழிந்த அத்விதீயன், கண்டீரென்கிறார். ॥௨॥

(ஒருவர்) பின்னையுமொருவரா யிருவராய் மூவராய்த்தோன்றி உருவுதெரியாதபடிவந்து வாளிபொழிந்த வனென்று அவன்சிகலையே அநுபவித்து அதுக்குமேலே இன்று திருக்கடித்தானத்திலு மென்னெஞ்சிலும்

இ — களாயிருக்க இப்படி அநுஸந்திக்கமாட்டானென்கிற வைதர்ம்யத்தைக் காட்டுகிறார் (அவனாரென்னி லென்று) ஆரென்று ஸாக்ஷேபம். ஒருவனுமாகமாட்டானென்றபடி. ராவணாதிநிரஸநம்பண்ணின ஸஹாயீரநனையாலே என்னுடைய அபாயங்களையும் நிச்சேஷமாக்கினானென்கிறாரென்று நினைத்தருளிச்செய் கிறார் (செருக்கெடுத்தித்யாதியால்) ॥௨॥

✳ மூன்றாம்பாட்டு ✳

உபாயோத்ஜவ்யூத்தாகமாகையாலே "வக்ஷ்யே வஹாமொணவ ! ஷ்யாஜநம்வாரநிவாஸிநம்" என்கிறப டியே யாழ்வாரை மேல்போகவொட்டுகிறதில்லையென்று நினைத்தருளிச்செய்கிறார் (பின்னையுமித்யாதியால்) பின்னையுமென்கிறதற்கு அநுபவித்துஎன்கிறதோடந்வயம். திருக்கடித்தானத்தில் திவ்யஸம்ஸ்தானமொன் றேயாயிருக்க இருவர்மூவரென்கையும் அதிப்போது அநுபவமொவ்வாமாயிருக்க உருவுகரந்து என்கையும் ஸம்பதமல்லாமையால் கீழ்ச்சொன்ன வாளிபொழிந்தவிஷயிலே இதுக்கந்வயமாகவேணுமென்று நினைத்த ருளிச்செய்கிறார் (வந்தித்யாதியால்) சிகலை - வ்யாபாரத்தை, கீழ்ப்பாட்டிற்சொன்னதில்க்காட்டில்

ஈ — செருக்கு - மதம், எடுத்து - தலையெடுத்து, உத்கடமாயென்றபடி. வரபலஜூஹபலங்களுக்கடியாகத்தா லே மதம்அதிகமாயென்கை. திகைத்த - ஜொஷித்தவரான, சக்ரவர்த்தித்திருமகனை ஜயிக்கலாமென்று த்ரு ஷித்த மதிகேடரான வென்றபடி. அரக்கரை - ராக்ஷஸர்களை, ராவணாதிகளைக்குறித்து என்றபடி. இதுக் குப்பொழிந்தவென்கிறதோடே யந்வயம். அன்று - அக்காலத்தில், ரிவ்ருத்தாஜவியஹீநனான தன்திருவுள் ளத்திலும் நீரிலேநெருப்பெழுந்தாப்போலே சீற்றம்விளையும்படி அவர்கள் அபசாரங்களைப்பண்ணின அந் தகாலத்திலே, உருக்கெட - ரூபங்கெடும்படி, "ஹிநம்ஹிநம்ஸ்ரோத்தூ" என்கிறபடியே யவர்கள்ஸ ரீரங்களழியும்படியென்கை. வாளி - பாணங்களை, பொழிந்த - "ஸரவர்ஷம்வவர்ஷஹ" என்கிறபடியே வர்ஷித்தவனான, ஒருவன்கண்டீர் - ஏகவீரன்கண்டீர், கண்டீரென்றது ஸகலஜநாதிவ்யக்திஜ்ஞாந ஸ்வாபாவிகத்வஸூசகம். திருக்கடித்தானமும் - அந்ததிவ்யதேசத்தையும், என்னுடைச்சிந்தை யும் - என்னுடையசித்தத்தையும், ஒருக்க - ஒருபடிப்பட, எடுத்து - ஸ்வீகரித்து, இரண்டையுமேகரூப மாக அபிமானித்தென்றபடி. இரண்டிலுமேகரூபமாக ஆஸக்திசெய்தருளியென்கை. உள்ளே - இவற்றுக்குள் ளே, உறையும்பிரான் - வஸிப்பதற்குஉபகாரகன். ॥௨॥

ஒருவர் இருவர் ஓர்மூவரெனநின்று - ப்ரதமபாதத்தோடு யுத்தம்பண்ணியருளுகிறபோது ப்ரதமம்ஒருவ ராய், பின்பு ஸம்ப்ரமாதிவேகம் விஞ்சவிஞ்ச இருவர்மூவரென்னும்படிநின்று, அநேகரூபனாய்த்தோன்றி என்றபடி. உருவுகரந்து - அதிதீவ்ரமான ரூபமமறைந்து, வக்ஷ்யாமிதி யவஸ்யோதத்துக் அவகாசமில்லாதபடி யாதிவேகம்பின்னையு மதிகமானவாறே நிரதிசயதேஜோரூபமான திவ்யஸம்ஸ்தானமும் அத்ருஸ்யமாயெ ன்றபடி. வாளிபொழிந்தவனென் றநுஸந்திப்பது. ஸரங்களைவர்ஷித்தவன், திரு - ஸ்ரீயானவள், அமர் - அமர்ந்திருக்கிற, மார்வன் - வக்ஷஸ்ஸையுடையவனைக்கொண்டு, அந்த வீரஸ்ரீயோடே வந்தானென்றபடி. லக்ஷ்மியைத் திருமார்பிலே யுடையவனைக்கொண்டு என்றபடி. திருக்கடித்தானத்தை - ஸ்தலம், மருவி - ஆஸ்ரித்து, உறைகின்ற - அங்கே நித்யவாஸம்பண்ணுகின்ற, மாயப்பிரான் - ஆஸ்சர்யசேஷ்டிதனான உபகார கனாய், உள்ளுந்தோறும் - அநுஸந்திக்குந்தோறும், உள்ளுகை - அநுஸந்திக்கை, தித்திப்பான் - போக் யனாகின்றான். ॥௩॥

மூ — மாயப்பிரானென் வல்வினைமாய்ந்தற* நேசத்தினால் நெஞ்சநாடுகுடிகொண்டான்* தேசத்தமரர் திருக்கடித்தானத்தை* வாசப்பொழில் மன்னுகோயில்கொண்டானே* ॥ ச ॥
கோயில்கொண்டான் றன் திருக்கடித்தானத்தைக்* கோயில்கொண்டானதனோடுமென்னெஞ்சகம்* கோயில்கொடெய்வமெல்லாந்தொழவைகுந்தம்* கோயில்கொண்டகுடக்கூத்தவம்மானே* ॥ ரு ॥

---

ஆ — பிராட்டியோடேகூடவந்து புகுந்தருளினானென்கிறார். ॥ ௩ ॥

(மாயப்பிரான்) இவன் திருக்கடித்தானத்தைக்காட்டிலு மென்னெஞ்சிலே வல்வினைகள் தீரும்படி ஸ்நேஹத்தைப்பண்ணிக்கொண்டு குடியாகவிருந்தருளினானென்கிறார். ॥ ச ॥

(கோயில்கொண்டான்) அங்குமிங்குமாயிருந்தருளுகையன்றியே ஸ்நேஹாதிசயத்தாலே திருக்கடித்தானத்தையுங்கண்டு என்னெஞ்சினுள்ளே புகுந்தருளினானென்கிறார். ॥ ரு ॥

---

இ — அதிசயித ஸந்நிதானவிசேஷத்திலே யிப்பாட்டுகளுக்குத் தாத்பர்யமென்று காட்டுகைக்காக அருளிச்செய்கிறார் (அதுக்குமேலேயென்று) கீழ்ப்பாட்டில்சொன்ன ஸந்நிதானத்துக்குமேலென்றபடி. உள்ளுந்தோறுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னெஞ்சிலுமென்று) திருவமர்மார்வன் என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பிராட்டியிஷ்டதியால்) ॥ ௩ ॥

*நாலாம்பாட்டு*

திருக்கடித்தானத்தை வாசப்பொழிலித்யாதியாலே உத்யானஸ்த்தமாகச்சொல்லி நெஞ்சைக்குடியாகச்சொன்னதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இவனித்யாதிகொண்டென்னுமளவாலே) இத்தால் கீழ்ச்சொன்ன ஸந்நிதானத்திற்காட்டில் அதிகமான ஸந்நிதானஞ்சொல்லுகிறதென்று ஸங்கதிஸூசிதமென்க. நெஞ்சிலே என்கிறதற்கு ஸ்நேஹத்தையித்யாதிபோடே யபிப்ராயம். ஸ்நேஹசப்தத்தாலே நேசத்தினாலென்கிறவிதமும் வ்யாக்யாதம். ॥

*ஐந்தாம்பாட்டு.*

இப்பாட்டுக்கெல்லாம் அதீயவாதாத்பர்யத்திலே தாத்பர்யமென்றுநினைத்து தாத்பர்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அங்குமித்யாதியால்) ॥ ரு ॥

---

பப — தேசத்தமரர் - தேஜஸ்ஸையுடையவரானவமரருடைய, தேசம் - தேஜஸ்ஸு, தேசமுடையவர் - தேசத்தார், தேசத்தமரரென்று ஸமஸ்தபதம், நித்யாநுபவத்தாலே தேஜிஷ்டராயிருக்கிற நித்யஸூரிகளுக்கு ப்ராப்யமானவென்றபடி. திருக்கடித்தானத்தை - ஸ்வஷ்டம். வாசப்பொழில் - வாஸனையுடையவையான உத்யானங்கள், வாஷ்பவரிசுகந்தவ்யாபாரங்களான உத்யானங்களென்றபடி. மன்னு - மன்னியிருக்கிற, நித்யமாகவுண்டாயிருக்கிறவென்றபடி. கோயில் - வாஸஸ்தானமாக, உத்யானஸ்தவமாகவென்று பாடாக்ஷரம். கொண்டான் - பரிக்ரஹித்தவனான, மாயப்பிரான் - ஸ்வரூபகுணசேஷ்டிதங்களையுடைய உபகாரகனான, என்வல்வினை - என்னுடைய ப்ரபலதுர்தைவங்கள், வினைசப்தமிங்கே லக்ஷணயாதுர்தைவபரம். காணவாராயென்றென்று கண்ணும்வாயுந்துவர்ந்து துவர்ந்துபட்டதுர்தைவமெல்லாமென்றபடி. மாய்ந்து - நசித்து, அற - நிச்சேஷமாம்படி, நேசத்தினால் - ஸ்நேஹத்தினாலே. த்ராவிடத்தில் யகாரசகாரயோ: அபேதத்தினாலே இப்பாட்டில்வாக்ய ஸாம்யத்திலும் அதீயவர்ணாநுப்ராஸத்துக்குக் குறையில்லை. நெஞ்சம்நாடு - நாடுபோலேவிஸ்தீர்ணமான என்னுடையநெஞ்சை, ஸம்ச்லேஷவிச்லேஷங்களை அநுஸந்தாநவித்துப் பெரியநாடுபோலேவளர்ந்திருக்கிற நெஞ்சையென்றபடி. ஸம்ச்லேஷங்களிலும் விச்லேஷங்களிலும் அவனுடையகுணசேஷ்டிதாதிகளை வளர்ந்தசெந்த அநுஸந்திக்கையாலே த்ருடதரஸம்ஸ்காரவாடவத்தால் அநவரததீயாநத்தக ஸ்வகுணசேஷ்டிதாத்யவகாஹநஸமர்த்தயா விசாலமானநெஞ்சையென்கை. குடிகொண்டான் - ஸபரிகரமாக நித்யவாஸம்பண்ணும்ஸ்தானமாகவபரிக்ரஹித்தான். ॥ ச ॥

கோயில்கொள் - கோயில்களைக்கொண்டவர்களாயிருக்கிற, எம்பெருமானைப்போலே தாங்களும் ஐமதாராப்ராஸகையாலே தனித்தனியேயொரு கோயில்களையுடையவர்களான வென்றபடி. தெய்வமெல்லாம - தேவர்களெல்லாம், அநந்தவிஷ்வக்ஸேநாதிகளெல்லாமென்றபடி. தொழ - ஸேவிக்கும்படி. வைகுந்தம் - ஸ்ரீவைகுண்டத்தை, கோயில்கொண்ட - தனக்குநிவாஸமாகவுடையவனான, குடக்கூத்தவம்மான் - க்ருஷ்ணாவதாரித்து குடக்கூத்தாடினஸ்வாமியானவன், திருக்கடித்தானத்தை - ஸ்வஷ்டம், கோயில்கொண்டான்தன் - தன்கோயில்

மூ—கூத்தவம்மான் கொடியேனிடர்முற்றவு* மாய்த்தவம்மான் மதுசூதவம்மானுறை* பூத்தபொழிற்றண்டிருக் கடித்தானத்தை* யேத்தநில்லா குறிகொண்மினிடரே* ॥௬॥

கொண்மின்னிடர்கெட வுள்ளத்துக்கோவிந்தன்* மண்விண்முழுது மளந்தவொண்டாமரை* மண்ணவர்தாந்

ஆ—(கூத்தவம்மான்) இஸ்ஸம்ருத்தியெல்லாம் திருக்கடித்தானத்தை யாஶ்ரயித்ததினாலே வந்ததென்னும்படி பாலே ஶயநமெடுத்தாகி ப்ரக்ருதிகுணநிரஸநம்பண்ணினாப்போலே ஸ்வகீயமாதுர்யவைஶிஷ்ட்யாவிஷ்காரத்தாலே ஸவிஶேஷஜ்ஞாநியான வென்னுடைய து:க்கத்தைப்போக்கியருளினவனுறைகின்ற திருக்கடித்தானத்தை யேத்தவாருங்கோளென்று ஸ்ரீவைஷ்ணவர்களையழைத்துக்கொண்டு அவர்களோடேகூடவேத்துமாஜிக்கிறார். ॥௬॥

✻ ஆறும்பாட்டு. ✻

இ— அவன் தம்பக்கல்பண்ணுகிற ஸகலஸம்ஶ்லேஷங்களை ஸகலாஸ்வாதகப்புக்கவிவர் திருக்கடித்தானத்தை யேத்துங்கோளென்று வஶீகரணோபாயம்பண்ணுகை யுக்தமன்றோவென்ன? வவதரிப்பிக்கிறார் (இஸ்ஸம்ருத்தியால்) வீதியாலேயென்கிறதற்கு ஸ்ரீவைஷ்ணவர்களையித்யாதியோடே யந்வயம். மதுசூதவம்மானென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஶயநாத்யாதியால்) கூத்தவம்மானென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸ்வகீயேத்யாதியால்) கொடியேனிடரித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸவிஶேஷேத்யாதியால்) தாஸீயவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஏத்தவாருங்கோளித்யாதியால்) ॥௬॥

ப—கொண்டானென்று மாறியமைப்பது. தனக்கு அஸாதாரணமான வாஸஸ்தானமாக வபிநிவேஶித்தவனைக் கொண்டு, அதனோடும் - அந்ததிருக்கடித்தானத்தோடேகூட, என்னெஞ்சம் - என்னுடையஹ்ருதயத்துக்குள்ளே, அகம் - உள்ளு, கோயில்கொண்டான் - வாஸஸ்தானமாகவபிநிவேஶித்தான், கோயிலுக்குவெளியில் செருப்பை வைத்துஉள்ளேபுக்குத் திருவடித்தொழுவாரைப்போலேயாக வொண்ணாதென்று திருக்கடித்தானத்தோடே என்னெஞ்சிலேபுகுந்தருளினானென்றபடி. ॥௫॥

கூத்தவம்மான் - கூத்தையுடைய ஸ்வாமியான, ஶ்ருங்காராதிரஸவைஶிஷ்ட்யங்களாலே லோகத்துக்கு ஸ்வாமியானவென்றபடி. கொடியேனிடர் முற்றவும் - க்ரூரனானவென்னுடைய து:க்கங்களெல்லாவற்றையும், இடர் - து:க்கம், காணவேணுமென்று மிகவும்விலக்ஷித்து க்ருதார்த்தம்பண்ணின க்ரூரனான வென்னுடைய விரஹது:க்கங்களையெல்லாமென்றபடி. மாய்த்தவம்மான் - போக்கினவென்ஸ்வாமியான, மதுசூதவம்மான் - ஶயநமென்கிற அஸுரனை நிரஸித்தாப்போலே ஆஶ்ரிதருடைய ப்ரதிபந்தகங்களை நிரஸிக்கும் ஸ்வபாவனான ஸர்வேஶ்வரன், உறை - உறையாநிற்கிற, நித்யமாக வஸியாநிற்கிற ஸ்தலமானவென்றபடி. பூத்தபொழில் - ஸர்வதோதிவ்யநமஸ்யமான, அவன் நித்யவாஸம்பண்ணுகையாலே நித்யவஸந்தமான உத்யானங்களையுடையவென்றபடி. கடாக்ஷவஶீக்ருதமாறிலாவிறே! ஸ்வாஸம்மாறலாவதென்று கருத்து. தண் - ஶீதளமான, ஸம்ஸாரதாபஶமநமான வென்றபடி. திருக்கடித்தானத்தை - ஸ்தலம். ஏத்த - ஸ்தோத்ரம் பண்ணினவளவிலே, இடர் - து:க்கங்களானவை, நில்லா - நிற்கமாட்டாதுகள், அதை ஸ்தோத்ரம்பண்ணவே து:க்கங்களெல்லாம் நமக்கிதுதேஶமன்றென்று சும்மெனாதேகைவிட்டோடும் என்றபடி. குறிக்கொண்மின் - லக்ஷ்யமாகக் கொள்ளுங்கோள், இது ஸாதாரணமென்றிராதே இதை நன்றாக த்ருஷ்டியுங்கோளென்றபடி. ஆகையால் திருக்கடித்தானத்தை ஸ்தோத்ரம்பண்ண வாருங்கோளென்று கருத்து. ॥௬॥

கோவிந்தன் - கோவிந்தனுடைய, திர்யக்குக்களுக்குங்கூட ஸுலபனானவென்றபடி. இதற்குத் தாமரையென்கிறத்தோடே யந்வயம். மண்விண் - பூமியையும் ஆகாஶத்தையும், முழுதும் - அதில் ஏகதேஶத்தும் விடாதே க்ருத்ஸ்நத்தையும், அளந்த - த்ரிவிக்ரமவேஷத்திலே அளந்தவையான, ஒண் - ஒள்ளியதான, ஸுதர்ஶநீயங்களானவென்றபடி. தாமரை - தாமரஸஸத்ருஶங்களை, ஒரு தாமரைப்பூவைக்கொண்டாயிற்று ஸர்வ த்ருஷ்டிக்ஷங்களையளந்துகொண்டது, ஸர்வஶரீரியோக்ஷி. திருவடிகளையென்றபடி. ஒண்தாமரையென்கிற விடத்தில் ணகாரரகாரஸ்ய தகாரஸ்யடகாராதேஶ:. மண்ணவர் - பூமியிலிருக்கிறவர்கள், இடக்கை வலக்கையறியாத ஸகலமநுஷ்யஜாதிகளெல்லாமென்றபடி. தாம்தொழ - தாங்களேதொழாநிற்க, தங்களுக்கே அஸாதாரணஸௌம்யமாக ஸேவியாநிற்கவென்றபடி. பரமபதம் நித்யர்க்கேயாயிருக்குமாப்போலே

மூ—தொழுவானவர்தாம்வந்து* நண்ணுதிருக்கடித்தானநகரே* ॥எ॥

தானநகர்கடலைச்சிறந்தெங்கெங்கும்* வானிந்நிலங்கடன்முற்றுமெம்மாயற்கே* யானவிடத்துமென்னெஞ்சுந்திருக்கடித்* தானநகருந்தனதாயப்பதியே* ॥அ॥

ஆ—(கொண்மின்) கோவிந்தனுடைய மண்விண்முழுதுமளந்த வொண்தாமரையை மண்ணவர்தாந்தொழுகிறபடியைக்காண்கைக்காக வானவர்தாம்வந்து நண்ணு திருக்கடித்தானநகரைநினையுங்கோள் இடர்கெடுமென்கிறார்॥ (தானநகர்கள்) இப்படி திருக்கடித்தானத்தையநுபவித்துப் பின்னையுந்தன்றிறத்துச் செய்தருளின நன்மையைச்சொல்லுகிறார். உம்முடையநெஞ்சும் திருக்கடித்தானமு மெம்பெருமானுக்கிருப்பிடமாகச்சொன்னீர் வானின்னிலங்கடல் முற்றுமவனுக்கிருப்பிடமல்லவோவென்னில்? அங்ஙனேயாகிலு மென்னெஞ்சுந் திருக்கடித்தானமு மவனுக்குப்பிறந்துடைய திருநகரியாயிருக்குமென்கிறார். ॥அ॥

---

✳ ஏழாம்பாட்டு ✳

இ— உள்ளத்துக்கொண்மினென்று கமயித்துத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நினையுங்கோளென்று) இத்தால் கீழ்ப்பாட்டில் ஏத்துங்கோளென்றார், இப்பாட்டிலே நெஞ்சாலே நினைக்கவமையுமென்கிறாரென்று ஸங்கதி ஸூசிதமாகை. ॥எ॥

✳ எட்டாம்பாட்டு. ✳

தாம்பெற்றஸம்ருத்திகளுக்கெல்லாம் நிதாநம் திருக்கடித்தானமென்னும்ப்ரீதியாலே அதைக்கொண்டாடாநின்றவிவர் அதோடொக்கத் தம்முடையநெஞ்சையு மவனுக்கிருப்பிடமாகச்சொல்லுகை யுக்தமன்றோவென்ன வவதரிப்பிக்கிறார் (இப்படியித்யாதியால்) ப்ராஸங்கிகம் பரிஸமாப்ய ப்ரக்ருத மநுஸரிக்கிறாரென்றபடி. ஆனாலும் திருக்கடித்தானமு மென்னுடைச்சிந்தையும் என்கிறவிரண்டாம்பாட்டிற்சொன்ன வர்த்தத்தைச்சொல்லுகிறதாகையாலே இப்பாட்டுவையர்த்த்யமன்றோவென்ன விதுக்குத் தாத்பர்யஞ்சொல்லுகைக்காக வவதரிப்பிக்கிறார் (உம்முடையவித்யாதியால்) தனதாயப்பதியென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பிறந்துடையவித்யாதியால்) பிறந்துடையது - தாயப்ராப்தமானது, திருக்கடித்தானமும் தம்முடையநெஞ்சமும் மற்றஸ்தலங்களிற்காட்டில் அவனுக்கு விசேஷாபிமாநவிஷயமென்கையிலே இப்பாட்டுக்குத் தாத்பர்யமாகையால் வையர்த்த்யமில்லையென்றதாயிற்று. ॥அ॥

✳ ஒன்பதாம்பாட்டு. ✳

திருக்கடித்தானத்திலே யவன் விசேஷாபிமாநியாயிருக்குமென்று கீழ்ப்பாட்டிற்சொன்ன வர்த்தத்தை "திருக்கடித்தானத்துளாயர்க்கதிபதி யற்புத"னென் றிப்பாட்டிலுஞ்சொல்லுகையாலே இதுவையர்த்த்யமன்றோ

---

கூ—உகந்தருளினதேசம் ப்ராயேண ஸம்ஸாரிகளுக்கேயாயிருக்குமென்று திருவுள்ளம். வானவர்தாம்வந்து- நித்யஸூரிகள்தாங்களேவந்து, ஸம்ஸாரிஜநங்களுக்கு ஸௌலப்யமிருக்கிற ஸௌசீல்யதர்சனத்தாலே ஆச்சர்யராய்க்கொண்டு அவசராய்த் தாங்களேவந்துவென்றபடி. இங்குள்ளார் பரமபதத்துக்குப்போவது பரத்வத்தையநுபவிக்கைக்காக, அங்குள்ளாரிங்குவருவது ஸௌசீல்யாநுபவம் பண்ணுகைக்காக வென்றுகருத்து. நண்ணு- கிட்டாநின்றுள்ள, திருக்கடித்தானநகர்- அந்தநகரத்தை, இடர்கெட- உங்களுடைய து:கங்கள் எல்லாம்கெடும்படியாக, உள்ளத்துக்கொண்மின்- ஹ்ருதயத்திலேகொள்ளுங்கோள், மநஸ்ஸாலே ஸ்மரியுங்கோளென்றபடி. கொண்மினென்கிறவிடத்தில் ளகாரஸ்யமகாரபரத்வே ணகாராதேச:. ॥எ॥

வான்- பரமபதமும், இந்நிலம்- இந்த பூமி, கடல்- க்ஷீரார்ணவம், எங்கெங்கும் முற்றும்- கண்ட கண்டவிடங்களெல்லாம், பரமபதபூமி க்ஷீரார்ணவங்களாகிற வெல்லாவிடங்களுமென்றபடி. தலைச்சிறந்து- தலையாகச்சிறந்து, தலையென்று உத்க்ருஷ்டம், சிறக்கை- அதிசயிதமாகை. மிகவும் ச்லாக்யங்களென்றபடி. எம்மாயற்கே- என்பக்கலிலே அதிநிவிஷ்டனான வாத்ஸல்யமூர்த்திக்கே, தானநகர்கள்- ஆவாஸஸ்தாநங்களான நகர்கள், ஆனவிடத்தும்- ஆனவிடத்திலேயும், அவை வாஸஸ்தாநங்களாயிருந்தாலும் என்றபடி. என்னெஞ்சும் திருக்கடித்தான நகரும்- ஸ்பஷ்டம். தனதாயப்பதி- தன்னுடைய தாயஸ்தாநம், தனக்கஸாதாரணமாய் தாயப்ராப்தமான ஸ்தாநமென்றபடி. இதையவன் தனக்கு தாயப்ராப்தஸ்தாநமாக அபிமாநித்திருக்கு மென்கை. ॥அ॥

மூ—தாயப்பதிகடலைச்சிறந்தெங்கெங்கும்* மாயத்தினான்மன்னிவீற்றிருந்தானுறை* தேசத்தமரர்திருக்கடித்தானத்து* ளாயர்க்கதிபதியற்புதன்றானே* ॥௯॥

அற்புதனாராயணனரிவாமன* னிற்பதுமேவியிருப்பதென்னெஞ்சக* நற்புகழ்வேதியர்நான்மறைநின்றதிர்*

---

ஆ—(தாயப்பதிகள்) எல்லாமவனுக்குத் தாயப்பதிகளன்றோவென்னில்? அதப்படியேயாகிலும் திருக்கடித்தானமென்று லவன்திருவுள்ளம் விழுந்துகிடக்கும்படி ஆஸ்சர்யமென்கிறார். ॥௯॥

(அற்புதன்) இப்படி திருநாடு திருப்பாற்கடல்தடக்கமாகவுள்ள திருநகரிகளெல்லாவற்றிலு மத்யஸ்ரேஷ்டமாயிருந்த திருக்கடித்தானத்திலேநிற்பது மேவியிருப்பதென்னெஞ்சமென்கிறார். ॥௰॥

---

இ—வென்ன வவதரிப்பிக்கிறார் (எல்லாமித்யாதியால்) வாக்யார்த்தத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அப்படியேயாகிலுமென்று) உத்தரார்த்தத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (திருக்கடித்தானமித்யாதியால்) தம்மோடுஸம்ஸ்லேஷத்தி லாஸக்தியாலே திருக்கடித்தானத்திலே யவன் விஸேஷாபிநிவேஸியாயிருக்குமென்று கருத்து. ॥௯॥

✳ பத்தாம்பாட்டு ✳

திருக்கடித்தானத்தை யவன் விஸேஷித்து விரும்பாநிற்குமென்று கீழ்ப்பாட்டிற்சொன்னவிடத்தில் அத்தைவிரும்புகைக்கு நிபந்தநம் தம்மோடுஸம்ஸ்லேஷத்தி லாஸக்தியென்னுமிடம் கண்ணாலுமன்றிக்கே அபிப்ராயமாத்ரமாயிருக்கையாலே அதை வெளியிடுகிறதாகையா லிப்பாட்டு கீழ்ப்பாட்டுக்குஸேஷமென்று ஸமதிகாட்டுகைக்காகக் கீழ்ப்பாட்டிலர்த்தத்தை அநுவதிக்கிறார் (இப்படியித்யாதியால்) இப்பாட்டுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (திருக்கடித்தானத்திலேயித்யாதியால்) ॥௰॥

---

ஏ— தாய- தாயமான, தனக்கு நிரூபாதிகஸ்வமான வென்றபடி. பதிகள் எங்கெங்கும்- ஸ்தாநங்களெல்லாவற்றிலும், இதுக்கு வீற்றிருந்தானென்கிறதோடேயந்வயம். தலைச்சிறந்து- தலையாயிருக்குமதொருபடி. அதிஸயிதனாய், ஸர்வோத்க்ருஷ்டமாயிருக்குமதொருபடி அதிஸயிதனா யென்றபடி. ஸர்வவிஷயஸௌஸீல்யாதிகுணஸாலியாயென்கை. மாயத்தினால்- ஆஸ்சர்யமான அபிநிவேஸத்தினாலே, அபிநிவேஸாநுபவஜ்ஞாநத்தாலே என்னுதல். “ஜ்ஞாநவயுநம்ஜ்ஞாந” மென்றதிறே. மன்னி- ஸ்திரமாய், விடாமலென்றபடி. வீற்று- வீறுமைபெற்று, வீறு- உத்கர்ஷம், பரவ்யூஹாதிகளைப் போலன்றிக்கே ஸௌலப்யோத்கர்ஷத்தையுடையவனாயென்றபடி. இருந்தான்- எழுந்தருளி யிருந்தவனானவென்றபடி. தேசத்தமரர்- ஸுவர்ணமயஸத்தாலே தேஜஸ்விகளான நித்யஸூரிகளுடைய, திருக்கடித்தானத்துள் - அவர்களுக்கு ப்ராப்யமான திருக்கடித்தானத்திலே, தானேயுறை - தானேநித்யவாஸம்பண்ணுகிற, தானேஎன்றவதாரணத்துக்கு “நாஹம்வஸாமிவைகுண்டே நயோகிஹ்ருதயே ரவௌ। மத்பக்தாயத்ர காயந்தி தத்ரதிஷ்டாமிநாரத” என்கிறபடியே மற்றஸ்தலங்களிலே யெழுந்தருளியிருக்குமிருப்பு அவனுக்கிருப்பாய்த்தோன்றுகிறதில்லை, என்னோடு ஸம்ஸ்லேஷிக்கைக்காகத் திருக்கடித்தானத்திலே யெழுந்தருளியிருக்குமதுவே அவனுக்கிருப்பாகத் தோன்றுகிறதென்றுகருத்து. ஆயர்க்கதிபதி - கோபாதிபதியானவன், அற்புதன் - ஆஸ்சர்யதன், திவ்யதேஸங்களெல்லாம் தனக்குத்தாயப்பதிகளாய் தானுமவற்றிலே வீறுபெற்றருளி யிராநிற்கச்செய்தேயு மென்னோடுஸம்ஸ்லேஷிக்கைக்கு உறுப்பானதிலமென்று திருக்கடித்தானத்தை விஸேஷித்து விரும்பாநிற்கிறவ ஆஸ்சர்யசர்யாதனன்றோவென்றபடி. ॥௯॥

அற்புதன் - ஆஸ்சர்யதனை, ஆஸ்சர்யகுணசேஷ்டிதங்களையுடையவனானவென்றபடி. நாராயணன் — ஸகீபரைக்கைவிடாதபடி வாத்ஸல்யாதிகுணஸாலியான, அரி - ஹரியான, ஸாநுபவப்ராதிபந்தகஹரனானவென்றபடி. வாமனன் - தானர்த்தியாய்ப்பிறந்தாகிலு மாஸ்ரிதருடைய ஸர்வாபேக்ஷிதங்களையும் நிவர்த்தித்துக்கொடுக்குமவனான வெம்பெருமான், நிற்பது - வஸிப்பது, இதுக்குத் திருக்கடித்தானமென்கிறதோடேயந்வயம. நற்புகழ் - நல்லபுகழையுடையவர்களான, நல புகழ்என்கிறவிடத்திலே லகாரஸம்பந்தாரவரோஹஸ்சேஷ:. புகழ் - கீர்த்தி, அநந்யப்ரயோஜநர்களென்கிற கீர்த்தியையுடையவர்களானவென்றபடி. வேதியர் - வைதிகர்களுடைய, நான்மறை - நாலுவேதங்கள், அவர்களாலே உச்சரிக்கப்படுகிற நாலுவேதங்களென்றபடி. நின்று - ஸ்திரமாக, நிரந்தரமாகவென்றபடி, அதிர் - அதிராநிற்கிற, முழங்குகிற

ஞா—தா—பிரான் - ஆஶ்ரிதருடைய ஸம்ருத்தியத்திலே நித்யவாஸம்பண்ணுமவனாகையாலும், (ஸ்ரீவத்ஸவக்ஷா வாக்) திருவமர்மார்வன் - பெரியபிராட்டியார் பொருந்திவஸிக்கிற திருமார்வையுடையவனாகையாலும், (ஆஶ்ரித பக்ஷபாதி யக்வாக்) மாயபபிரானென் - ஆஶ்சர்யமாக உபகரிக்குமவனாகையாலும், (ஸர்வஹஜநாக்) கோயிலகொள்தெய்வமெல்லாந்தொழ - நித்யஸூரிகளாலே நிரந்தரம் ஸேவிக்கப்படுகையாலும், (தெவதி ப்ராஸகவாக்) மதுசூதவம்மானுறை - விரோதிநிரஸநஸ்வபாவனாகையாலும், (மௌநிதவாக்) உள்ளத்து ககோவிந்தன் - ஸர்வஸௌலப்யனாகையாலும், (அஶேஷாதிதவிஷயநொழ்ஷஸ்துதகவாக்) வானின்னில ங்கடவித்ருஷி - வாமநவ்யாஜேக்ஷீரணார்வாதிநிக்காட்டியும் ஆஶ்ரிதருடையமேநஸ்ஸை ஈத்ருஶாதிதஸ்பு ஹமாகவுடையனாகையாலும், (ஸர்வாகாராஸ்ரதகவாக்) ஆபர்க்கதிபதியற்புதன்றனே - ஸர்வஸ்வீகாரத் தாலு மாஶ்பர்ஹமுதனாகையாலும், ஸர்வஸ்வீகாரத்தாலுமென்கிறவித்தை விவரணம்பண்ணுகிறது. “அற் புதநாராயணனரிவாமனன்” என்றுமேலிற்பாட்டு, தன்னுமேலஸ்பஷ்டமான நாரத்தைத்தான் வாஸஸ்தாநமாகவு டையனாவது, விராஜங்களான விரணடுவடிவைக்கொண்டு விரோதியைநிரஸிப்பது, சிறுகாலைக்காட்டி பெரியகாலாலேயளப்பது, இபபடிகளால் திருக்கடித்தானத் தெம்பெருமா னாஶ்ரிதருக்கு ஸுலபவிதரண த்திலே ஸந்நிஹிதனாயிருக்கிறானென்று “எல்லியுங்காலை” என்கிற உபாகத்திலே ஆழ்வார் அருளிச்செய்தரு ளினாரென்கிறார். ||க௬௯||

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேஶிகாய நம:.

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

எட்டாம்பத்தில் ஆறாந்திருவாய்மொழிமுற்றிற்று.

# ஏழாந்திருவாய்மொழி.

ஆ— (இருத்தும்வியந்து) இப்படியென்னெஞ்சிலே புகுந்தருளுகிறான், நான்தன்னைப்பிரிந்து பட்டபாடெல்

## ஏழாந்திருவாய்மொழி.

இ— மாயக்கூத்தனில் தமக்கோடின விடாயெல்லாம்மாற்றுகைக்காக எழுந்தருளின வெம்பெருமான்தம்பக் கல்செய்கிற அநுபவ ஸவிஶேஷஸம்ஸ்லேஷங்களை ஸ்ருதிஶயத்தாலே ஆஶ்லேஷித்துக்கொண்டநுபவிக் கத்தொடங்கின ஆழ்வார் அவற்றில திருக்கடித்தானத்துநின்று செய்தருளின சிலஅநுபவ ஸவிஶேஷங்களை யேழத்திருவாய்மொழியிலே பேசி யநுபவித்து ததநந்தரமவன் செய்தருளாநின்றதாய் தமக்கு ஸாக்ஷாத்த்ஸ்ப ஷ்யமான ஸம்ஶ்லேஷவிஶேஷாநுபவாநுபவத்தை யித்திருவாய்மொழியிலே யநுபவிக்கிறாரென்று ஸம் ஙதிஸ்பஷ்டயென்று வ்யாஜபுக்கைக்காக வருளிச்செய்கிறார் (இப்படியென்று) இப்படியென்றது - கீழ்த் திருவாய்மொழியிலுக்தரீத்யாஎன்றபடி. அதாவது:— தான் ஸோத்தரகவெழுந்தருளினால தத்க்ஷணஸம்ப ஜ்ஞாதநிரப்பேக்ஷப்ரீதிவெள்ளமெனக்கு ஸாத்மியாதெனறுபார்த்து ஸமிதியெழுந்தருளாதே திருக்கடித்தான த்தில்நின்று தானெழுந்தருளினப்ரீதியை எனக்கு ஸாத்மிப்பித்தருளியென்றபடி. “என்னைத்தன்பொன்னடிக்கீ ழிருத்தும்” என்கிறவித்தாலும், கருத்தையுறவீற்றிருநதா” னென்கிறவித்தாலும் நான் வாஞ்சாஸம்ஶ்லேஷ த்தைபவேக்ஷித்தால் தானென்மேநஸ்ஸிலே புகுந்திராநின்றானென் றிப்பாட்டுக்குப் பொருளாகததோற்றுகிறதா கையாலே “ஶ்ரோத்ரவ்யஷ்டகோவிதாராநவஷ்ட” என்கிற உபாஸம்ஹாரகாரம்போலே இப்பாட்டும் உபாஸம் ஹாரகாரமாய்த்தோற்றுகிறவிது “பொருத்தமுடைவாமன” னென்று அவனுக்கு ஸ்நேஹமயிகவுஞ்சொல்லுகிற வித்தோடுவிராஜமன்றோவென்ன? “என்னைத்தன் பொன்னடிக்கீழ்” நிதாநிவாகத்துக்குத் தமக்குள்ளஸ்வாஸ்ஸ ஸம்ஶ்லேஷாபேக்ஷையைச் சொல்லுகையிலே தாத்பர்யமன்றிக்கே கீழ் தாம்பட்டவ்யஸநாதிஶயத்தை ஸ்வா ஹாஸம்ஹாரமாக அநுபவித்தமேவத்தாலே “எனக்கவன்பக்கலுள்ள ஆஸக்தியைக்காட்டிலு மவனுக்கென் பக்க லாஸக்தி ஸஹஸ்ரகுணமதிகமாயிராநின்றதென்கையிலே தாத்பர்யமாகையால் விரோதமில்லையென் றுகாட்டுகிறார் (என்னெஞ்சிலேஉத்ருஷி பட்டுஎன்னுமளவாலே) இவ்வநுவாதத்திற்கு ஸ்வாஸம்ஹார ஸம்பாட்டின்ஶ்வாரஸ்யத்திலே ஸ்பஷ்டமாகிறது. புகுந்தருளுகிறானென்றது— க்ரியாவஷமன்று, புகுந்

மூ— இருத்தும்வியந்தென்னைத்தன்பொன்னடிக்கீழென்* றருத்தித்தெனைத்தோர் பலநாளழைத்தேற்குப்*
பொருத்தமுடைவாமனன்றான்புகுந்தென்றன்* கருத்தையுறவீற்றிருந்தான்கண்டுகொண்டே* ||க||

ஆ— ஸர்வமொன்றன்றென்னும்படி தானென்னைப்பிரிந்துவ்யஸநப்பட்டு ஒருவண்ணமென்னைக்கண்டுகொண்டு புகுந்து ஸந்நிஹிதனாயிருந்தருளினான், ஒருவனுடைய ப்ரணயித்வமிருக்கும்படியென்? இவனையாகாதே நான் இதுவே பொருத்தமென்று சொல்லிற்றென்கிறார். ||க||

(இருந்தான்) என்னுள்ளேபுகுந்தருளுகிறான், என்னுடைய ஸகலகரணங்களு மிப்ரமாணமல்லது மற்றொரு

இ—தருளுகிறவனென்றபடி.

முதற்பாட்டு.

ஒன்றன்றென்னும்படியென்றது - இதொருவ்யஸநமன்றென்று சொல்லலாம்படியென்கை. ஸர்வேச்வரன் ஆழ்வாரைப்பிரிகையாவது - தன்னையிவர் அநுபவியாதவஸரத்தில் தனக்கிவரோடு ஸாத்ம்யமன்றிக்கேயொழிகை, ஜகத்திலும் காமுகனுக்குவிரஹமாவது காமினியினுடைய ஸம்ச்லேஷவ்யாஸங்கத்தால் பிறந்த ஸாத்ம்யஹாநியிறே! வீற்றிருந்தானென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸந்நிஹிதனாயித்யாதியால்) பொருத்தமுடையென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஒருவனுடையவித்யாதியால்) இவ்வாக்யத்தாலே மாயக்கூத்தனில் தாமபேக்ஷித்த பாஹ்யஸம்ச்லேஷம்பெறாது ஜீவிக்கவில்லையேயாகிலும் ஆச்ரிதஸௌலப்யப்போந்த தம்முடைய அத்யந்தநிகர்ஷத்தையும் ஸர்வேச்வரன்தன்னுடைய உத்கர்ஷத்தையும்பாராதே தம்பக்கலபிநிவிஷ்டனாயிருக்கும்படிகளைக்கண்டு தஜ்ஜநிதநிரவதிகஹர்ஷத்தாலே இம்மாநஸஸம்ச்லேஷமாத்ரத்திலு மவனையிப்படி கொண்டாடுகிறாரென்றுகருத்து. இத்தால் "ஹ்ருதிஸ்தக" மென்கிறஹ்ருதயகமந மித்திருவாய்மொழிக்கு ப்ரதிபாத்யமென்றதாயிற்று. ||க||

இரண்டாம்பாட்டு.

ஸந்நிவேசத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னுள்ளேயித்யாதியால்) இப்ரமாணமென்றது- இந்தப்ரணயித்வப்ரமாணமென்றபடி. மற்றொருப்ரமாணமென்றது - இங்கு ப்ரத்யக்ஷாதிப்ரமாணமாயாதி ப்ராக்ருதப்ரமாணவராம். இப்ரமாணத்தை யநுபவிக்கும்போது தஜ்ஜநிதநிரவதிகநிவ்ருத்தியாலே பாஹ்யகரணங்களும் ஸவிஷயாபேக்ஷையில்லாமல் அத்யந்ததத்பரங்களாம்படியென்கை. பெருந்தாளித்யாதி

பா— என்னை- தன் விரஹத்தில ப்ராணதாரணமஸம்பாவிதனை யென்னை, இதுக்கு இருத்து மென்கிறதோடே அந்வயம். வியந்து- விஸ்மயப்பட்டு, இந்த ஸம்ஸாரஸம்பந்தத்திலே நம்மை அபேக்ஷிப்பானொருவனுண்டாவதேயென்று விஸ்மயப்பட்டு என்றபடி. தன்பொன்னடிக்கீழ்- தன்னுடைய ஸ்ப்ருஹணீயமான திருவடிகளின்கீழே, இருத்தும் என்று- ப்ரதிஷ்டிதனாக்கி யருளுவனென்றத்யவஸித்து, அருத்தித்து- அர்த்தித்து, இதுக்கு அழைத்தேற்கு என்கிறதோடே அந்வயம். எனைத்து- அநேகமாக, ஓர்- ஒருபடிப்பட்டவையான, ஏகாகாரங்களானவென்றபடி. பஹுஸம்வத்ஸரம் ப்ரதிச்லேஷ ஸம்வபேக்ஷங்களான என்கை. பலநாள்- அஸங்க்யாத திநங்கள்தோறும், மாயக்கூத்தனில் நாளும்நாளுமென்றதை அநுவதிக்கிறபடி. அழைத்தேற்கு- ஆக்ரந்தநம் பண்ணினவனுயிருக்கிற வெனக்காக, ஆளக்கூப்பிட்டழைத்தக் காலென்கிறதை யநுவதிக்கிறபடி. இது வ்யாஜமாத்ரம், நாமிவனுடைய ப்ரணயித்வத்தையறியாதே இவன் விளம்பித்தானாகவும் நாமுபேக்ஷித்தோமாகவும் நினைத்து ஆக்ரந்தநம்பண்ணி என்னகார்யஞ்செய்தோமென்று மதம். இப்படி ஆக்ரந்தநம் பண்ணினவனுயிருக்கிறவென்னோடு ஸம்ச்லேஷிக்கைக்காக வென்றபடி. பொருத்தமுடை- ப்ரணயித்வத்தை யுடையவனான, வாமனன்- ஸ்ரீவாமநனானவன், தன்னுடைமையைப்பெறுகைக்குத்தான் அர்த்தியாயிருக்குமவனை நானர்த்தித்து என்செய்தேனேனென்று கருத்து. தான்கண்டுகொண்டு- என்னைக் காணப்பெறாதே வ்யஸநப்பட்டதான் ஜந்மதரித்ரனானவன் நிதியைக்கண்டாப்போலே யென்னைக்காணப்பெற்று, என்தன்கருத்தை- என்னுடைய ஆசயத்தை; தன்சப்தம் ஸ்வார்த்தே. என்னுடைய மநஸ்ஸையென்றபடி, புகுந்து- ப்ரவேசித்து, உற- உறுதியாக, ஸ்தைர்யமாகவென்றபடி. வீற்றிருந்தான்- வீறுபெற்றிருந்தான், வீறு- உத்கர்ஷம், தத்ஸம்ச்லேஷ ஜநிதஹர்ஷத்தாலே ஸந்நிஹிதனாயெழுந்தருளியிருந்தானென்றபடி. ||க||

மூ—அருள்தானினியானறியேனவனென்னுள்* இருள்தானறவீற்றிருந்தானிதுவல்லால்* பொருள்தானெனின்மூவுலகும்பொருளல்ல* மருள்தானீதோமாயமயக்குமயக்கே* ॥௩॥

ஆ—மென்னுள்ளேயிருந்தருளின விவ்விருப்பல்லது மற்றும் ஸர்வகாரணமான ஸம்பந்தங்களையும் திருநாட்டையு மொருபொருளாக மதியானென்று, இப்படி யெம்பெருமானுக்குத்தம்பக்கலுள்ள ஸந்நிவேசத்தைப்பேசி தம்முடைய நிகர்ஷத்தையநுஸந்தித்து ஸர்வஜ்ஞ ஸர்வசக்தி நிர்வேசவிஷயமாரு தேவஸ்வபாவத்தானது எனக்குஸம்பவியாது, என்னுடைய ஜ்ஞானமோதல் அவனென்னை ஜ்ஞாபிப்பித்தானுதல் அல்லதிதுகூடாதென்கிறார். ௩॥ (மாயமயக்கு) நிரவதிகவாத்ஸல்யஸௌசீல்யத்தையுடையனுயிருந்தவனே என்னுடைய நிகர்ஷத்தைப்

இ—ததுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னுள்ளே இத்யாதியால்) இதுவல்லான் இத்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவனுமென்னுள்ளேயித்யாதியால்) இப்படியவனுடைய ப்ரணயித்வகுணத்தாலே ஸந்தோஷிக்கிறவிவர் மருள்தானித்யாதியாலே இதுபொய்யென்றுசங்கித்தது ஸம்மதமன்றோவென்ன? வவதரிப்பிக்கிறார் (இப்படியித்யாதியால்) ஸத்யஸங்கல்பனான வென்பக்கலித்தனை யபிநிவேசஞ்செய்தருளுகிறவிது என்னவாச்சர்யமென்று இப்படியுள்ளநிகர்ஷம் ப்ரஸித்தமாகையால் ஸந்தேஹிக்கிறாரென்றுகருத்து. தாத்பர்யவாக்யத்தி லபிப்ராயத்தை யருளிச்செய்கிறார் (ஸர்வசக்தியித்யாதியால்) மருள்தானீதோவென்கிறதையுரைக்கிறார் (என்னுடையவித்யாதியால்) மாயவித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவனென்னையித்யாதியால்) ராக்ஷஸராஜ்யமத்யமான அசோகவநிகையின்நடுவே ராஜகீயத்தைப்பண்ணிக் கொண்டுவந்த திருவடியைக்கண்டருளி மிகவும்ஹ்ருஷ்டையான ஜநகராஜன்திருமகளார் ஸம்பவங்களாயிருப்பாரித் தேசத்தில்வரக்கூடாது, ஆனபின்பு "கிஞ்சஸ்யாத் ஸ்வப்நதோஷோயம் ஸஹஸா கதசித்விபம் । உந்மத்தஜோவிகாரோவா ஸ்யாதியம் ம்ருகத்ருஷ்ணிகா" என்று ஸ்வப்நதோஷாதிகளிலே யொன்றென்று ஸந்தேஹமேற்கொண்டு பண்ணினாப்போலே யிவரும ஸம்சயம்பண்ணுகிறாரென்றுகருத்து. ௩॥

*நாலாம்பாட்டு.*

ஆபன்னதம்மானென்கிறவடிகளுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நிரவதிகேத்யாதியால்) ப்ரமேயவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னுடையவித்யாதியால்) தூயசுடர்ச்சோதி என்கிறதற்குத்தாத்பர்ய

ஸ— இனிதாமென்றுமாறியதுபிப்பது. இனிதான் - இதுக்குமேல், அருள் - க்ருபையை, என்னுள்ளேயெழுந்தருளியிருந்த விதிற்காட்டில் வ்யதிரிக்தமாயிருக்கிற க்ருபையையென்றபடி. யானறியேன் - நானொருக்ருபையாகவெண்ணுகிறிலேன், இத்தாலித்தனை ஸந்நிவேசமேதென்ன அவ்வஸந்நிவேசத்தைச்சொல்லுகைக்காகத் தம்நெஞ்சிலவனிருந்ததை யநுபவிக்கிறார். அவன் - என்பக்கல் ஸத்யஸங்கல்பனான ஸர்வேச்வரன், என்னுள் — என்பக்கலுள்ளவையான, இருள்தான் - ஸம்ஸாரங்களெல்லாம். ஏகவசநமேகபதமாகையாலே தானென்கிறதிங்கே காரகாஸ்வபாவம். ஸஜாதீயமாரமெல்லாமென்றபடி. அற - அற்றுப்போம்படி, வீற்றிருந்தான் - ஸாம்ராஜ்யம்பெற்றாப்போலே ஸர்வேச்வரனாயிருந்தருளினான், இதுவல்லால்- என்னெஞ்சிலிருந்தருளுகிற விதுவல்லது, பொருள்தான்- பொருளுண்டோ, புருஷார்த்தமுண்டோவென்றபடி. இங்குதான்சப்தம் வாக்யாலங்காரமாய்க்கொண்டு விசாரவாசகம் எனில் - என்றுவிசாரிக்கில், என்னெஞ்சிலிருந்த விருப்பிற்காட்டி லவனுக்கு வேறொருபுருஷார்த்தமுண்டோவென்று நிரூபித்துப்பார்க்கிலென்று வாக்யார்த்தம். மூவுலகும் - த்ரிவிதசேதநமும், உலகு - லோகம், லோக்யதஇதிலோகம்வஸ்து, த்ரிவிதவிதசேதநமுமென்றபடி. பொருளல்ல - அவனுக்கொருபுருஷார்த்தமு மன்று, என்னெஞ்சிலிருப்பொழிய உபயவிபூதியையு மொருபுருஷார்த்தமாக நினைக்கிறானில்லையென்றபடி. ஈது - என்பக்கலித்தனை ஸந்நிவேசமாக அவனநுஸந்திக்கிறவிது, இதுவென்கிறதற்கு ஈதென்றுதீர்க்கமாகவும் ப்ரயோகமுண்டு, மருள்தானோ - ப்ராந்தானோ, மாய - ஆச்சர்யங்களையுடைய, மயக்கு - மோஹநங்களாலே, ஓகாரத்தைப்பந்துஷமித்து மயக்கோவென்றநுவிப்பது. மோஹிப்பிக்கைக்காக வவன்தானோவென்றபடி, ஸதவஸ்தாவதாரசேஷ்டிதாலெனக்கிப்படி தோற்றுகிறதோ, அன்றிக்கே மாயக்கூத்தனின் னென்னுடைய ஸ்வரூபத்தை நிறுத்துகைக்காக அவன்தானென்னை ஜ்ஞாபிக்கிறானோ வென்றபடி.

௪॥

மூ— கணையொன்றாலே யேழ்மரமு மெய்தவெங்கார் முகிலைப்* புணையென்றுய்யப் போகிலல்லாலில்லைகண்டீர் பொருளே* ॥௨॥

பொருள்கையுண்டாய்ச் செல்லக்காணிற் போற்றியென்றேற்றெழுவ* இருள்கொடுன்பத்தின்மை

ஆ— கணைவிட்டு கைவல்லவரஸ்ரயணீயரான தஶரதாத்மஜனையே ரக்ஷகனாகப் பற்றப்பாருங்கோள்? வேறொருவரைப்பற்றி யொரு ப்ரயோஜநமில்லையென்கிறார். ॥௨॥

(பொருள்கை) இப்படி ஸ்வப்ரயோஜநபரராகையாலே ப்ரயோஜநமுள்ளபோதுபற்றி தாரித்ர்யாவ

---

இ—கீழ்ப்பாட்டில் ஶக்திஸம்பந்திகள் ஸாம்ஸாரிகஸ்நேஹரென்றவர் இப்பாட்டில் அதுவும் ஸுலபமன்று மென்கிறாரென்று ஸங்கதிஸூசிதை. எங்கார்முகிலை யென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (கைவ ஶேஷ்யாதியால்) தஶரதாத்மஜனையென்றது கணையொன்றாலே இத்யாதியாலே ஸூசிதம். தாத்பர்யத்தில் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ரக்ஷகனாக இத்யாதியால்) இல்லைகண்டீர்பொருளே என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (வேறொருவரையித்யாதியால்) ॥௨॥

✳ மூன்றாம்பாட்டு ✳

கீழ்ப்பாட்டில் பாந்தவரானார் ஸ்வப்ரயோஜநபரரென்றவரிப் பாட்டில் அத்தால்ஸித்த தோஷாந்தரத்தைச் சொல்லுகிறாரென்று ஸங்கதிகாட்டுகிறார் (இப்படியித்யாதியால்) ப்ரயோஜநபரத்தை ஸங்க்ரஹிக்கிறார் (ப்ரயோஜநமுள்ளபோதித்யாதியால்) விதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தாரித்ர்ய

---

ஸ—பாதம்பண்ணுமாப்போலே இந்த பாந்தவாபாஸரும் உங்களுக்கு ஹிதஞ்செய்வதாக ப்ரகாஶித்துக்கொண்டு தாங்கள் ஸாதித்துப்போவரத்தனை யென்றபடி. இது ஹேதுகர்பம், ஆகையால் இல்லைகண்டீர் பொருளென்று ஸம்பந்திக்கிறது. கணையொன்றாலே- பாணமொன்றாலே, கணை- பாணம். ஒரே பாணத்தினாலே என்றபடி. ஏழ்மரமும்- ஸப்தஸாலவ்ருக்ஷங்களையும், எய்த- பேதநம்பண்ணின, எங்கார்முகிலை- என்னுடைய காளமேகத்தை, முகில்- மேகம். என்னுடைய ஸர்வப்ரயோஜநமான ஸர்வேஶ்வரனை யென்றபடி. எம்மென்று ஸ்வநிஷ்டாநுஸந்தானம். ஸுக்ரீவராஜர் தமையனாலே ஹிம்ஸிக்கப்பட்டு தரித்ரராய் ருஶ்யமூகத்திலே இருக்கிற தஶையிலே தாம்வந்துதவி "ஸர்வஶாகாம்ருக ஶ்ரேஷ்டம் ஸுக்ரீவம் ஶரணம் கத:" என்கிறபடியே அவர் அதிஶங்கைபண்ணியிருக்க "ஸப்த ஸாலேந மஹாஸாலா:" என்கிறபடியே ஸப்தஸாலவ்ருக்ஷங்களையும் பேதநம்பண்ணி அவருடைய அதிஶங்கையை நிஶ்ஶேஷமாகப்போக்கியருளி உம்முடைய எல்லாகார்யமும் நாம் நிர்வஹித்துத் தரவல்லோமென்றவரை விஶ்வஸிப்பித்து ரக்ஷித்தருளி இப்படி ஸர்வஶக்தஸ்வாமியானவனை யென்னுடைய ஸர்வதாரகனையென்கை. ஸுக்ரீவராஜருக்குச் செய்தருளினதை 'எங்கார்முகிலை' யென்று ப்ரீத்யதிஶயத்தாலே தம்பேறாகச்சொல்லுகிறார். புணையென்று- தெப்பமென்று, புணை- ப்லவம், ஸம்ஸாரார்ணவத்தில் முழுகிப்போகவொட்டாத ஸாதநமென்றத்யவஸிதமென்றபடி. அவனுக்கிட வேண்டுவதொருபச்சையில்லை, இந்நினைவே யமையுமென்றுகருத்து. உய்யப்போகிலல்லால்- உஜ்ஜீவிக்கப்ரவ்ருத்தாலல்லது, உஜ்ஜீவிக்கநினைத்தா லொழியவென்றபடி. பொருள்- ப்ரயோஜநமானது, வேறொருவரை ஆஶ்ரயித்தொரு ப்ரயோஜநமானதென்றபடி. இல்லைகண்டீர்- கண்டீரென்கிறவித்தாலே இதில் ஸம்ஶயிக்கவேண்டாவென்றபடி. ஆதலால் அந்த தஶரதாத்மஜனையே ஆஶ்ரயியுங்கோளென்றுகருத்து. ॥௨॥

கை- ஒருவன்கையிலே, பொருள் உண்டாய்ச்செல்லக்காணில்- ஸமருத்தமுண்டாய் நடக்கக்கண்டார்களாகில், போற்றியென்று- மங்களாஶாஸநபரங்களான ஶப்தங்களைச்சொல்லி, போற்றியென்கிறது மங்களாஶாஸநவாசகம், இது மற்றுமுள்ள மங்களாஶாஸநங்களுக்கெல்லாம் இங்கே ப்ரதர்ஶநமாய் இருக்கிறது. ஸௌலப்ய ஸௌஶீல்யாதிகளாலே அவனை அபிமுகனாக்கிக் கொண்டென்றபடி. ஏற்று- அநந்தரம் அவன் ப்ரீதியாலேகொடுத்த தநங்களைக்கையிலே ஏற்றுவாங்கிக்கொண்டு, எழுவர்- ஸ்வாபிமதஸித்திக்குப்போய் விடுவர்கள், இருள்கொள்- அஜ்ஞாநாந்தகாரத்தைக் கொண்டிருக்கிற, புத்தியைக்கலங்கப்பண்ணுகிறதான வென்றபடி. துன்பத்து- துக்கத்தையுடையதான, துக்காவஹமான வென்றபடி. இன்மை- இல்லாமையை, தாரித்ர்யத்தையென்றபடி. பந்துக்களுக்குக்கொடுத்தே தநமெல்லாம்போய் தரித்ரனாய்விட்டபடியை

மூ— காணிலென்னேயென்பாருமில்லை* மருள்கொள்செய்கையசுரர்மங்க வடமதுரைப்பிறந்தார்க்* கருள்
கொளாளாயுய்யிலல்லாலில்லைகண்டீரரணே* ॥௩॥
அரணமாவரற்றகாலைக்கென் றென்றமைக்கப்பட்டார்* இரணங்கொண்டதெப்பராவரின்றிட்டாலுமஃதே*
வருணித்தென்னே வடமதுரைப்பிறந்தவன் வண்புகழே*

ஆ—த்தில் விடும்ஸ்வபாவரான அவர்களைவிட்டு ஸர்வஜ்ஞனான க்ருஷ்ணனுடையக்ருபைக்கு விஷயமாயுய்யிலல்
லால் வேறொருரக்ஷையில்லையென்கிறார். ॥௩॥

(அரணமாவர்) ஸ்ருஷ்டாதாநாதிகளாலே ஆபத்துக்கு ஸம்பந்தக்களை ஸம்பாதித்துவைத்தால் அவர்க
ளும் ஆபத்துவந்தால் க்ருதக்னராய், ஈநாவக்ருதரைப்போலே யுதவார், ஆதலால் அவர்களைவிட்டு உப
காராவெக்ஷையன்றியே வடமதுரையிலேவந்துபிறந்து ஆபன்னரைரக்ஷிக்கும் ஸ்வபாவனானவனுடைய கல்யாண

இ—த்ருஷ்டியால்) த்ருதீயவாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆபத்ஸவனித்ருஷ்டியால்) சதுர்த்தபாதத்
துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (க்ருபைக்கித்ருஷ்டியால்) ॥௩॥

✳நாலாம்பாட்டு.✳

ப்ரதமபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸ்ருஷ்டித்ருஷ்டியால்) இத்தால் கீழ்ப்பாட்டிலே ஸம்ப
த்துள்ளகாலத்திலே தாங்களேவந்து ஸ்நேஹித்தவர் ஆபத்காலம்வந்தால் வார்த்தையுஞ்சொல்லாரென்றவர் இப்
பாட்டிலே ஸ்ருஷ்டாதாநாதிகளாலே நீங்கள் அவர்களை ஸம்பாதித்துவைத்தாலும் உதவாரென்கிறாரென்று ஸம
ங்கதிஸூசிதமாகை. த்விதீயவாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆபத்துவந்தா லித்ருஷ்டியால்) வருணி
த்தென்னே யென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆதலாலித்ருஷ்டியால்) இன்றி இட்டாலு மஃதே
யென்கிறதற்குத் தாத்பர்யம் சொன்னதாகவுமாம். இரண்டு வாக்யத்துக்குமாகச் சொன்னதாகவுமாம். வட
மதுரைப்பிறந்தவன் என்கிறதற்குத்தாத்பர்யமருளிச்செய்கிறார் (உபகாரரித்ருஷ்டியால்) சதுர்த்தபாதத்துக்குத்

ப— யென்கை. காணில்- கண்டார்களாகில், என்னேயென்பாருமில்லை- என்னசெய்கிறாயென்றொருவார்த்தை
சொல்லுவாருமில்லை, ஸகாரத்தாலே தாங்கள் ஒரு வார்த்தைசொன்னால் அதைக்கொண்டிவனுக்கு ஜீவநம்
நடக்குமென்றாலும் ஸம்பந்திபவனாலே உபக்ருதராயிருந்தவர்க ளெவ்வளவும்செய்யாரென்றுகருத்து.
ஆதலால் இல்லைகண்டீர் என்று ஸம்பந்தம். மருள்கொள்- அஜ்ஞாநத்தைக்கொள்ளும்படியான, ஜகத்துக்கு
நெஞ்சுகலங்கும்படி ஸம்ஹாரமானவென்றபடி. செய்கை- வ்யாபாரங்களையுடையவர்களான, அசுரர்- அஸுரர்
கள், மங்க- நசிக்கைக்கு, வடமதுரை- உத்தரஸ்ரீமதுராநகரியிலே, பிறந்தார்க்கு- அவதரித்தருளின
க்ருஷ்ணனுக்கு, ஸம்ப்ரதாய ஸம்பந்தம். அருள்கொள் ஆளாய்- அருள்கொள்ளும் ஆள்களாய், க்ருபா
பாத்ரமான பாஜநங்களாயென்றபடி. உய்யிலல்லால்- உஜ்ஜீவித்தாலல்லது, அரண்- வேறொருரக்ஷையா
வது, இல்லைகண்டீர்- இல்லைகிடிகோள், ஆதலால் அவனையே ஆஸ்ரயியுங்கோளென்று கருத்து. ॥௩॥

அற்றகாலைக்கு- கைம்முதல் அற்றுப்போனகாலத்துக்கு, ஆபத்காலத்துக்கென்றபடி. அரணமாவரென்
றென்று- நமக்குரக்ஷகராவரென்றென்று பலகால்நினைத்து, அமைக்கப்பட்டார்- ஸம்பாதமாக்கப்பட்டார்,
ஸம்பக்ஷிராக்கப்பட்டவர்களென்றபடி. இனி நமக்கிவர்கள் அபேக்ஷிதமெல்லாஞ்செய்வரென்று தேறியிரு
க்கும்படி ஸ்ருஷ்டாதாநாதிகளாலே வஸீகரிக்கப்பட்ட ஸம்பந்திஸாஹஸர்களென்கை. இரணம்கொண்ட- ருணம்
வாங்கிக்கொண்டவர்களான, தெப்பராவர்- த்ரோஹராவார்கள், தெப்பர்- த்ரோஹர், க்ருதக்னரென்றபடி. தாங்கள்
ருணமாகக்கொடுத்துவைத்த தநத்தைத் திரும்பவாங்கிக்கொண்டவர்கள்போலே அவர்கள் ஆபத்காலம்வந்
தபோது ப்ரத்யுபகாரம்பண்ணவினையாதே க்ருதக்னராய் விடுவர்களென்றபடி. இன்றியிட்டாலும்- இல்லா
மல்போனாலும் நீங்கள் தநங்களைக்கொடுத்து ஸம்பாதித்துவையாவிட்டாலும், அஃதே- அதுவே, அவர்க
ள் ஆபத்திலே உதவாமல்போமதுவே நிஸ்சிதமென்றபடி. தநங்களைக்கொடுத்ததோடு கொடாததோடு வாசி
யில்லைப்போயென்கை. வருணித்து- வர்ணித்து, என்னே- என்னப்ரயோஜநம், க்ருதக்னருடைய ப்ரகாரங்
களை விஸ்தரித்தென்னப்ரயோஜநமென்றபடி. அவர்களை விடுங்கோளென்றுகருத்து, வடமதுரைப்பிறந்தவ
ன்- எல்லோர்க்கும் ஆபத்திலே உதவுகைக்காக உத்தரமதுரையிலே அவதரித்தவனுடைய, வண்புகழே-

மூ— சரணென்றுய்யப் போகிலல்லாலில்லைகண்டீர் சதிரே* ॥சா॥

சதிரமென்றுதம்மைத்தாமேசம்மதித்தின்மொழியார்* மதுரபோகந்துற்றவரே வைகிமற்றொன்றுறுவ* ரதிர்கொள்செய்கையசுரர்மங்கவடமதுரைப்பிறந்தாற்* கெதிர்கொளாளாயுய்யிலல்லாலில்லை கண்டீரின் பமே* ॥ரு॥

---

ஆ—குணங்களை ஶரணமாகப்பற்றுங்கோள், அதுவேசதிரென்கிறார். ॥சா॥

(சதிரமென்று) சதிராகவாழாநின்றோமென்று தங்களைத்தாங்களேயிசைந்து இனியபேச்சுக்களையுடைய ஸ்த்ரீகளுடைய மதுரமானபோகங்களை புஜித்தவர்களே புஜிக்கைக்கீடான யௌவநமெல்லாம் குன்றினவாறே அவர்களாலே மிகவும் பரிபவிக்கப்படுவர், லோகமெல்லாமதிரும்படியான வ்ருத்திகளையுடைய

---

இ— தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஶரணஶப்தார்த்தியால்) ॥சா॥

*ஐந்தாம்பாட்டு.*

இசைந்துஎன்கிறதற்குப் புஜித்தவர்களென்கிறத்தோடே அந்வயம். வைகிஎன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (புஜிக்கைக்கீடானவித்யாதியால்) யௌவநஸம்பத்த்யாதிகள், குன்றினவாறே- ஸங்குசிதமானவாறே, மற்றொன்றுறுவர்என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார்(அவர்களாலேயித்யாதியால்)

---

ஶ—குணா[illegible]ங்களே, வண்- ஔதார்யம், புகழ்- குணம், உபாஸகாதிகுணங்களென்றபடி. சரணென்று. ரக்ஷகங்களென்று அத்யவஸித்து, உய்யப்போகிலல்லால்- உஜ்ஜீவிக்கவுபக்ரமித்தாலல்லது, சதிர்- சாதுர்யமானது, அநாயாஸேந மோக்ஷத்தையடைகையாகிற சாதுர்யமானதென்றபடி. இல்லைகண்டீர்- இல்லைகிடீர். ॥சா॥

சதிரமென்று- சதிராயிராநின்றோமென்று, சதிர்- சாதுர்யம், சதிரையுடையவர் சதிரர், இச்ஶப்தத்தாலே தங்களைச்சொல்லிக்கொள்ளும்போது சதிரமென்று.ரூபம். அபிமதவிஷயத்தை வஶீகரித்துக்கொண்டு புஜிக்கும்சாதுர்யத்தையுடையவராயிராநின்றோமென்று என்றபடி. தம்மைத்தாமேசம்மதித்து- தங்களைத்தாங்களே ஸாதித்து, "அஸம்ப்ரதிபாதிகாதபிகரோதிஶப்தமாநிகா" என்கிறபடியே இதுவஸ்துமல்லாமையாலே தாங்களேதங்கள் நெஞ்சுக்குள்ளே ஸந்தோஷித்துக்கொள்ளுமத்தனைபோக்கி பிறர்க்கிதுஸம்மதமாயிருக்குமிறே. இதுக்குத் துற்றவரென்கிறத்தோடே அந்வயம். இன்மொழியார்- மதுரோக்தியையுடையரான ஸ்த்ரீகளுடைய, இன்- மதுரம், மொழி- உக்தி, "மதுதிஷ்டதிவாசியோஷிதாம் ஹ்ருதி ஹாலாஹலமேவகேவலம்" என்கிறபடியே உக்திமாத்ரம் மதுரமாகச்சொல்லி வஶீகரித்துக்கொள்ளுவரென்று கருத்து. மதுரபோகம்- மதுரங்களானபோகங்களை, துற்றவரே- துற்றுக்கொண்டவர்களே, துற்றுகை- பூர்ணமாகபுஜிக்கை, பூர்ணமாக அநுபவித்தவர்களே என்றபடி. ஏகாரம் பரிபவத்திலுடைய ஸம்பாவித ஸௌந்தர்யநிவேசநப்ரகாஶகமாகுவாம். வைகி- காலம்கழிந்து, வைகை- காலங்கழிகை, யௌவநாதிதஶைகள் அதீதமானவாறே என்றபடி. மற்றொன்று- வேறொருதுக்கத்தை, கீழ்ச்சொன்ன மதுரபாஷிணீபோகங்களுக்கு விபரீதங்களான பருஷபாஷணாதி ஸங்க்ருதபரிபவ பரம்பரைகளை யென்றபடி. அந்த ஸ்த்ரீகள்பண்ணும் பரிபவம் வாசாமகோசரமென்கைக்காக வேறொன்றென்று ஸாமாந்யநிர்தேஶித்தது, உறுவர்- அடைவர்கள், அபிமதைகளாய்க்கொண்டு போக்யைகளாயிருந்த ஸ்த்ரீகளே விஷஸத்ருஶராய் விடுவரென்றபடி. ஆதலாலின்பமில்லை கண்டீரென்று மேலோடேஸம்பந்தம். அதிர்கொள்- அதிர்க்கையைக்கொண்டிருக்கிற, அதிர்க்கை - கம்பிக்கை, லோகங்களுக்குக் கம்பஜநகமானவென்றபடி. செய்கை- வ்யாபாரங்களையுடையவரான, அசுரர்- அஸுரர்கள், மங்க- நஶிக்கும்படி, வடமதுரை- உத்தரமதுரையிலே, பிறந்தாற்கு- ஸர்வலோகமும் அலங்காரமாக ஸந்நிதியைக்கொண்டு ஸர்வருக்கும் ஆஶ்ரயணம்பண்ணுகைக்காக அவதரித்தருளின ஸ்ரீக்ருஷ்ணனுக்கு, எதிர்கொள்ஆளாய்- எதிர்கொள்ளும்தாஸராய், "அக்ரூரமாலாகாராதிஸமஸ்தவிஜநாதிதம்" என்னும்படியிருக்கிறவனுக்கு ஸாதகமாலாகாராதிகளோடே அபிமதநம்பண்ணும் தாஸர்களாயென்றபடி. உய்யிலல்லால்- உஜ்ஜீவித்தாலல்லது, இங்குஉஜ்ஜீவநம் பரமபுருஷார்த்தலாபம். தாத்ருஶாபிமதநாதிபரமபுருஷார்த்தத்தைப் பெற்றாலல்லதென்றபடி. இன்பம்- ஸுகமானது, இல்லைகண்டீர்- இல்லைகிடீர், ஆதலால் அவன்பக்கலிலேயே நீங்கள் அபிமதநாதி

மூ—இல்லைகண்டீரின்பமந்தோவுள்ளதுநினையாதே* தொல்லையார்களெத்தனைவர்தோன்றிக்கழிந்தொழிந்தார்* மல்லைமூதூர்வடமதுரைப்பிறந்தவன்வண்புகழே* சொல்லிப்புய்யப்போகிலல்லான் மற்றொன்றில்லைசுருக்கே* ||௫||

---

ஆ—ஸம்ஸாரமயக்குப்படி வடமதுரைப்பிறந்தாற்கு ஸ்வாமதாதிகளைப்பண்ணி யெதிர்கொள்ளுமடியராய் உய்ப்பதல்லால் வேறு ஸாதநமில்லையென்கிறார். ||௫||

(இல்லைகண்டீர்) எம்பெருமானல்லது வேறுபரமப்ராப்யமில்லையென்னும் இவ்வுண்மையை யுணராதே யெத்தனைவரிங்ஙனே முடிந்துபோனார், நீங்களும் அங்ஙனே நசியாதே ஆஸ்ரிதர்க்காக அவதாரம்பண்ணுகைக்காக வந்துபிறந்தருளினவனுடைய ஔதார்யத்தையே சொல்லியுய்யுங்கோள், வேறுப்பவிரகில்லை இது ஸங்க்ஷேபேண சொன்னோமென்கிறார். ||௫||

(மற்றொன்றில்லை) இச்சுருக்கை மிகப்பரவாமே வ்யக்தமாக்குகிறார். வேறுவக்தவ்யமில்லாதபடி ஸங்க்ஷே

---

இ— இத்தால் கீழ்ப்பாட்டிலே லௌகிகஸம்போகங்கள் ஆபத்திலே உதவாரென்றவர் இப்பாட்டிலே அவ்வளவேயன்றிகேகை ஆபத்திலே ரக்ஷகமும் பண்ணுவார்களென்கிறாரென்று ஸங்கதிஸூசிதை. யத்வா— கீழ்நாலுபாட்டாலும் அவர்களை ப்ராபகாபாஸர் என்றவர் இப்பாட்டில் ப்ராப்யாபாஸரென்கிறாரென்று கருத்தாகவுமாம் எதிர்கொளாவாஎன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸ்வாமதேத்யாதியால்) ஶேஷம் ஸ்பஷ்டம். ||௫||

✳ ஆறாம்பாட்டு. ✳

உள்ளதுநினையாதேயென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (எம்பெருமானித்யாதியால்) ஸங்க்ஷேபத்துக்குப் ஸ்ரீதாத்பர்யமருளிச்செய்கிறார் (நீங்களுமித்யாதியால்) இத்தால் கீழ்ச்சொன்ன பரமப்ராப்யத்வஜ்ஞாநம் அத்யந்தாவஸ்யமாகையாலே நீங்கள் அதிகரித்து ஜீவிகராகுங்கோளென்று உபதேசிக்கிறாரென்று ஸங்கதிஸூசிதை. சுருக்கென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸங்க்ஷேபேண சொன்னோமென்று) ஶேஷம் ஸ்பஷ்டம். ||௫||

✳ ஏழாம்பாட்டு. ✳

அவன்கல்யாணகுணமே அநுஸந்தேயமென்று கீழ்ப்பாட்டிற்சொன்ன அர்த்தத்தையே குற்றமில்சீர்க்கற்றித்யாதியாலே சொல்லுகிறதாகையாலே இப்பாட்டு பௌநருக்த்யமன்றோவென்ன பரிஹரிக்கிறார் (இச்சுருக்கையித்யாதியால்) சுருங்கச்சொன்னோமென்றிருக்கச்செய்தே வ்யக்தமாக்குகிறதென்னக்கூடுமோவென்று ஶங்கியாமைக்காக அருளிச்செய்கிறார் (மிகப்பரவாமேஎன்று) எவ்வுயிர்க்குமென்றதால் ஸ்ரீத்தவஸ்துத்தை

---

ஈ—ஸ்வீகராம்படி யாகுங்கோளென்று கருத்து. ||௫||

இன்பமில்லைகண்டீர்- எம்பெருமானல்லது வேறுஸாதகஸாதநம் இல்லைகிடிகோள். உள்ளது- அவனை யொழிய வேறு ஸாதநமில்லையென்கிற இந்த யதார்த்தமான அர்த்தத்தை, நினையாதே- அநுஸந்தியாதே, விமர்சித்துத்தெரியாதே யென்றபடி. தொல்லையார்கள்- அநாதிகாலத்திலே உள்ளவர்கள், தொல்லை- அநாதிகாலமும், எத்தனைவர்- அஸங்க்யாதரான ஜநங்கள், தோன்றி- பிறந்து, கழிந்தொழிந்தார்- அதீதராய் விட்டார்கள். பரமப்ராப்யஜ்ஞாநம் பெறாமையாலே அவர்களுக்கு ஜநநமரணமாத்ரமே பரிஶேஷித்ததென்று கருத்து. அந்தோ- அய்யோ!, இப்படி வ்யர்த்தமாய்ப் போய்விட்டார்களேயென்று ஶோகிக்கிறபடி, நீங்கள் அங்ஙனேயாகாதொழியப் பாருங்கோளென்று கருத்து. ஆனால் செய்யவேண்டுவதென்னென்ன? அருளிச்செய்கிறார். மல்லை- ஸமஸ்தஸம்பத்ஸம்ருத்தமான, மல்லை- ஸம்பத்ஸம்ருத்தம். மூதூர்- பழைய ஊரான, மூது- பழையது, பகவதவதாரஸ்தாநமாய்ப்பின்பு ஸ்ரீஶத்ருக்நாழ்வான் நகரியாய் இப்படி அநாதியாக ஸம்பத்ஸம்பந்நமுடைய ஊரானவென்றபடி. வடமதுரைப்பிறந்தவன் வண்புகழே- ஸ்பஷ்டம். சொல்லி- கீர்த்தநம்பண்ணி, உய்ப்போகிலல்லால்- உஜ்ஜீவிக்கப் ப்ரவ்ருத்தித்தால் அல்லது, மற்றொன்றில்லை- வேறொரு உஜ்ஜீவநோபாயமில்லை, ஆகையால் அவனைப் பற்றுயியுங்கோளென்று கருத்து. சுருக்கு- இது ஸங்க்ஷேபம், ஸகலஸாராம்ஸத்தையெடுத்து ஸங்க்ஷேபேண சொன்னோமென்றபடி. இனி இதுக்குமேல் வக்தவ்யமில்லையென்றுகருத்து. ||௫||

ரூ—மற்றொன்றில்லை சுருங்கச் சொன்னோம் மாநிலத்தெவ்வுயிர்க்கும்* சிற்றவேண்டா சிந்திப்பே யமையுங் கண்டீர்கள் அந்தோ* குற்றமன்றெங்கள் பெற்றத்தாயன் வடமதுரைப்பிறந்தான்* குற்றமில்சீர்கற்று வைகல்வாழ்தல் கண்டீர் குணமே* ||எ||

வாழ்தல்கண்டீர் குணமிதந்தோ மாயவனடி பரவி*

ஆ—எனது ஜீவநோபாயத்தை எல்லாருக்கும் சொன்னோம், இதுக்கு அதிகாரி நியமமும் கால நியமமும் தேச நியமமும் இல்லை, இவ்வுபாயந்தான் துஷ்கரமென்று குறைவுபடவும் வேண்டா ஸ்ம்ருதி மாத்ரமே அமையும் இது நிஷ்பலமாகிலோ வென்னில் இது செய்தால் முன்னம் ப்ரயோஜனமில்லைபிறே, ஆதலால் ஆஸ்ரிதர்க்காக வடமதுரையிலே பிறந்தவனுடைய பசுமேய்க்கும் ஆபலுடைய ஹேயப்ரத்யநீகமான கல்யாணகுணங்களை அநுஸந்தியுங்கோள், இதுதானே யமையுமென்னும்படி ஸௌலப்யமாய் போக்யமுமாயிருக்குமென்கிறார். ||எ||

இ—அருளிச்செய்கிறார் (இதுக்கதிகாரிநியமமித்யாதியால்) சிற்றவேண்டாவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இவ்வுபாயந்தானித்யாதியால) ஸாதநமுண்டென்று சொல்லவேண்டியிருக்க ஸ்மிதிஸாத்ய்ருதிஷி வ்யாபாரத்தைச்சொல்லுமாப்போலே குறையில்லையென்று சொல்லுகை ஸம்மதமன்றோவென்ன இது அநாயாஸஸாத்யமென்று காட்டுகைக்காக அவதரிப்பிக்கிறார் (இது நிஷ்பலமித்யாதியால) அப்படியேகாட்டுகிறார் (இதுசெய்தாலித்யாதியால) இது ஸுகஸாத்யமென்றுகாட்டுகிறார் (ஆதலாலிதி) எங்கள்வடமதுரைப்பிறந்தானென்றதைத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆஸ்ரிதர்க்காகவித்யாதியால்) பெற்றத்தாயனென்கிறதையுரைக்கிறார் (பசுவித்யாதியால) குற்றமில்சீரென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஹேயப்ரத்யநீகவித்யாதியால்) கற்றுவைகலித்யாதியாலே ஸவிசேஷமான அர்த்தத்தை யருளிச்செய்கிறார் (அநுஸந்தியுங்கோளென்று) குணமேயென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இதுதானேயித்யாதியால்) ||எ||

ஈ—மற்றொன்றில்லை- இனியக்தவும் வேறொன்றில்லை, மாநிலத்து- ஸமாஸ்ரயிவிஷயில், விஸ்தீர்ணமான ஸம்ஸாரத்திலென்றபடி. எவ்வுயிர்க்கும்- ஸர்வாத்மாக்களுக்கும், ஜாதிகுணவ்ருத்தாதிவைஷம்யம்பாராதே எல்லா ஆத்மாக்களுக்கும் என்றபடி. சுருங்கச்சொன்னோம்- அதிவிஸ்தரமின்றிக்கே சொன்னோம், இது சிலருக்குச்சொன்னோமென்றிருக்கவேண்டா, எல்லாருக்குமாகவே சொன்னோமென்றபடி. சிற்றவேண்டா- சிதறவேண்டாம், சிற்றுதல்- சிதறுதல், ஆயாஸப்படவேண்டாமென்றபடி. சிந்திப்பே- ஸ்ம்ருதிமாத்ரமும், சிந்திப்பு- ஸ்மரணம், அவதாரணம் வாசிககாயிக வ்யாபாரவ்யவச்சேதகமென்றபடி. ஏகாரத்தாலிது ஸ்வதந்த்ர ஸாதனமாயுமென்றபடி. அமையுங்கண்டீர்கள்- பர்யாப்தம்கிடீர்கோள், கண்டீர்களென்றது ப்ரஸித்திப்ரதர்சனம். "ஆபத்ஸுமரணே சைவ ஸ்ம்ருதோ பவதி ஸத்வரம்" இத்யாதிகளிலே இது ப்ரஸித்தமன்றோவென்றபடி. அந்தோ- அய்யோ! இத்தனை ஸுகமான உபாயத்திலே ப்ரவ்ருத்தியாதொழிவதே என்று நிர்விண்ணராகிறபடி. குற்றமன்று- தோஷமன்று, இந்த ஸாகர்மானுஷ்டானத்தில உங்களுக்கு ஸம்ஸயமுண்டாகிலும் இதுசெய்தால அநர்த்தகாரமல்லவே என்றுகருத்து. ஆனால ஸாத்யமேதென்னச் சொல்லுகிறார். எங்கள்- எங்களுடையதான, ஆஸ்ரிதர்க்கு ஸுலபனென்றபடி. வடமதுரைப்பிறந்தான்- உத்தரமதுரையிலே அவதரித்தவனை, ஆஸ்ரிதர்க்காக வந்தவதரித்தருளினவனை என்று வடமதுரைக்குத் தாத்பர்யம். பெற்றத்தாயன்- பசுக்களையுடைய கோபாலனுடைய, பெற்றங்கள்- பசுக்கள், பெற்றங்களையுடையவன்- பெற்றத்தான், பெற்றத்தாயன் என்று ஸமாஸவிக்ரஹம். குற்றமில- தோஷமில்லாதவையான, ஹேயப்ரத்யநீகங்களான வென்றபடி. சீர்- கல்யாணகுணங்களை, கற்று- அப்யஸித்து, உபதேசாதிகளாலே அறிந்து என்றபடி. வைகல- ஸர்வகாலமும், வாழ்தல்கண்டீர்- குணாநுபவஸௌக்யத்தை ஸாதிக்கைகிடீர்கோள், குணம்- ப்ரயோஜனம், ஸௌலப்யமும் போக்யமுமென்றபடி. ||எ||

வாழ்தலிதுகண்டீர்குணமென்றபிப்பது, வாழுகிற இதுகிடீர் எல்லாருக்கும் குணமாவது, வாழ்கை- போகங்களை ஸாதிக்கை, கண்டீரெனகிறதால் இது லோகப்ரஸித்தமன்றோ வென்றபடி. அந்தோ- அய்யோ! அந்த ஸௌலப்யத்துக்குபாயத்தை நீங்கள் அறிகிறதில்லையேயென்று நிர்விண்ணராகிறபடி. அதுதானென்னில்? சொல்லுகிறார். மாயவன்- ஆஸ்சர்யகுணசேஷ்டிதங்களை யுடையவனுடைய, அடி- திருவடிகளை,

மூ— போழ்துபோகவுள்ளகிற்கும் புன்மையிலாதவர்க்கு*வாழ்துணையாவடமதுரைப்பிறந்தவன்வண்புகழே*
வீழ்துணையாப்போமிதனில்யாதுமில்லைமிக்கதே* ॥ அ ॥
யாதுமில்லைமிக்கதனிலென்றென்றதுகருதிக்* காதுசெய்வான்கூதைசெய்து கடைமுறைவாழ்க்கை

ஆ—(வாழ்தல்) தன்னுடைய கல்யாணகுணாநுஸந்தானைகாக்ரரான சிறியருக்கு வாழ்துணையாக வடமதுரையிலே வந்துபிறந்தருளின ஸர்வேச்வரனுடைய கல்யாணகுணாநுஸந்தானத்துக்கு மேற்பட்ட புருஷார்த்தோபாயமில்லையென்கிறார். ॥ அ ॥

(யாதுமில்லை) எல்லாவற்றிலும்மேற்பட்ட புருஷார்த்தமென்றே ஸாம்ஸாரிகது:கநிவ்ருத்திரூபகைவல்யமென்று அதைப் புருஷார்த்தமென்றுபற்றில் காதுபெருக்கவென்றுபுக்கு பண்டுள்ளதையும்

## *எட்டாம்பாட்டு.*

இ— மாயவனித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தன்னுடையவித்யாதியால்) சிறியருக்கு- பூர்வருக்கு அநந்யப்ரயோஜநரான வைஷ்ணவருக்கென்றபடி. இத்தால் அவனவதரித்தது ஸ்வகுணாநுஸந்தாநம் எல்லாருக்கும் ஸித்திக்கைக்காகவாகையாலே தத்குணாநுஸந்தாநமே எல்லாருக்கும் உபாதேயமென்கிறாரென்று ஸங்கதிஸூசிதே. வீழ்துணையாய்ப்போமித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அநுஸந்தானத்துக்குமேல்ப்பட்டவித்யாதியால்) ॥ அ ॥

## *ஒன்பதாம்பாட்டு.*

யாதுமில்லைமிக்கதனிலென்றென்று என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (எல்லாவற்றிலுமித்யாதியால்) ஸாம்ஸாரிகது:கநிவ்ருத்திரூபமாகையாலே எல்லாவற்றிலும் மேல்ப்பட்டதென்று கருத்து. அதுகருதிஎன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அதையித்யாதியால்) அதுகருதியென்று ஸாதநமாயிருந்ததேயாகிலும் கீழே பக்தர்களுடையவும் ஸ்ரீவைஷ்ணவர்களுடையவும் போகத்தைச்சொன்னதாலே வைஷ்ணவபர்யமெல்லாமென்று பர்யவஸிதமாகையால் இது கைவல்யபரமாகை உசிதமென்றுகருத்து.

பூ—பாசி- ஸ்ரீதியாலே ஹோத்ரம்பண்ணி, போழ்துபோகஉள்ள- காலம்போக்க நினைக்கைக்கு, உள்ளுகை- நினைக்கை, காலக்ஷேபம் பண்ணவேணுமென்று உபநாஸிக்கைக்கென்றபடி. கிற்கும- வல்லவர்களான, விஷயாந்தரங்களில் அகப்படாதே இப்படியே உபநாஸிக்கமாட்டினவர்களானவென்றபடி. புன்மையிலாதவர்க்கு- பொல்லாங்கில்லாதவருக்கு, ப்ரயோஜநாந்தரஸம்பந்தரூப தோஷரஹிதரான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கென்றபடி. வாழ்துணையா- குணாநுபவ ரூபபோகத்துக்குபாயமாக, துணை- ஸஹாயம் இங்கே உபாயத்தைச்சொல்லுகிறது, வடமதுரைப்பிறந்தவன்- உத்தரமதுரையில் அவதரித்தவனுடைய, வண்புகழே- கல்யாணகுணங்களே, வண்- கல்யாணம், வீழ்துணையா- ஆசைப்படும்படியான ஸஹாயமாய், புருஷார்த்தோபாயமாகவென்றபடி. வீழ்- ஆசைப்படும்படியானது, பூர்வமானதென்றபடி. போமிதனில்- நடக்கிற இதில்காட்டில், ஸதா அநுஸந்திக்கிற இதில்காட்டிலென்றபடி. மிக்கது- அதிகமான புருஷார்த்தோபாயம், யாதுமில்லை- ஒன்றுமில்லை, இதுவே நிரதிசயமான உபாயமென்றபடி. ॥ அ ॥

அதனில்- அந்த கைவல்யத்தைக்காட்டில், மிக்கு- அதிகமாய், யாதுமில்லை- ஒரு புருஷார்த்தமுமில்லை, என்றென்று- இப்படி பலகாலம் அநுஸந்தித்து, அதுக்கும் அதிகமாக பகவதநுபவமும் உள்ளதாயிருக்கச் செய்தேயும் ஸ்வாபிப்ராயத்தாலே இப்படி அநுஸந்தித்தென்றபடி. அது கருதி- அந்த கைவல்யத்தை அபேக்ஷித்து, ஒரு உபாயத்தை அநுஷ்டிக்கும்போது அதுக்குப்பலமாக அந்த கைவல்யத்தை அபேக்ஷித்தென்றபடி. கருதிஎன்றது "ஸாத்யாவஸ்தாயணம்வசே" என்கிறவிடத்தில் போல ப்ரத்யயம போலே அநுவாதமாய் கருதினெனென்று கருத்து. காதுசெய்வான்- காதுகளைச்செய்ய இச்சையுடையவனும், கூதைசெய்து- மூளியாக்கினவனும், கர்ணாபரணார்த்தம் கணாபரணத்தைப் பெரியதாக்கப் ப்ரவர்த்தித்துக் காதைமூளியாக்கினவனென்று பதார்த்தம். காதைவளர்க்கப்போய் மூளியாக்கிக்கொண்டாப் போலேயென்று கருத்து. முறைகடைவாழ்க்கையென் றநுபிப்பது. முறை- பரிபக்வதமமான, பரிபக்வமுள்ளதான வென்றபடி. கடைவாழ்க்கையும்- நிக்ருஷ்டமான போகமும், ஸாம்ஸாரிகபோகமுமென்றபடி. போம்- போய்விடும், து:கோத்ரேகநிவ்ருத்தியில்லாதேபோகிற ஆத்மமாத்ரத்திலே இருந்த ப்ராக்ருத

று—ம்போம்* மாதுகிலின்கொடிக்கொண்மாட வடமதுரைப்பிறந்த* தாதுசேர்தோட்கண்ணனல்லா லில்லைகண்டீர்சரணே* ॥௯॥

கண்ணனல்லாலில்லைகண்டீர்சரணதுநிற்கவந்து* மண்ணின்பாரநீக்குதற்கே வடமதுரைப்பிறந்தான்* திண்ணமாநும்முடைமையுண்டேலவனடிசேர்த்துய்ம்மினோ* வெண்ணவேண்டாநும்மதாதுமவனன்றிமற்

---

ஆ—கெடுத்துக் கூதையாக்கைப்போலே பண்டுள்ள ஸாம்ஸாரிகது:க்கத்தையு மிழக்குமித்தனை ஆகையால் ஸ்ரீமதுரையிலே திருவவதாரம்பண்ணுகையாலே புதுக்கணித்த வழகையுடையனான கண்ணனே பரம ப்ராப்யமென்கிறார். ॥௯॥

(கண்ணனல்லால்) க்ருஷ்ணனல்லது சரணில்லையென்றிங்ஙனே தன்னுடைய ரக்ஷகத்வத்தை நிலைநிறுத்துகைக்காக ஸ்ரீமதுரையிலேவந்துபிறந்தருளி பூபாராவதாரணம்பண்ணி ஜகத்தை ரக்ஷித்தருளினான் ஆகையால் அவனேரக்ஷகன் ஆனபின்பு உங்களுக்காக அபிமாநிக்கப்படுகிறவஸ்துக்களையும் உங்களையும் அவன்

---

இ—இத்தால் இப்பாட்டுக்கு ஸங்கதியும்சொல்லிற்றாயிற்று. கூதை- மூளி, கடைமுறைவாழ்க்கையும்போம் என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பண்டுள்ளஸாம்ஸாரிகேத்யாதியால்) து:க்கத்தையும்என்கிறவிடத்தில் உம்மைத்தாலே ஸாம்ஸாரிகது:க்கோத்ருஷ்டிகநிவ்ருத்தி யில்லாதொழிகிறதுமன்றிக்கே அத்தையுமிழக்குமென்றபடி. கைவல்யம்பெற்றவனுக்கும் ஸம்ஸாரது:க்கப்ரஸங்கமில்லாமையாலும் ஸம்ஸாரது:க்ககாரணமான ப்ரக்ருதிஸம்பந்தமற்றமையாலும் ஸாம்ஸாரிகது:க்கோத்ருஷ்டிகநிவ்ருத்தியில்லையிறே. கைவல்யஸுகம் ஸித்திக்குமேயாகிலும்- ஸம்ஸாரதசையில்வந்த தசானுபவத்தைப்பார்த்தால் இதொரு க்ஷுத்ரகணிகையாகையாலே- அதை கூதாகரித்தருளிச்செய்கிறபடி. தாதுசேர்தோள்என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (புதுக்கணித்தவித்யாதியால்) ॥௯॥

✱ பத்தாம்பாட்டு. ✱

அதுநிற்கவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இங்ஙனேயித்யாதியால்) வந்தித்யாதியாக, த்விதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸ்ரீமதுரையிலேஇத்யாதியால்) இதில் ஷஷ்டீதாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆனபின்புஎன்று) த்ருதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உங்களுக்காகவித்யாதி ஸமர்ப்பியுங்கோளென்னுமளவாலே) இத்தால் அவனல்லது ப்ராப்யமும்ப்ராபகமுமில்லையென்று உபபாதித்த ஒன்பதுபாட்டுக்களிலும் அபிப்ரேதமாயிருந்த தத்ஸமாச்ரயணத்தை இப்பாட்டிலே கண்ணோக்கியாலே

---

ஸ—து:க்கமும் போய்விடுமென்றபடி ஆதலாலில்லைகண்டீர் என்றுமேலே அந்வயிக்கிறது. மாதுகிலின்- பெரிய வஸ்த்ரங்களுடைய, துகில்- வஸ்த்ரம். கொடி- த்வஜங்களை, விசாலவஸ்த்ரங்களாலே நிர்மிதங்களான த்வஜங்களையென்றபடி. கொள்- கொண்டிருக்கிற, உடையவையாயிருக்கிறவென்றபடி. மாடம்- ப்ராஸாதங்களையுடைத்தான, வடமதுரைப்பிறந்தான்- உத்தரமதுரையிலே அவதரித்தவனான, தாதுசேர்- ப்ரகாசமாகச்சேர்ந்திருக்கிற, தாது- வர்ஷ்மகேஸரம், லக்ஷணமாலையைச்சொல்லுகிறது, வைஜயந்த்யாதி ஸ்ராமர்ஸங்ககளானவென்றபடி. தோள்- புஜங்களையுடையவனான, கண்ணனல்லால்- க்ருஷ்ணனல்லது, சரண்- ரக்ஷகமானது, ப்ராப்யமானதென்றபடி. இல்லைகண்டீர்- இல்லைகிடிகோள், ஆகையால் அவனையே ப்ராப்யமாகப்பற்றுங்கோளென்றபடி. ॥௯॥

கண்ணனல்லால்- க்ருஷ்ணனல்லது, சரண் இல்லைகண்டீர்- ரக்ஷகனில்லைகிடிகோள், நீக்குதற்கே என்கிறவிடத்தில்- ஏகாரத்தை அதுநிற்க என்கிறதோடே அந்வயிப்பது. அதுநிற்கவே- தன்னுடைய அந்த ரக்ஷகத்வம் ப்ரதிஷ்டிதமாகைக்காகவே, மண்ணின்பாரம்- பூபாரத்தை, நீக்குதற்கு- நிவர்த்திப்பிக்கைக்காக, வந்து- பரமபதத்தை விட்டுவந்து, வடமதுரைப்பிறந்தான்- உத்தரமதுரையிலே அவதரித்தருளினான், நும்முடைமையுண்டேல்- உங்களுக்கு சேஷமான வஸ்துக்கள் உண்டாயிருந்தனவாகில், யத்ராதிமந்த்ரத்தால் வஸ்துவ்ருத்தியில் உங்களுக்கு சேஷமல்லாதவற்றை நீங்கள் அபிமாநிக்கிறதுமத்தனை யென்றுகருத்து. அவனடி- அவன்திருவடிகளிலே, திண்ணம்- த்ருடமாக, சேர்த்துய்ம்மினோ- சேரப்பண்ணுங்கோள்- ஸமர்ப்பியுங்கோளென்றபடி. நும்மது- யுஷ்மதீயங்களான, ஆதும்- வஸ்துவும், அவனன்றி- அவனல்லது, மற்றில்லை- வேறொன்றில்லை, ஸர்வஸ்யாபி சேஷபூதமாய் அவனுக்கே சேஷமாயிருப்பதொழிய ஸ்வநிஷ்ட

மூ— றில்லையே* ।ய॥

ஆதுமில்லைமற்றவனிலென்றதுவே துணிந்து* தாதுசேர்தோட்கண்ணனைக்குருகூர்ச்சடகோபன் சொன்ன* தீதிலாதவொண்டமிழ்களிவை யாயிரத்துளிப்பத்தும்* ஓதவல்லபிராக்கணம்மை யாளுடையார்கள் பண்டே* ।கக॥

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

ஆ—திருவடிகளிலே ஶேஷமென்கிற அநுஸந்தாநத்தோடே கூட, உங்களுக்காக ஶங்கிக்கப்படுகிறவையும் நீங்களும் அவனுக்கே ஶேஷம், இதிலொரு ஸம்ஶயமில்லையென்கிறார். ॥ய॥

(ஆதுமில்லை) ஆத்மாத்மீயங்களெல்லாம் அவனுக்கே ஶேஷமென்று துணிந்திருந்த சடகோபன் தாதுசேர் தோட்கண்ணனைச்சொன்ன நிரவத்யமாய் ஸ்ரவணமான இத்திருவாய்மொழியை ஓதவல்ல ஸ்ரீவைஷ்ணவர்கள் நமக்குப்பண்டே ஸ்வாமிகளென்கிறார். ।கஉ॥

திருக்குருகைப்பிரான்பிள்ளான் திருவடிகளேசரணம்.

இ— வெளியிடுகிறாரென்று ஸங்கதியைப் பற்றி. நும்மதாதும் இத்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உங்களுக்காக ஶங்கிக்கப்படுகிறவையும் நீங்களும் இத்யாதியால்) எண்ணவேண்டா என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இதில் இத்யாதியால்) ।ய॥

✳ நிகமனம். ✳

உபஸம்ஹாரத்திற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆத்மாத்மீயால்) ஶேஷம்ஸ்பஷ்டம். ।கக॥

ஈ—மாயிருப்பதொன்றில்லை யென்றபடி. எண்ணவேண்டா- ஶங்கிக்கவேண்டாம், இதில் ஒரு ஸம்ஶயமில்லை யென்றபடி. ।கஂ॥

அவனில் ஆந்த க்ருஷ்ணனில்காட்டில், மற்று- வேறுபட்டது, யாதுமில்லையென்று- ஒன்றுமில்லையென்று, நம்முடைய ஆத்மாத்மீயங்களெல்லாம் ஸர்வப்ரகார விஶேஷணதயா அவனுக்கே ஶேஷபூதங்களாலல்லது ஸ்வநிஷ்டமாயிருப்பதொன்றுமில்லையென்றபடி. அதுவே- அந்த அர்த்தத்தையே, துணிந்து- அத்யவஸித்து, தாதுசேர்- பராகஸம்ப்ருக்தமான, தாது- பாஷ்பிகஸாரமாய் ஸௌரபம், தோள்கண்ணனை- ஸர்வஜ்ஞங்களையுடையவனான ஸ்ரீக்ருஷ்ணனை, குருகூர்ச்சடகோபன்சொன்ன- ஸ்பஷ்டம், தீதிலாத- அவத்யரஹிதமான, தீது அவத்யம், ஶப்ததோஷார்த்ததோஷ ரஹிதமானதென்றபடி. ஒண்- ஒள்ளியதான, பஹுமானஶாலியான வென்றபடி. தமிழ்கள்- ஸந்தர்யாதிகாரமாம்படி த்ராவிடங்களான, இவைஆயிரத்துள்- இந்தபாட்டுக்களாயிரத்துக்குள்ளே, இப்பத்தும்- இந்தபத்துப்பாட்டையும், ஓதவல்ல- அத்யயனம்பண்ணவல்லவர்களான, பிராக்கள்- உபகாரகரானவர்கள், "அத்யேஷ்யதே ச ய இமம் தர்மஸம்வாதமாவயோ: । ஜ்ஞானயஜ்ஞேந தேநாஹமிஷ்டஸ்யாமிதி மே மதி:" என்னுமாப்போலே தமக்குபகாரகரென்றபடி. பண்டே- இதுஓதுகிறதற்குமுன்னமே, அநத்யயனகாலமான ஶரீரபரிக்ரஹம் வந்தகாலம்தொடங்கியென்றபடி. நம்மை யாளுடையார்கள்- நம்மைத்தங்களுக்கு தாஸராகவுடையவர்கள், நமக்குநாயகரென்றபடி. அல்லலென்னுதே பால்குடிக்கவேணுமென்று ஶிஶுவைத் தாய்கொண்டாடுமாப்போலே கொண்டாடுகிறபடி. ।கக॥

✳ ஜ்ஞாநவைராக்யநிஷ்ட நமேஶவயஸ்ரீநிவாஸராமாநுஜமஹாதேஶிகாய நம: ✳

ஸ்ரீ:

த்ரமிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி:

(கொண்டபெண்டிர்.)

ஸர்வஸ்யாபி த்ரிலோக்யாம் த்விஜநநக்ருதஶாயஸூநு

ஜாதஸ்யாத்மநீயம் பரிகீர்த்யாராத்யஸ்ய பாவ்ய: ।

ஸம்யோக்த்ருஷ்ணஸ்வாதீநபதமிதிநநாஸஹாய: ஸ்வஜ் பரம

ரக்ஷாஸஞ்ஜிஹ்வோ நபஸ்வி நஜதிஷித்ஸர்வநாம் ப்ரஸ்ஷ ॥௰௩॥

(ஸர்வஸ்யாபி த்ரிலோக்யாம்) எண்டிசையுங் கீழும்மேலும் முற்றவுமுண்டபிரான- உபயாவத்தில்

ஜூ—திா— எல்லாலோகங்களையும் திருவயிற்றிலேவைத்து ரக்ஷித்து அத்தாலே மிகவும் கொண்டாடப்படுகை யாலும், (ஸ்ரீயதிஜநநாக) கண்ணெபொன்றூலே பேழ்மாமுமெய்த வெங்காற்முகிலை- வஸுதேவரிந்திருமகனைப் ஒருத்திருச்சரததாலே ஸவ்வஸ்வங்களையும்மெலித்து "ஸம்சிதஸ்வாலீஸ்" என்றிருந்த ஆஸ்ரிதருக்கு 'ஜ்யந்த ஆத்மாத்மா' என்கிறபடியே ஸ்ரீஜீவிஸ்வாஸத்தை யுண்டாக்குகையாலும், (வைதநரோமாயரான ஜாத காத்முத்ரஸ்வம் வாஸிதிரஜாஸ்ம்ருதராம் ஸர்வேஷு) மருள்கொள்செய்கை அசுரர்மங்க வடமதுரைப் பிறந்தாககருள்கொளாளா யுய்யிலல்லால்- வாஜநாகஸ்தஸாநிரஸாநாமாகத் தன்வாத்ஸல்யத்தை யாலே வடமதுரையிலே க்ருஷ்ணுபவந்தவதரிக்கையாலும், மேலில்பாட்டுக்கள்தோறும் 'வடமதுரைப்பிற ந்தவன் வண்புகழேசரணென்றுய்ப்ப' 'அதிர்கொள்செப்கை பசுரர்மங்க வடமதுரைப்பிறந்தாற்கு' 'மல்லைமூ தூர் வடமதுரைப்பிறந்தவன் வண்புகழேசொல்லியுய்ப்ப' பெற்றத்தாயன் வடமதுரைப்பிறந்தான்' 'வாழ்து ணையா வடமதுரைப்பிறந்தவன்' 'மாதுகிலின் கொடிக்கொள்மாட வடமதுரைப்பிறந்த' 'மண்ணின்பாரம்நீக் குதற்கே வடமதுரைப்பிறந்தான்' என்று விரோதிநிரஸநார்த்தமாக வடமதுரையிலே வந்தவதரித்தரு ளினதையே ஆஸம்ஸிக்கையாலே இவைத்தாலேதானே கடநைராமலெகளும் வ்யாவ்ருத்தங்களாயிற்றென்று திருவுள்ளம். இப்படி ஸர்வஜநங்களுக்கும் வாத்ஸல்யவான க்ருஷ்ணனுடைய திருவடிகளை ஆஸ்ரயித்தாலொ ழிய 'ஸ்ரக்ஷணேவ்யஸநஸ்யகோஸமர்த்தோவ்ரக்ஷணே' என்னும்படியிருக்கிற ஸம்ஸாரிசேதநனுக்கு வேறுஸஹாயமும் வ்யாவஹாரம்முமில்லையென்று வைஷ்ணவமான அர்த்தத்தை 'கொண்டபெண்டிர்' என் றுமுகத்திலே காரிஸுநு அருளிச்செய்தருளினாரென்கிறார். ॥௧௦௮॥

"ஆவகஸவ்யவிஸ்ர" என்று ஒன்பதினாயிரத்தில் வாக்யம். 'ஜோகாஜாமங்க்ருதாயம்' என்று ஞிலர்வாக்யம், திருஜோமெரக்கு ஜபாவாரீஎன்றும் திருநாமம் உண்டாயிருந்ததிறே; திருவவதாரத்திற்கு ப்ரயோஜநம் ஸாயாவிதராணாதி ரூபமுமாயிருக்கச்செய்தேயும் ஒவ்வொன்றிலே நோக்காயிருக்குமா ப்போலே இங்கும் 'அசுரர்மங்க' விதாரியாலேசொன்ன திருவவதாரத்துக்கும் காதுபமேடிங்கொள்ளு கையுவிதம். ஜாதகவாக- பிறந்தவன், கஜஜுனதான், 'ஸம்ஸவாதி' என்று பிறக்கையாலும், ஸஞாளஜாதகவாக- மூதூர்பிறந்தவன், கூஜாநாஸஹதியில் வந்துபிறக்கையாலும், வைதநரோமாயஜாதகவாக- அசுரர் மங்க, தூஷ்டநிரஸகமாகப் பிறந்தருளுகையாலும், உத்தரஸ்ரம்வாஸிஜாதகவாக- வடமதுரை, ஸப்தமுக்தி ப்ரதக்ஷேத்ரங்களிலொன்றில் பிறந்தருளுகையாலும், ஜயாராஜாகருதாயாம்ஜாதகவாக- திருநாமமே ஹேமமா மானஇடத்தில் பிறநதருளுகையாலும், ஜயாவேஷ்- வாழ்துணையா, நிரவதிகமான தன்க்ருபையாலே அவ தரிக்கையாலும், ஸம்யோக- பெற்றத்தாயன் உகவாஜநம்பண்ணின ஜாதாபோலே பரியுமவனுகையாலே ஜயாநஸம்யாவாகையாலும், க்ருஷ்ணஸ- கண்ணன், ஸவ்யுயிருக்கையாலும் என்று பொருள்கொள்ளவ டுக்கும்என்று நம் ஆசார்யர்கள் அருளிச்செய்வர்கள்.

ஸ்ரீஜதிமஹோஞஸூரேஸிகாயநம:.

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஒன்பதாம்பத்தில் முதத்திருவாய்மொழிமுற்றிற்று.

# முதற்றிருவாய்மொழிமுற்றிற்று.

# இரண்டாந்திருவாய்மொழி.

மூ— பண்டைநாளாலேநின்திருவருளும்பங்கயத்தாள்திருவருளுங்* கொண்டுநின்கோயில்சீய்த்துப்பல்படிகாற்
குடிகுடிவழிவந்தாட்செய்யுந்* தொண்டரோர்க்கருளிச்சோதிவாய்திறந்துன்றாமரைக்கண்களால்நோக்காய்*

ஆ— (பண்டைநாளாலே) இப்படி யெம்பெருமானுடைய உறவுடைமையை அநுஸந்தித்து இவ்வுறவுடையவனானவனோடே கலந்துபரிமாறவேணுமென்று ப்ரார்த்தித்துக்கொண்டு திருப்புளிங்குடியிலே போய்ப்புக்கு அவ்விடத்தில் தன்திறத்து ஸாமாந்யகடாக்ஷமல்லது வேறொருவிசேஷகடாக்ஷம் பண்ணியருளக்காணாமையாலே சாலவின்னாதாராய் என்னை உன்னழகியதிருக்கண்களாலே நோக்கியருளவேணும், திருவடிகளைத் தலையிலேவைத்தருளவேணும். திருப்பள்ளியுணர்ந்து பிராட்டியோடுகூட இருந்தருளவேணும், எழுந்திருந்-

## இரண்டாந்திருவாய்மொழி.

இ— இருத்தும்வியந்திலேபெற்ற பரிபூர்ணஸம்ஶ்லேஷத்திற்கு விச்சேதமின்றிக்கே அத்தாலுண்டான ப்ரீதிப்ரகர்ஷத்தாலே நெடுமாற்கடிமையிலே ஶேஷவ்ருத்திகாமராய் அந்தப்ரீதியுள்ளடங்காமையாலே கொண்டபெண்டிரிலே ஸர்வஸ்வதாநம்பண்ணி இப்படி உத்தரோத்தரமாக ஸக்தராயிருக்கிற ஆழ்வார் விஶ்லேஷதஶையில்போலே இத்திருவாய்மொழியிலே 'கண்களால நோக்காய்' என்றும் 'நின்பாதபங்கயமே தலைக்கணியாய்' என்றும் இப்படிகளிலே அலற்றுகை ஸம்பந்தமன்றோவென்ன. அவதரிப்பிக்கிறார் (இப்படியிதரவிஷயாத்) உறவுடைமை- ஸம்பந்தமுடையவனாயிருக்கை, கலந்துபரிமாறவேணுமென்றது- ஸர்வவிதகைங்கர்யாதிகளான பாஹ்யஸம்ஶ்லேஷம்பண்ணி வ்யாபரிக்கவேணுமென்றபடி. கீழ்த்திருவாய்மொழியிலே அவனுடைய ஸம்பந்தத்தை அநுஸந்தித்தவாறே இவருக்கிப்படி யொரு இப்போது பிறந்ததென்றுகருத்து ஸம்பந்தமென்றறிந்தாலிப்படி செய்தாலல்லது தரித்திருக்கமுடியாதிறே, இங்கு ஸாமாந்யகடாக்ஷமாவது- ஸந்நிதிரெல்லார்பக்கலிலும் ஸர்வஸாதாரணமாக ஸேவார்த்திகளன்றிக்கே ஸாமாந்யமாக ஸ்வாராத்யதும் செய்தருளுகை, விசேஷகடாக்ஷமாவது- தாமபேக்ஷித்தபடியே ஸேவார்த்திக ளெல்லாம் செய்தருளுகை, சாலவென்றது- மிகவுமென்றபடி. இன்னாதாராயென்றது- கிலேஶராயென்றபடி. ப்ரார்த்தநங்களையுடையவென்றது- ப்ரார்த்தநங்களெல்லாவற்றையுமென்றபடி. *.

## முதற்பாட்டு.

நின்திருவருளும் பங்கயத்தாள் திருவருளுமென்று பாட்டிலே ஸாமாந்யமாயிருந்தாலும் அவதாரிகை

---

ஈ— தெண்டிரை- தெளிந்ததிரைகளையுடைத்தான, திரை- தரங்கம், தெண்திரையென்கிறவிடத்தில் ணகாரஸ்வரூபம் தகாரஸ்வரூபம் ணகாராதேஶம், விமலதரங்கஶாலிநியானவென்றபடி. திருமேனியின் ஸௌந்தர்யத்துக்கநுகுணமாக ஜலஸம்ருத்தியையுடையதானவென்றபடி. பொருநல்- தாம்ரபர்ணியினுடைய, தாம்ரபர்ணியோடு சேர்ந்ததானவென்றபடி. தண்பணை- குளிர்ந்தநீர்நிலங்களாலே, பணை- நீர்நிலம், சூழ்ந்த- பரிவ்ருதமான, திருப்புளிங்குடி- திருப்புளிங்குடியென்கிற திவ்யதேஶத்திலே, கிடந்தானே- கண்வளர்ந்தருளுகிறவனே, விபிநஸநகரதேஶ்யமன்றக்ருஷ்ணனை நீ நிரூபாதிகஸர்வவிதபந்துத்தாலேயிறே என்வரிஸரத்திலேவந்து கண்வளர்ந்தருளி யுன்னழகையெனக்குக்காட்டிற்று, அப்படியேயின்னமும் நானபேக்ஷிக்கிறதெல்லாம் செய்தருளவேணுமென்றுகருத்து. நின்திருவருளும்- நிதர்ஶயானவுன்னுடைய க்ருபையையும், பங்கயத்தாள்திருவருளும்- பங்கஜவாஸிநியினுடைய க்ருபையையும், உன்னுடையக்ருபைக்கும் நிதாநமான பெரியபிராட்டியார் க்ருபையையுமென்றபடி. உன்னுடையதேவியினுடைய க்ருபைக்கு விஷயமான என்னை நீ உபேக்ஷிக்கை உசிதமோவென்றுகருத்து. பண்டைநாளாலே கொண்டு- ப்ராசீநகாலத்திலேபெற்று, பண்டை- ப்ராசீநம், நாளாலேயென்று ஸப்தமியர்த்ததீயா, முன்பு நெடுநாளேதுடங்கியென்றபடி. நெடுநாளக்ருபைபண்ணி ஸம்ஸாரத்திலே கைவிடலாமோபிரானே என்றுகருத்து. நின்கோயில்- உன்னுடையதிவ்யாயதநத்திலே, சீய்த்து- ஸம்மார்ஜநாதிகைங்கர்யம் பண்ணி, சீய்க்கை- ஸம்மார்ஜநம்பண்ணுகை, இது உபலக்ஷணம். உசிதகைங்கர்யங்களைப்பண்ணியென்றபடி, பல்படிகால்- அநேகப்ரகாரமாக, அநேகநவிதமாகவென்றபடி, குடிகுடி- குடிகுடியாக,

மூ— தெண்டிரைப்பொருநற்றண்பணைசூழ்ந்ததிருப்புளிங்குடிக்கிடந்தானே* ||௧||
குடிக்கிடந்தாக்கஞ்செய்துநின்தீர்த்தவடிமைக்குற்றேவல்செய்துன்பொன்* னடிக்கடவாதேவழிவருகின்ற

ஆ—தென்னை திரே வந்தருளவேணும், என்றிப்புடைகளிலே தம்முடைய மநோரதங்களையடைய ஸவேக்ஷிக்கிறார். பிராட்டி வரிஹமாகையாலே பண்டேயுன்னாலே விஷயீக்ருதராய் ஸமஸ்தகைங்கர்யநிரதருமாய் என்றுங்குடியாக வடிமைசெய்துவர்த்திக்கிற வடியோங்களுக்கருளி சோதிவாய்திறந்து உன்தாமரைக்கண்களால்நோக்காய், தெளிந்ததிரையையுடைய திருப்பொருநலோடுகூடின அழகியநீர்நிலஞ்சூழ்ந்த திருப்புளிங்குடியிலேவந்து கண்வளர்ந்தருளினவனே?' யென்றுப்ரார்த்திக்கிறார். ||௧||

(குடிக்கிடந்து) ஸகலஸம்ச்லேஷ ப்ரயோஜநராய்க்கொண்டு உனக்கநாதமான வடிமைசெய்துஉன்திரு

இ—த்தாலும் ப்ரதாணவைஷத்தாலும் பங்கயத்தாள்திருவருளும்மென்றது ஸமஸ்தக்ருபைவைக்கும்கூட ஹேதுவென்ற விவக்ஷிதமென்றுகாட்டுகிறார் (பிராட்டியித்யாதியால்) பிராட்டிக்கு ஸம்பந்தமில்லாமையாலும் ஸர்வஸ்வதாநாபிப்ராயத்தாலும் வெதநர்பக்கல் ஸ்நாநப்ருத்யவஸாநத்திலே அவளுடையகடாக்ஷம் ப்ரயோஜநவியாய் 'தஸ்மிந்தவராயிதாவிபத்திஷ்டம்' என்கிறபடியே தஸ்ரநாதஷேத்ர அவளுடையகடாக்ஷம் ஸநாதநமாவியாயிருக்குமென்றுகருத்து. இத்திருவாய்மொழியி னுபக்ரமமான முதற்பாட்டில் பண்டேயுன்னாலே விஷயீக்ருதரென்கையாலே விரக்தஷயகமென்கிற ஸமக்ரமாணம் இத்திருவாய்மொழிக்குப் ப்ரக்ருதிவாக்யமென்றதாயிற்று. நின்கோயில்சிப்த்து என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸமஸ்தவியத்யாதியால்) சேஷம் ஸ்பஷ்டம். ||௧||

**✱ இரண்டாம்பாட்டு. ✱**

குடிக்கிடந்தாக்கஞ்செய்து என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸகலஸம்ச்லேஷ்யாதியால்) குற்றேவலென்கிறதையுரைக்கிறார் (உனக்கநாதமித்யாதியால்) உன்பொன்னடிக்கடவாதே என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உன்திருவடிகளித்யாதியால) படிக்களவாக நிமிர்த்தவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செ

ஈ—வாத்ஸல்யஸஹிதமாகவென்றபடி. வழிவந்து- ஸாஸ்த்ரமார்க்கத்திலேவந்து, ஸாம்ப்ரதாயமார்க்கம் தப்பாதபடி தஸிஷ்டராயென்றபடி. ஆட்செய்யும்- அடிமைசெய்யாநிற்கிற, தொண்டரோர்க்கு- சேஷபூதரான வெங்களுக்கு, தம்மநுபவம்பிகளையுங்கூட்டிக்கொண்டு சொல்லுகிறபடி. இப்படி அடிதுடங்கி உனக்கேகுடிகளாகையாலே ஸநாதநர்களான அடியோங்களுக்கென்றபடி. அருளி- க்ருபைபண்ணி, சோதிவாய் திறந்து- உஜ்ஜ்வலமானதிருப்பவளம் திறந்து, விகஸித்ததுபோலே ரமணீயமான திருப்பவளத்தைத்திறந்து ஒருவார்த்தை அருளிச்செய்தென்றபடி. வார்த்தை அருளிச்செய்யும்போதுள்ள திருப்பவளத்தினழகைக் காணவேணுமென்றுகருத்தாலே சோதிவாய்திறந்தென்றிவ்வளவே அருளிச்செய்தது. உன்தாமரைக்கண்களால்- என்னுடைய தாபஸம்போலே குளிர்ந்த விஸாலங்களான உன்னுடையவிலோசநங்களாலே, நோக்காய்- கடாக்ஷித்தருளவேணும். ||௨||

கொடிக்கொள்- கொடிகளைக்கொண்டிருக்கிற. கொடி- த்வஜம், த்வஜங்களையுடைத்தான வென்றபடி. பொன்மதிள்- கநகமய ப்ராகாரத்தாலே, சூழ்- வேஷ்டிதமான, இதுபுளிங்குடிக்கு விசேஷணம். குளிர்வயல்சோலை- குளிர்ந்தவயல்களையும் உத்யாநங்களையும் உடைத்தான; திருப்புளிங்குடிக்கிடந்தானே- திருப்புளிங்குடி திவ்யதேசத்திலே ஸ்ரீதாநஸ்வாபமாகக் கண்வளர்ந்தருளுகிறவனே, இது ஸம்போதநம். குடிக்கிடந்து- குடியிலேகிடந்து, சேஷத்வகாஷ்டையைத் தப்பாதேநின்று என்றபடி. ஆக்கம்செய்து- ஸம்ருத்தியைப்பண்ணி, ஆக்கம்- ஸம்ருத்தி, அந்த சேஷத்வாநுரூபமாக ஸமஸ்தவிதகைங்கர்யஸம்ருத்திகளைப்பண்ணியென்றபடி. தீர்த்த நின் அடிமையென்று சொல்லப்படுவது. தீர்த்த- தீர்த்தமான, பாவநமானவென்றபடி. தன்னுடைய ஸ்பர்சத்தாலே உதரவர்த்திகளை ஸம்பந்திகமானவென்றபடி. நின்னடிமை- உன்னுடைய கைங்கர்யங்களிலே, குற்றேவல்செய்து- அநாதமகைங்கர்யங்களைச்செய்து, உன்பொன்னடி- உன்னுடைய ஸ்ப்ருஹணீயமானதிருவடிகளை, கடவாதே- அதிக்ரமியாமல், உன்திருவடிகளல்லது வேறொருவர்த்தமத்தை அறியாதேயென்றபடி. வழிவருகின்ற- அடிமைமுறைதப்பாதேநடக்கிற வடியோ

மூ—வடியரோர்க்கருளிநீயொருநாட்* படிக்களவாகநிமிர்த்தநின்பாதபங்கயமேதலைக்கணியாய்* குடிக்கொள்
பொன்மதிள்சூழ்குளிர்வயற்சோலைத்திருப்புளிங்குடிக்கிடந்தானே* ||௨||
கிடந்தநாள்கிடந்தாயெத்தனைகாலங்கிடத்தியுன்திருவுடம்பசையத்* தொடர்ந்துகுற்றேவல்செய்துதொல்லடி
மைவழிவருந்தொண்டரோர்க்கருளித்*தடங்கொடாமரைக்கண்விழித்துநீயெழுந்துன்றாமரைமங்கையுநீயு*

ஆ—வடிகளல்லதறியாதே ஸர்வஶேஷவ்ருத்திக்கிற வடியோமுக்குக்க்ருபைபண்ணிஸம்ஸாரிகளுக்கும்
ஸாதாரணமான நின்பாதபங்கயமே ஒருநாள்தலைக்கணியாய், கொடிக்கொள்பொன்மதிள்சூழ் குளிர்வயற்சோ
லைத் திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளினவனேயென்கிறார். ||௨||
(கிடந்தநாள்) இங்ஙனேயொருபடியே கண்வளர்ந்தருளுகிறபிரானே உன் திருவுடம்புநோவாதோ, உன் திரு

இ—ய்கிறார் (ஸம்ஸாரதுக்கத்தாலே) தலைக்கணியாய்என்கிறவித்தாலே கீழ்ப்பாட்டிலே என்னைக்கடாக்ஷித்தருள
வேணுமென்றவர் இப்பாட்டில் உன்திருவடிகளை யென்தலையில் வைத்தருளவேணு மென்கிறாரென்று ஸங்க
திஸூசிதை. ||௨||

**✳மூன்றாம்பாட்டு.✳**

கிடந்தநாள்கிடந்தாயென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இங்ஙனேயித்யாதியால்) பிரானேயென்
றுஸம்போதநமாக நிக்ஷேபித்ததினாலே திருப்புளிங்குடிக்கிடந்தானே என்றதும் வ்யாவ்ருத்தம். எத்தனை
காலமித்யாதிக்குத்தாத்பர்யமருளிச்செய்கிறார் (உன் திருவுடம்புநோவாதோஎன்று) இதற்குஎழுந்திருந்துஇத்யாதி

ஸ—ர்வஶேஷமாக ஶேஷமாய்கடக்கிறவென்றபடி. அடியரோர்க்கு-அடியாரானவெங்களுக்கு, இப்படி உன்
னையொழிய நாயனில்லாதவெங்களுக்கென்றபடி. அருளி- க்ருபைபண்ணி, நீ- ஸர்வவிலக்ஷணனான நீ, ப
டிக்கு- ஜகத்துக்கு, படி- ஜகத், அளவாக- ஸமப்ரமாணமாக, நிமிர்த்த- உஜ்ஜ்ரும்பித்த, த்ரிவிக்ரமதஶையிலே ஜகத்தெல்லாம் வ்யாப்யமாகும்படி விஸ்த்ருதமாக்கப்பட்டவென்றபடி. ஸம்ஸாரிகளுக்கும் ஸாதாரணமானவென்கை. நின்பாதபங்கயமே- உன்னுடையபாதபங்கஜத்தையே, ஒருநாள்- ஒருநாளாகிலும்,
த்ருஷாதனொருநாள் நாக துணைக்கவேணுமென்னுமாப்போலே சொல்லுகிறபடி. தலைக்கு- என்னுடையஶி
ரஸ்ஸுக்கு, அணியாய்- அலங்காரமாக்கியருளவேணும். ||௨||

திருப்புளிங்குடிக்கிடந்தானே- ஆஶ்ரிதர்க்காக திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளுமவனே, இப்
படியே ஆஶ்ரிதர்க்கு மற்றுமுள்ள அபேக்ஷிதங்களைச்செய்தருள வேண்டாவோஎன்றுகருத்து. கிடந்தநாள்கிட
ந்தாய்- நீகண்வளர்ந்தருளுகிற அழகைக்காண ஆசைப்பட்ட ஆஶ்ரிதர்க்காகக் கண்வளர்ந்தருளுகிறநாளெல்லாம்
இங்ஙனேஒருபடியே கண்வளர்ந்தருளினாய், உன்திருவுடம்பு- அதிஸுகுமாரமான உன்திருமேனியானது,
அசைய- அசையும்படி, அசைவு- நோவு, ஒருபடியே கண்வளர்ந்தருளுகையாலே வ்யதிதமாம்படியென்கை.
எத்தனைகாலங்கிடத்தி- இன்னும் எத்தனைகாலம் கண்வளர்ந்தருளக்கடவை, நீஎல்லாம் ஆஶ்ரிதர்க்காகச்செய்
யுமவனாகையாலே இனி கண்வளர்ந்தருளுகையை எனக்காகத் தவிரவேணுமென்றுகருத்து. தொடர்ந்து- அ
நுஸரித்து, 'யயௌ யாவாந்ராஜாநம் யயாவநுஜகமிஷ்யந்' என்கிறபடியே தத்தவஸரங்களிலே 'ஸாநுஜோ
நேதாநுயாதஶ்ச' 'அலங்காரஸ்ய தஸ்ய ஸர்வஸ்ய' நிகேதநம் நிதேஶ்யம் ஸ்வீகாரோஷ்மஶ்ரியம்ஸ்வ
த" என்னுப்போலே உன்னைப்ப்ராப்தித்து அநுஸரணக்கிக்கொண்டென்றபடி. குற்றேவல்செய்து- அந்த
ரங்கைங்கர்யங்களைப்பண்ணி, தொல்- அநாதியான, அடிமை- ஶேஷத்வத்தினுடைய, வழி- க்ரமத்தலே,
அநாதிதவ்ருத்தியிலேயென்றபடி. வரும்- வராநிற்கிற, தொண்டரோர்க்கு- தாஸபூதரான வெங்களுக்கு,
இப்படிஉனக்கே அடிமையாகையாலே அநந்யகதிகளான வெங்களுக்கென்றபடி. இம்மூன்றுபாட்டிலும் தா
மடிமைசெய்கிறோமென்று வ்யாஸக்ஷேம்சொன்னபடியன்று, ஒருவனுக்கு அடிமையாயிருந்தவனை வேறொரு
வர்ரக்ஷியாரென்று தம்முடைய அநந்யகதித்வம் வ்யஞ்ஜிப்பிக்கைக்காகச்சொன்னபடி. அருளி- க்ருபைபண்
ணி, தடங்கொள்- தடாகத்தைக் அவலோகித்துக்கொண்டிருக்கிற, தடம்- தடாகம், கொள்ளுகை- ஒ
லிக்கை, அதிவிஶாலமானவென்றபடி. தாமரைக்கண்- தாமரஸவாஸங்கள்போலேயிருக்கிற திருக்கண்கள்,
விழித்து- அவ்வழகுகளையெல்லாம் நாங்கள்கண்டநுபவிக்கும்படி திறந்தருளி, நீ- ஸிம்ஹஸம்ஹநநனான நீ,
எழுந்து- ஶேஷஶயநத்தில்நின்றும்உத்திதனாய், உன்தாமரைமங்கையும்நீயும்- உனக்கநுரூபவைஶிஷ்ட்யமுள்ள நீ

மூ—மிடங்கொண்மூவுலகுந்தொழவிருந்தருளாய் திருப்புளிங்குடிக்கிடந்தானே* ||௪||

புளிங்குடிக்கிடந்துவரகுணமங்கையிருந்து வைகுந்தத்துணின்று* தெளிந்தவென்சிந்தையகங்கழியாதே யென்னையாள்வாயெனக்கருளி* நளிர்ந்தசீருலகமூன்றுடன்வியப்பநாங்கள்கூத்தாடிநின்றார்ப்பப்*

---

ஆ—வுடம்பு நோவாதே உன்னடியேனை யெனக்காகநீயொருநாள் தாமரைத்தடாகம்மலர்ந்தாப்போலே திருக்கண்களைவிழித்து எழுந்திருந்து உன் தாமரைமங்கையும் நீயும் இந்தலோகமெல்லாம் வாழும்படி இருந்தருளாயென்கிறார். ||௪||

(புளிங்குடி) உன்னுடையகாருண்யத்தினாலே எனக்காகப் புளிங்குடிக்கிடந்து வரகுணமங்கையிருந்து வைகுந்தத்துள்நின்று தெளிந்தவென்சிந்தை யகங்கழியாதே யென்னை யடிமைகொண்டருளினாப்போலே இன்னமும் உன்னுடைய வாத்ஸல்யத்தினாலே சோதிவாய்திறந்து தாமரைக்கண்களாலேநோக்கித் திருவடிகளையென் தலையிலேவைத்தருளிப் பிராட்டியோடேகூட இருந்தருளி ஆழ்வார்க்கபேக்ஷிதத்தைச் செய்தருளினானென்று இந்த கல்யாணகுணத்தைக்கண்டு லோகமெல்லாம் விஸ்மயப்பட நாங்கள்கூத்தாடிநின்றாரவாரப்பட

---

இ— யோடேயன்வயம். அதீபவாதத்தை ஸமாதானமிக்கிறார் (உன்னடியேனித்யாதியால்) தம்ஸம்பந்திகளையுங்கூட்டி தொண்டரோர்க்குஎன்று பஹுவசநமாயிருந்ததேயாகிலும் தாமேப்ராதாந்ய விவக்ஷிதரென்னும்கருத்தாலே அடியேனை எனக்கென்று ஏகவசநமாகநிர்தேசித்தது. யத்வா— கீழ்ப்பாட்டுக்களில்போலே இப்பாட்டில் குடியைநிர்தேசியாமையாலே தொண்டரோர்க்கென்றது ஸ்வார்த்தபஹுவசநமென்று கருத்தாகவுமாம். சேஷம் ஸ்பஷ்டம். (தாமரைமங்கையும்நீயும்) இத்யாதியாலே கீழ்ப்பாட்டிலே உன்திருவடிகளைத் தலைக்கணியாயென்றவர் இப்பாட்டிலே பிராட்டியும்நீயு மிருந்தருளுமழகைக் காணவேணுமென்கிறாரென்று ஸமதிஸந்தேயம். ||௪||

## ✳நாலாம்பாட்டு.✳

வாக்யத்ரயத்தில் விசேஷணங்கள் ஸப்ரயோஜநங்களாகைக்காக இது த்ருஷ்டாந்தமென்கிறார் (அருளினாப்போலேஎன்று) எனக்கருளிஎன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இன்னமுமித்யாதியால்) நளிர்ந்தசீரென்கிறதற்கு வ்யாக்யாநமாகத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (சோதிவாயித்யாதிகுணத்தையென்னுமளவாலே) உலகம்மூன்றுடன் வியப்பவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (லோக

---

ரூ—யான வக்ஷஸ்தலமியும்நீயுமாக, மங்கை- யுவதி, கீழே 'நின்திருவருளும் பங்கயத்தாள் திருவருளும்' மென்றிருவருக்கும் ஸம்ஸ்லேஷித்வேஷண உபாயத்வஞ்சொல்லிற்று. இங்கிருவருக்கும் ப்ராப்யத்வஞ்சொல்லுகிறது. இடங்கொள்- இடத்தைக்கொண்டிருக்கிற, விஸ்தீர்ணமானவென்றபடி. மூவுலகும்- த்ரிலோகமும், தத்ஸ்தஜநங்களெல்லாருமென்றபடி. தொழ- உங்களைஸேவித்துவாழும்படி, இருந்தருளாய்- "தம்லேவேவுண ஸர்காஸௌவஷ்டஸ்ரம்ஸ்த்தம்" என்கிறபடியேதிவ்யாஸிகையாக இருந்தருளவேணும். ||௪||

புளிங்குடிக்கிடந்து- எனக்காகத் திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளி, வரகுணமங்கை இருந்து- வரகுணமங்கை என்கிற திவ்யதேசத்திலே திவ்யாஸிகைசெய்தருளி, வைகுந்தத்துள்நின்று- ஸ்ரீவைகுண்டமென்கிற ஸ்தலத்தில் நின்றருளி, தெளிந்த- நான் ஸமர்த்தனென்றகலாதே கண்கள்சிவந்திலே ஸ்வாத்யாயாத்ருத்தைக்கண்டு தேறினவனை, என்சிந்தையகம்- என்னுடைய ஹ்ருதயாகாஸப்ரதேசத்தை, சிந்தை- ஹ்ருதயம், அகம்- உள், கழியாதே- விட்டுப்போகாதே, என்னையாள்வாய்- என்னையடிமைகொண்டருளுகிறவனே, இது ஸம்போதநம், எனக்கருளி- இப்படிபோலே இன்னமும் எனக்காகக்க்ருபைபண்ணி, நளிர்ந்த- ஸீதளமான, ஸந்தாபம்யித்தார் ஹ்ருதயம்குளிரும்படியான வென்றபடி. சீர்- உன்னுடைய கல்யாணகுணங்களை, என்பக்கல் உனக்குள்ள ஔதார்யஸௌசீல்யாதிகளை யென்றபடி. உலகம்மூன்று- லோகத்ரயமும், விசேஷஜ்ஞரோடு விசேஷஜ்ஞரல்லாதாரோடு வாசியற எல்லாருமென்றபடி. உடன்- கூட, ஏககண்டராயென்றபடி, வியப்ப- விஸ்மயப்படும்படியாக, நாங்கள்- உன்நடையழகைக்காண வாசைப்படுகிறநாங்கள், கூத்தாடி- நீநடந்தெழுந்தருளுகிற அழகைக்கண்ட ஸந்தோஷப்ரகர்ஷத்தாலே நர்த்தநம்பண்ணி, நின்று- ஸ்திரமாய் அவிச்சிந்நமாயென்றபடி. ஆர்ப்ப- ஆரவாரம்பண்ணும்படியாக, இதுக்கு வாராயென்கிறத்தோடே யன்வயம்.

மூ—காய்சினப்பறவையூர்ந்து பொன்மலையின்மீமிசைக்கார்முகில்போல* மாசினமாலிமாலிமானென்றங்கவர் படக்கனன்று முன்னின்ற* காய்சினவேந்தே கதிர்முடியானே கலிவயற்றிருப்புளிங்குடியாய்* காய்சினவாழி சங்குவாள்விற்றண்டேந்தி யெம்மிடர்கடிவானே* ||சு||

ஆ—கனிவாய்சிவப்ப நீகாணவந்து நின்பன்னிலாமுற்றம் தவழ்கதிர்முறுவல்செய்து நின்திருக்கண்தாமரை தயங்கநின்றருளாயென்கிறார். ||ரு||

(காய்சினப்பறவையூர்ந்து) உம்முடைய இந்த சேஷ்டிதங்களுக்குப் ப்ரதிபந்தகங்களில்லையோ ஸஹஸா முடியுமோவென்னில்? என்னுடைய சேஷ்டிதங்களுக்கு ப்ரதிபந்தகங்களைப் போக்குகைக்காகவன்றோ ஸம்வ்யக் மதாஸம்பத்திரூபி திவ்யாயுதங்களை யேந்தியருளியிருக்கிறது. ஆனபின்பு பொன்மலையின்மீமிசைக்கார் முகில்போலக்காய்சினப்பறவையூர்ந்து மாலிஸுமாலிமால்யவத் ப்ரப்ருதிராக்ஷஸநிரஸநம் பண்ணியருளினப்

இ—நான்காணும்படிவரவேணுமென்றது- ஜ்ஞாநசக்ஷுஸ்ஸாலன்றிக்கே ஸ்ரீமதுஜேந்த்ராழ்வானுக்குப் போலே பாஹ்யசக்ஷுஸ்ஸாலே காணும்படிவரவேணுமென்றபடி. அவதாரவிசேஷங்களோடேகூட நின்றருளவேணுமென்று ப்ரார்த்திக்கிறாரிப்பாட்டிலேயென்று ஸங்கதிஸூசிதமெ. ||ரு||

* ஆறாம்பாட்டு *

அவன்நமக்கு நிரபாயஸ்வபாவனென்னுமவஸ்த்திபாலே அவனுடைய ஸௌலப்யாதிநாநாகுணங்களான அவதாரநாமாதிகளைப் பெறவேணுமென்றபேக்ஷிக்கிற ப்ரகரணத்திலே இப்பாட்டிலே அவனுடைய ஸர்வேச்வரத்வத்தைவர்ணிக்கை யதாமதமென்றோவென்ன வகதரிப்பிக்கிறார் (உம்முடையவிஸ்த்ரிதியால்) முடியுமோஎன்றது- சேஷ்டிதங்கள் நிறைவேறுமோஎன்றபடி. தார்மிகவாதத்துக்குத் தாதும்ய-

ய—ராஜேந்த்ர: தயங்க- வீதிவ்ருக்ஷத்தாலே தாதௌஜ்வலங்களாக, தயங்குகை- தாதௌஜ்வல்யமாகை, நின்றருளாய்- நாலடிநடந்துவந்தருளின நீ ஸஹவ்ருத்திபயத்தாலே நடக்கவும்மாட்டாதே ஸ்தப்தனாய் என்முன்னே நின்றருளவேணும். ||ரு||

காய்சின- காயாநிற்கிற சினத்தையுடையவையான, சினம்- க்ரோதம், ஆச்ரிதவிரோதிவிஷயத்தில் தவிபாநிற்கிற க்ரோதத்தையுடையவையானவென்றபடி. ஆழி சங்கு வாள் வில் தண்டு- ஸம்வ்யக் வஜ்ர நந்தகசார்ங்கங்களை, தண்டு- கதை, ஏந்தி- தரித்துக்கொண்டு, எம்மிடர்- எங்களுடையவாபத்தை, கடிவானே- நிரஸிக்கக்கடவனான, எம்மென்று ஸார்வநிர்வாஹவசநம் என்னுடைய ப்ரதிபந்தகங்களையெல்லாம் நிரஸிக்கக்கடவனானவென்று பர்யாயம். இது புளிங்குடியாயென்கிறதற்கு விசேஷணம். பொன்மலையின்- கநககிரியினுடைய, மீமிசை- மேலேயிருந்ததான, கார்முகில்போல- காளமேகம்போல, காய்சின- சத்ருக்களைக்காயாநிற்கிற க்ரோதத்தையுடையவனான, பறவை- பக்ஷியை, கருடனையென்றபடி. ஊர்ந்து- நடத்திக்கொண்டு, இதற்குக்கனன்றுஎன்கிறத்தோடே அந்வயம். மாசின- மஹாக்ரோதரான, மாலிமான்மாலிஎன்றவர் என்று கூறியிப்பது. ஸுமாலிஎன்கிறவர்கள், மான்- மஹான், மஹானான மாலி என்றதுஸுமாலியென்றபடி. இது மால்யவானுக்கும் உபலக்ஷணம். மாலி ஸுமாலி மால்யவாந் என்று ப்ரஸித்தர்களான அந்தராக்ஷஸர்களென்றபடி. அங்கு- அந்தயுத்தபூமியிலே, பட- படும்படி, வாராஜிதராம்படியென்னுகைபடுகை- நசிக்கை. ஆனாலும் நசித்தவன் மாலிஒருவனேயொழிய மற்றையிருவரும் அப்போது நசித்தவரல்லாமையாலே படஎன்றது ஸாமாந்யாபிப்ராயம். கனன்று- ப்ரகாசிதனாய், கனறுகை- ப்ரகாசிக்கை, முன்னின்ற- அவர்கள்முன்னே நின்றருளினவனான, முன்னின்றநிலையினுடைய மாஹாத்ம்யத்தைக்கண்டவளவிலே ராக்ஷஸர்களெல்லாம் நடுங்கிஓடினார்களென்றுகருத்தாலே முன்நின்றவென்றது. காய்சின- "ஜகாம ஸத்ருஷு: க்ரோதம்" என்கிறபடியே ஆச்ரிதவிரோதிகளைப் ப்ரதவிபாநிற்கிற க்ரோதமாணத்தையுடையவனான, வேந்தே- ஸ்வாமியான, வேந்தன்- ஸ்வாமீ, கதிர்முடியானே- கிரணமாலியான கிரீடத்தையுடையவனான, கதிர்- கிரணம், ப்ரதிபக்ஷநிரஸநஸம்ஜாத வீரச்ரீயாலே ஜாஜ்வல்யமாந திவ்யகிரீடசாலியானவென்றபடி. கலிவயல்- ஸஸ்யஸம்ருத்திமான வயல்களையுடைத்தான, கலியென்றுஸம்ருத்தி. திருப்புளிங்குடியாய்- திருப்புளிங்குடியிலே எழுந்தருளியிருக்குமவனே, நின்திருக்கண்தாமரை தயங்கநின்றருளாயென்று கீழ்ப்பாட்டில் க்ரியையை அநுஷங்கித்துக்கொள்வது. ||சு||

மூட்டுறு வெல்லார்க்கு ஆவிகமழ் திருக்கார்க்கரை* மருவியமாயன் றன் மாய வினைதோறே* ॥௧॥
வினைதொறுஞ்சொல்லுந்தொறு நெஞ்சிடிந்துகும்* வினைகொள்சீர்பாடிலும் வேமெனதாருயிர்* சுனைகொள்
பூஞ்சோலைத் தென்காரக்கரையென்னப்பா*

ஆ— மாயங்களை நினைக்கை தவிரலாம்ோ; என்னுடைய நிரவதிகமான வஸ்நிவேசமானது தவிர வொட்டுகிறதில்லை. நானென்செய்கேனென்கிறார். ॥௩॥

(வினைதொறும்) எல்லாருடைய து:க்கங்களையும் போக்கக்கடவதான வுன்னுடைய விக்ரமங்களை நினைத்தல் சொல்லுதல் பாடுதல்செய்யில் என்னெஞ்சு மிவ்வாத்மாவும் மாயாநின்றன, நீரிங்ஙனேயீடுபடுகைக்கு உம்மு

இ— வித்தீயவாதகாதாவும் செல்விற்றுயிற்று. தவிரவொட்டுகிறதில்லையென்றிவ்வுக்தத்தில் சொன்னவித்தாலே இத்திருவாய்மொழிக்கு விஸ்லேஷ அஸஹத்வமென்கிற ஸமஸ்தமும் வ்ருதிவாக்யமென்று ஸூசிதமாயிற்று. ॥௧௧॥

*இரண்டாம்பாட்டு:*

வினைகொள்சீரென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (எல்லாருடையவித்யாதியால்) இனி வடி வழகத்திலுள்ள வடிவங்களுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (வினைத்தவித்யாதியால்) வினைவுசொல்லுக்களிலே நெஞ்சுக்கும் பாடலிலே ஆத்மாவுக்கும் விகாரம் பாட்டில்தோற்றுகிறதேயாகிலும் ஸமஸ்தபாவத்தாலே இவைஇரண்டுக்கும் மூன்றுக்ரியைகளிலும் ஸமானமேயவிகாரம் விவக்ஷிதமென்றுகருத்து. மாயாநின்றனவென்றது— மிகவும் வ்யாகுலப்படாநின்றனவென்றபடி. அவன்குணங்களைக் கொண்டாடினாப்போலே வினைகளிலேனித்யாதியாலே தாம்லௌகிகம்பண்ணினதைக் கொண்டாடுகை யதார்த்தமன்றோவென்ன விதுக்குத் தாத்பர்யஞ்சொல்லுகைக்காக வவதரிப்பிக்கிறார் (நீரிங்ஙனேயித்யாதியால்) திறத்தில்- விஷயத்தில்,

ஸா— ஸ்ப்ருஹாவிஷயத்தாலே த்ருஷியாநின்றது. ஆல்- விஷாதத்யோதகம். நெஞ்சைநிறுத்தி அநுபவிக்க முடிகிறதில்லையென்று விஷாதப்படுகிறபடி. ஆனால் ஸ்மரணத்தைத் தவிர்ந்தாலோவென்றில்? வேட்கையும்- ஆஸக்தி, வெறுப்பும், அநுபவஸாமஸ்யத்தாலே பிறந்த வுத்தரோத்தராபிவ்ருத்தியுமென்றபடி. உயிரின் பரமன்றி- ஆத்மாவின் ஸாமன்றிக்கே, ஆத்மாவுக்குப் பொறுக்குமளவன்றிக்கே யதிப்ராவண்யமாயென்றபடி. பெருகும்- அபிவ்ருத்தியாநிற்கிறது, வேட்கையுமென்கிறவிடத்தில் உம்மைத்தால் அநுபவிக்க வொண்ணாதபடி நெஞ்சுருகி வாயிக்கிற ஸாத்தியமன்றிக்கே ஆஸக்தியும் மதிப்ராவண்யமாய் மறந்திருக்கவொட்டாதபடி வாயிக்கிறதென்றபடி. ஆல்- விஷாதாதிஶயத்யோதகம். தொண்டனேன்- ஸமஸ்தகுணவிஷயத்தில் அடிமையான நான், தொண்டன்- அடியேன், இச்சப்தத்தாலே தன்னைச்சொல்லிக்கொள்ளும்போது தொண்டனேனென்று ப்ரயோகம். என்செய்கேன்- எத்தைச்செய்யக்கடவேன். நெஞ்சையுருகாமல் நிறுத்தவோ, ஆஸக்தியை அபிவ்ருத்தியை மட்டுப்படுத்தவோ, அவன் குணங்களை அநுபவவிஷயமாகாதபடி விலக்கவோ, என் ஸ்வபாவத்தைத்தவிரவோ வென்றபடி. இவையொன்றும் ஶக்யமன்றென்று கருத்து. ॥௧௧॥

சுனைகொள்- ஸரஸ்ஸுக்களைக்கொண்டிருக்கிற, சுனை- ஸரஸ்ஸு, ஸரஸ்ஸுக்களையுடைத்தானவென்றபடி பூஞ்சோலை- தர்ஶநீயமான உத்யாநத்தையுடைத்தான, பூம்- தர்ஶநீயம், தென்- ஸுந்தரமான, கார்க்கரை- திருக்கார்க்கரையென்கிற திவ்யநகரத்தையுடையவனான, என்னப்பா- என்னுடையஸ்வாமியே, வினை- எல்லாருடைய து:க்கங்களையும், வினைஶப்தமிங்கே லக்ஷணயாது:க்கவாசம். கொள்- கொள்ளுமவையான, கொள்ளுகை- க்ரஹிக்கை, நஶிப்பிக்கதக்கவையான வென்றபடி. எல்லார்க்கும் து:க்கங்களைப்போக்குமவை யென்னையொருவனையும் வ்யாகுலப்படுத்துகிறன வென்றுகருத்து. சீர்- ஸௌஶீல்யாதிகுணங்களை வினைதொறும்- ஸ்மரிக்குங்காலமெல்லாம், நெஞ்சு- என்மனஸ்ஸானது, இடிந்து- ஶிதிலமாய், சொல்லுந்தொறும்- சொல்லுங்காலமெல்லாம், உகும்- உருகும், நீராயுருகாநிற்கும், பாடிலும்- அந்தகுணங்களைகானம்பண்ணிலும், எனது- ஸ்வீயமான, ஆத்மாவிரோதிஷ்டம்: ஆர்- பூர்ணமான, ஆர்தல்- த்ருப்தியாய்ப்பூர்ணத்வத்தைக்காட்டுகிறது, உனக்கு ஶேஷபூதமானவென்றபடி. உயிர்- ஆத்மாவானது, வேம்- ஸந்தாபி

மூ— நினைகிலேனுனக்காட்செய்யுநீர்மையே* ॥௨॥

நீர்மையால்நெஞ்சம்வஞ்சித்துப்புகுந்தென்னை* யீர்மைசெய்தென்னுயிராயென்னுயிருண்டான்* சீர்மல்கு

சோலைத்தென்காரக்கரையென்னப்பன்* கார்முகில்வண்ணன்றன்கள்வமறிகிலேன்* ॥௩॥

ஆ— ...டையதிறத்தில் நான்செய்ததென்னென்னில்? நான் உன்னையடிமைகொள்ளுகிறோம என்றுகொண்டுவந்து நீயென்திறத்துச்செய்தருளின செயல்களை நினைக்கலாமோவென்கிறார். ॥௨॥

(நீர்மையால்) உம்மையடிமைகொள்கைக்கு மேற்படச்செய்ததுண்டோவென்னில்? அடிமைகொள்வாரைப்போலே யென்னெஞ்சை வஞ்சித்துப்புகுந்து தன்குணங்களாலும் செயல்களாலு மென்னை மாய்த்து என்னுயிராய் என்னுயிரை போஜித்தருளினன், முந்தறமெய்யரைப்போலேவந்து புகுந்தபடியும், பின்னைச்செய்த

இ— அதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நானுன்னையடிமையித்யாதியால்) காமுகன் காமிநீவிஷயத்திலேபோலே எம்பெருமான்தம்பக்க லத்யந்தஸக்தனாய்க்கொண்டு உபகாரமெடியழிந்து ஸம்ஶ்லேஷித்தபடியைத் தாமதற்கிசைந்திருந்தவளவைக்கண்டு தாமாள்ச்செய்ததென்று விநயோக்தியாலேசொல்லி யதைக்கொண்டாடுகிறாரென்றுகருத்து. நினைக்கலாமோவென்றது- நினைக்கஶக்யமோவென்றபடி. யத்வா:— ஆஸக்த்யதிஶயத்தாலே நீ உபகாரமாகச்செய்தாலும் நானதைநினைக்கை யுசிதமோவென்றபடி. ஆதலாலதை யென்வாயால் சொல்லமாட்டேனென்கிறாரென்றுகருத்து. இத்தால் கீழ்ப்பாட்டில் தாமநுபவித்த ஸம்ஶ்லேஷத்தை ஸ்த்ரீப்ராயத்தாலே அவனைக்குறித்துச்சொல்லுகிறாரென்று ஸங்கதியும்ஸூசிதமாயிற்று. ॥௨॥

*மூன்றாம்பாட்டு.*

அவன்குணங்களைச்சொல்லி ஸந்தோஷிக்கிற ப்ரகரணத்திலே யிப்பாட்டிலேயவனை ஸஹஜனைச்சொல்லுகை யஸமஞ்ஜஸமன்றோவென்ன விதுக்குத் தாத்பர்யஞ்சொல்லுகைக்காக வவதாரிப்பிக்கிறார் (உம்மையித்யாதியால்) நெஞ்சம்வஞ்சித்துப்புகுந்து என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அடிமைகொள்வாரையித்யாதியால்) என்னைநீர்மையா லீர்மைசெய்தென்றதயித்துத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தன்குணங்

ஈ— ஶயமாற்றமாட்டாமையாலே தவமாகாநிற்கிறது, அப்படிநாமுமக்குச் செய்வதென்னென்னில்? நான்— உனக்கத்யந்தஶேஷியனானான், உனக்காட்செய்யும்நீர்மை. உனக்கடிமைசெய்யும்ப்ரகாரத்தை, நீர்மை. ப்ரகாரம். பண்டுநீ உபகாரமாக ஸம்ஶ்லேஷிக்கும்போதெயில் உனக்கிட்டவிநியோகமாய யிருந்தபடியையென்றபடி. நினைகிலேன்- நினைக்கமாட்டேன், நீசெய்தது கரைகடைந்ததாகையாலே யதை நினைக்கமாட்டுகிறிலேனென்றுகருத்து. ॥௨॥

நெஞ்சம்- என்னுடையமநஸ்ஸை, வஞ்சித்துப்புகுந்து- நம்மை யடிமைகொள்ளவருகிறோமென்று ஸ்ரீத்தம்ஸீகரிக்கும்படி பண்ணிக்கொண்டுவந்துபுகுந்து, என்னை- ஶேஷஶேஷிபாவமுறை தப்பாமே யடிமைசெய்வித்துக்கொள்ள வந்தானென்றிருக்கிறவென்னை, நீர்மையால்- நல்லஸ்வபாவத்தால், தன்னுடைய ஸௌஶீல்யத்தாலும் தத்காரமாய் ஶேஷஶேஷிபாவமுறையழியும்படி யத்யந்தஸக்தமான வேஷிகத்தாலுமென்றபடி. ஈர்மைசெய்து- த்ரவீபடுத்தி, ஈர்மை- நெகிழ்கை, இங்குத்ரவீபடுத்துகிறதைச் சொல்லுகிறது. அந்த குணாநுபவஜாதிஶயம் பொறுக்கமாட்டாதே த்ரவீபடும்படிபண்ணியென்றபடி. என்னுயிராய்- எனக்குப்ராணனாய், எனக்குத்தன்னைப்பிரியில் தரிக்கவொண்ணாதபடியாயென்றபடி. என்னுயிர், என்னாத்மாவை, உண்டான்- போஜித்தவனை, உபநாயவயஸாம்ப்ராவதிகீ ஸ்ரீபவஸாவைப்பெற்றாப்போலே யநுபவித்தவனனென்றபடி. சீர்மல்கு- ஸ்ரீப்ரவஹியாநிற்கிற, மல்குகை- ப்ரவஹிக்கை, உபாஸவஸேவஸந்த்ருஶமாகாநின்றுள்ள, வென்றபடி. என்னை யநுபவிக்கப்பெற்றவனுடைய ஸம்ஶ்லேஷத்தாலே யவனூருக்குங்கூட ஶோபாதிஶயமுண்டாயிற்றென்றுகருத்து. சோலை- உத்யானங்களையுடைத்தான, தென்- அழகியதான, கார்க்கரை- அந்ததிவ்யநகரத்தையுடையவனை, என்னப்பன்- எனக்கு நிரவதிகவாத்ஸல்யவானை, கார்முகில்வண்ணன்தன்- காளமேகவர்ணனுடைய, என்னையநுபவித்து திருமேனியும் ஶோபாதிஶயம்பெற்றதென்றுகருத்து. கள்வம்- க்ருத்ரிமங்களை, முந்தறஶேஷிபவமுறை தப்பாமல்வருவானைப்போலே வந்து நான் உபீக்ருதனானபின்பு ஶேஷஶேஷிபாவமுறை மாறுடி யத்யந்தமாக வென்னைபோஜித்தவிந்த க்ருத்ரிமங்களையென்றபடி. அறிகிலேன்- அறியமாட்டுகிறிலேன், யதாவத்தோ கபடோபாயமோவென்று

மூ—அறிகிலேன்றன்னுள்ளனைத்துலகுநிற்க* நெறிமையாறானுமவற்றுணிற்கும்பிரான்* வெறிகமழ்சோலைத் தென்காட்கரையென்னப்பன்* சிறியவென்னாருயிருண்டதிருவருளே* ॥௪॥

ஆ—படியும், ஒருவன்வஞ்சித்தபடி யொன்றுமறிகிலேனென்கிறார். ॥௧॥

(அறிகிலேன்) உம்முடையபக்ஷத்தில் அவனங்ஙனே ஸர்வநிர்வாஹகனாகில் சிகனுண்டோவென்னில், ஸர்வநிர்வாஹகனானால்தான் மற்றுள்ளாரோடு நெறிகெடாமை கலந்துபரிமாறுமாப்போலே பரிமாறவமையாதோ, தானென்னை ஸ்வீகரித்தருளி நெறிகெடும்படி பரிமாறவேணுமோ, இவ்வஸ்திவைஷம்யத்துக் கொருமுடிவு காண்கிறிலேனென்கிறார். ॥௨॥

(திருவருள்) திருவருள்செய்பவன்போலே யென்னுள்ளேபுகுந்து என்னை ஸ்வீகரித்தருளுகையன்றியே என்னுருவமுங்கூட ஸ்வீகரித்தருளினான், ஒருவனஸ்திவைஷம்யிருக்கும்படியே இது முந்துறவந்துபுகுந்தருளினபடி. ॥

இ— களாலுமித்யாதியால்) கள்வமறிகிலேனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (முந்துறவித்யாதியால்). ॥௩॥

**✳ நாலாம்பாட்டு. ✳**

கீழ்ப்பாட்டிற்சொன்னவர்த்தத்தையே 'என்னாருயிருண்டதிருவருளறிகிலேன்' என்றுசொல்லுகிறதாகையாலே இப்பாட்டு வ்யாக்யானமன்றோவென்ன விதுக்குத் தாத்பர்யஞ்சொல்லுகைக்காக வவதரிப்பிக்கிறார் (உம்முடையவித்யாதியால்) சிகனுண்டோவென்றது- செய்யலாவதுண்டோவென்றபடி. த்விதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸர்வநிர்வாஹகனால்தானித்யாதியால்) நெறிகெடாமேயென்றது- தான்சேஷியான முறைதப்பாமேயென்றபடி. த்விதீயபாதஸமுதிவ்யாஹாரத்தால் த்ருதீயபாதத்துக்கு அபிமதவர்த்தத்தையருளிச்செய்கிறார் (தானென்னையித்யாதியால்) அறிகிலேனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இவ்வஸ்திவைஷம்யத்துக்கித்யாதியால்) ॥௪॥

**✳ ஐந்தாம்பாட்டு. ✳**

த்விதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னைஸ்வீகரித்தருளுகையித்யாதியால்) இதுவேயிப்பாட்டுக்கு ஸங்கதியுமாயிற்று. கணனன்கள்வங்களென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இதுமுந்த

ஸ—நிரூபிக்கமாட்டுகிறிலேனென்றபடி. ஸர்வேச்வரனைவனிப்படியென்பக்கல் வ்யாமோஹம்பண்ணக்கூடாது, ஸர்வப்ரமாணஸித்தமாயிருக்கையாலே யிதுபொய்யென்னவுங்கூடாது, ஆதலால் நான் ப்ரமித்தேனோ வென்றபடி. இருந்தும்வியந்தில் 'மருள்தானீதோ மாயமயக்குமயக்கே' என்கிறதையிங்குஞ்சொல்லுகிறார். ॥௧॥

தன்னுள்- தன் ஸங்கல்பத்திலே, அனைத்துலகம்- ஸர்வலோகங்களும், நிற்க- ப்ரதிஷ்டிதமாயிருக்க, ஸங்கல்பாதீனமாய்க்கொண்டு சேஷவ்யாபாரத்தை முறைதப்பாமலிருக்க வென்றபடி. தானும்- சேஷியான தானும், ஸர்வமும் அவை முறைதப்பாதிருக்குமாப்போலே தானும்முறைதப்பாதிருக்கிறானென்கைக்காக. நெறிமையால்- உபாயத்தையால், நெறி வழியாய் உபாயத்தைக் காட்டுகிறது. சேஷிஸ்வ உபாயத்தை தப்பாமலென்றபடி. அவற்றுள்- அந்த லோகங்களுக்குள்ளே, நிற்கும்- வர்த்திக்குமவனான, பிரான்- உபகாரகனான, வெறி- பரிமளமானது, கமழ்- வாஸியா நிற்கிற, ஓதநவாகம் வஸந்தீவஸ ப்ரசோம் சோலை- உத்யானங்களை யுடைத்தான, தென்காட்கரை- அழகியகாட்கரையை யுடையவனான, என்னப்பன்- என் ஸ்வாமியானவன், சிறிய- க்ஷுத்ரனான, என்- என்னுடைய, ஆர்- அவன் வ்யாமோஹாஸ்பதமான, ஆர்த லாபிக்யமாய் ஸாரஸ்யத்தையைக்காட்டுகிறது. இவர் தாம் தம்மை யதிக்ஷுத்ரவஸ்துவாக நினைத்திருக்கச்செய்தே அவன் தனக்கு ஸாரஸ்யமான வஸ்துவாக நினைத்திருக்கிறானென்று கருத்து. உயிரை- ஆத்மாவை, உண்ட திருவருள்- ஸ்வீகரித்தருளின விந்த ஸாரஸ்யமான வாஸ்தவஸம்ச்லேஷஸ்திவைஷம்ய காரணத்தை, அருள்- க்ருபை, இங்கு லக்ஷணயா ஆச்ரித ஸம்ச்லேஷஸ்திவைஷம்யத்தைக்காட்டுகிறது. அறிகிலேன்- அறியமாட்டுகிறிலேன், பரிச்சேதிக்க முடிகிறதில்லை யென்றபடி. இப்பாட்டில் 'சிறியேனுடைச் சிந்தையுள் மூவுலகுந்தன்னெறியாவற்றிற்கொண்டு நின்றொழிந்தாரே' என்று இருந்தும்வியந்திற் சொன்ன வர்த்தத்தை யிங்கு அநுவாதித்தபடி. ॥௨॥

மூ—திருவருள்செய்பவன்போலவென்னுட்புகுந்து* உருவமுமாருயிருமுடனேயுண்டான்* திருவளர்சோலைத்
தென்காட்கரையென்னப்பன்* கருவளர்மேனியென்கண்ணன்கள்வங்களே* ௬
எங்கண்ணன்கள்வமெனக்குச்செம்மாய்நிற்கு* மங்கண்ணனுண்டவாருயிர்க்கோதிது*

ஆ—அது பின்னைநின்றுசெய்தருளினபடி; இதுஒருவன் கள்வங்களேயென்கிறார். ௬
(என்கண்ணன்) ஒருநாளிங்ஙனே யவன்ஸ்ரீஹஸ்தமெனையிலகப்பட்டால் பின்னையதில் அகப்படாதே வாஸி
ஸிக்கவொண்ணாதோ என்னில்? நாடோறும்மென்மெய்யையென்னை யடிமைகொண்டருள வருகிறானென்றெனக்
குத்தோற்றும்படிவந்து ஆஶ்ரிதவாத்ஸல்யம் என்னுடைய அறிவழியும்படி ஸ்வீகரித்துப்போம். போனவாறே பின்னைப்

இ—(ஆவிஶ்ரித்யபால்) இதுஎன்றது- ஶேஷிக்குத்தம்மெதிர்நிலையாதே யடிமைகொள்வாரைபபோலே வந்ததென்
றபடி. அதுஎன்றது- ஶேஷமானவென்னுடைய தேஹத்தையுங்கூடத் தனக்கு பாரார்த்யமாக வந்நுபவ
வித்ததென்றபடி. ௬

✳ ஆறாம்பாட்டு. ✳

அவன்செய்வது க்ருத்ரிமமென்று தாமறிந்துசொல்லாநிற்கச்செய்தே அவன்க்ருத்ரிமமெனக்குச் செவ்வை
யாய்த்தோற்றுமென்றுசொல்லுகை யஸம்மதமன்றோவென்ன விதுக்குத் தாத்பர்யஞ்சொல்லுகைக்காக வவ
தரிப்பிக்கிறார் (ஒருநாளிகாதியால்) இப்போது க்ருத்ரிமமென்று தோற்றுகிறதேயாகிலும் அவன்முகத்தை
க்கண்டவாறே மெய்யென்று தோற்றுகிறதென்கிறாராகையாலே ஸம்மதமென்றதாயிற்று. ப்ரயோஜனத்துக்
குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நாடோறுமிகாதியால்) த்விதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கி
றார் (ஆஶ்ரிதவாத்ஸல்யாதியால்) ஆஶ்ரிதவாத்ஸல்யமென்றது- க்ரியாவிஶேஷணம். இது தேவகதோஷமாய் ஆஶ்ரித

ப—திருவருள்- ஸ்ரீமத்க்ருபையை, 'வழிவிலாவடிமைசெய்யவேண்டுநாம்' என்று ஆசைப்பட்டபடியே அடி
மைகொள்ளுகையாகிற மஹோபகாரத்தையென்றபடி. செய்பவன்போல- செய்யப்புகுகிறவன்போலே, தனக்
கொன்று மபேக்ஷிதமன்றிக்கே யெனக்கேயுபகாரமாக வெழுந்தருளுகிறவன்போலே யென்றபடி. என்னு
ள்- என்நெஞ்சிலே, புகுந்து- ப்ரவேஶித்து, உருவமும்- ரூபத்தையும், என்ஶரீரத்தையு மென்றபடி.
ஆர்- ஆதிகமான, தனக்கு ஸ்வாவ்யமானவென்றபடி. உயிரும்- ஆத்மாவையும், உடனே- கூடவே, தேஹாத்
மாபேதவிபாகமன்றியேயென்றபடி. உண்டான்- ஸ்வீகரித்தவனை, மஹாபோகமபெற்றதாக வநுபவித்தவ
னையென்றபடி. திருவளர்- ஸ்ரீவர்த்தியாநின்றுள்ள, என்னை யநுபவிக்கப்பெற்ற ஸந்தோஷத்தாலே அவ
வூர்ச்சோலையும் தழைத்ததென்றுகருத்து. சோலை- உத்யானங்களையுடைத்தான, தென்- ஸுந்தரமான, கா
ட்கரையென்னப்பன்- திருக்காட்கரையென்கிற திவ்யநகரத்தையுடைய வென்ஸ்வாமியான, கருவளர்- கறு
ப்புவளராநின்றுள்ள, என்னோடு ஸம்ஶ்லேஷத்தாலே காந்திவர்த்தியாநின்றுள்ளவென்றபடி. மேனி- திருமே
னியையுடையவனை, என்கண்ணன்- எனக்குஸுலபனான க்ருஷ்ணனுடைய, கள்வங்களே- க்ருத்ரிமங்களென்ன
வாஶ்சர்யங்கள், கள்வங்களேயென்கிறவிடத்தில் ஸ்வரத்தாலே விஸ்மயம்விவக்ஷிதம். வரும்போதொருபடியும்
பின்பொருபடியுமான க்ருத்ரிமவ்ருத்திகளென்ன வாஶ்சர்யங்களென்றபடி. ஸ்வாமித்வத்தால் அடிமைகொள
வானைப்போலேவந்து தானென்பக்கல் நியாமகஸ்வரூபனாயிருக்கையும் விரோதியான ஶரீரத்தை நிவ
ர்த்திப்பானைப்போலேவந்து அதைத்தனக்கு பாரார்த்யமாக ஸ்வீகரிக்கையும் தானெனக்கு போக்யமாக
வருவானைப்போலே வந்து என்னைத்தனக்கு போக்யமாக ஸ்வீகரிக்கையும் என்பேறாக வருவானைப்போலே
வந்து தன்பேறாகத்தலைக்கட்டிக்கொள்ளுகையுமாகிற க்ருத்ரிமவ்யாபாரவிஶேஷங்கள் விவக்ஷிதங்கள். ௬

என்கண்ணன்கள்வம்- என்பக்கல த்ருஶ்யமான க்ருஷ்ணனுடைய வ்யாபாரங்கள், எனக்கு- அவ
ன்ரூபத்தைக்கண்டவாறே பரவஶனாயிருக்கும் ஸ்வபாவனனவெனக்கு, செம்மாய்நிற்கும்- ஆர்ஜவமாயிருக்கும்,
செம்மென்றுஆர்ஜவ, க்ருத்ரிமமென்றுதோற்றாதே மெய்யென்றுதோற்றுமென்றபடி. அங்கண்ணன்- ஆஶ்ரிதவத்ஸல
னவன், அங்கண்ணனென்று ஆஶ்ரிதவத்ஸலனுக்குப்பேர். உண்ட- அநுபவித்ததான, என்- என்னுடைய, ஆர்-
அவன்போக்யஸ்வபாவமான, இதுஉயிர்கோது- இந்தஉயிர்க்கோதானது, கோது- த்யாஜ்யம், நிஸ்ஸாரமா
ய்விட்ட நிஷ்ப்ரயோஜனவானதென்றபடி. அவனிதை யநுபவிக்கும்போது ரஸாதிஶயத்தாலே யறிவழிந்த
நிஷ்ப்ரயோஜனதென்கை. புன்கண்மை- புல்லிதானகண்ணுடைத்தாகுகையை, புல்லியது- அல்பம், கண்-

மூ—புன்கண்மையெய்திப்புலம்பியிராப்பக* லென்கண்ணனென்றவன் கார்க்கரையேத்துமே* ‖௬‖
கார்க்கரையேத்து மதனுட்கண்ணா வென்னும்* வேட்கைநோய் கூர நினைந்து கரைந்துகும்* ஆட்கொள்
வானொத்தென் னுயிருண்டமாயனால்* கோட்குறைபட்டதென்னாருயிர் கோளுண்டே* ‖௭‖

ஆறு—யிவ்வாத்மாவானது நெடும்போதுகூட து:க்கார்த்தமாய் அவனையாசைப்பட்டு என்கண்ணா! என்கண்ணா! என்றலற்றி அவனெழுந்தருளியிருந்த திருக்கார்க்கரையை யேத்தாநிற்குமென்கிறார். ‖௬‖

(கார்க்கரையேத்தும்) இப்படி யவனைக்காணவேணுமென்னு மாசையாலே அவனை நினைத்தலற்றி, அவஸந்நமானவாறே, பின்னையும் பண்டுபோலே யென்னை யடிமை கொள்வாரைப்போலே வந்து புகுந்து, என்னுயிரைமாள போஜித்துப்பின்னையும் போஜ்யபாதானாயிருக்கு மென்கிறார். ‖௭‖

இ—ஆறென்று வாக்யமாகவுமாம். அறிவழியும்படியென்றது- கோதுமஸ்வரூபாதஷ்டசொன்னபடி. ஸாதி ஸயத்தாலே ஶோஷிதமரம்படியென்கை. பாட்டெல்லா மேகவாக்யமாயிருக்க வ்யவஸ்தாநத்தில் போஜித்துப் போமென்று இங்கேவாக்யபேதம்பண்ணினது- அவன்க்ருதிஶேஷம் அவன்ஶேஷத்தைக்காணும்போது மெய் யாகவேதோற்றுமென்றும் க்ருதிஶேமென்றிப்படி ஶேஷியு மவன்பக்கலென்னுடைய ஆசைபோகாதென்று மிவ்வபிப்ராயத்திலும் பாட்டுக்குத் தாத்பர்யமென்றுகாட்டுகைக்காக. புன்கண்மையெய்தி யென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நெடும்போதிவ்யாதியால்) புலம்பியென்கிறதில ஸாத்விகாபிப்ராயத்தை யருளிச் செய்கிறார் (அவனையாசப்பட்டுஎன்று) ஶேஷம் ஸ்பஷ்டம். ‖௬‖

## ✳ ஏழாம்பாட்டு ✳

மேலொரு அர்த்தவிஶேஷம் சொல்லுகைக்காக கீழ்ச்சொன்னதை யநுவதிக்கிற திப்பாட்டின் அவதாரிகை மென்று காட்டுகிறார் (இப்படி யிவ்யாதியால்) இப்படி யென்கிறதற்கு அலற்றி யென்கிறதோடே அந்வயம். யதா:— கீழ்ப்பாட்டில் ஶோகாக்ராந்தமான அவஸாதம் ஸம்போகமன்றிக்கேயும் ஸித்தமாகையாலே யதுவு மிங்கநுவதிக்க யோக்யமாகையால் இப்படி என்கிறத்துக்கு அவஸந்நமான வென்கிறதோடே அந்வயமாக வுமாம். இவ்வநுவாதத்தாலே யிப்பாட்டுக்கு கீழ்ப்பாட்டோடே யவாந்தரஸங்கதியும் ஸித்தமாயிற்று. த்விதீய வாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவஸந்நமானவாறே யென்று) என்னுயிரிதிஶேஷ:. த்ருதீய வாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பின்னையுமிவ்யாதியால்) சதுர்த்தவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச் செய்கிறார் (பின்னையும் போஜ்யபாதானாயிருக்குமென்று) இத்தால் ஐந்தாம்பாட்டிலே யென்னுடைய ஆத்மாவையும் ஶரீரத்தையும் தனக்கு போக்யமாக வநுபவிப்பானென்றவ ரிப்பாட்டிலே அப்படி யநுபவித்தாலும்

ஸா—ஸூக்ஷ்மநம், எய்தி- அடைந்து, இப்படிஶோஷிதமாயிருந்தது அவனநுபவித்துப்போய் நெடும்போதானபின் புநஸ்ஸம்ஶ்லேஷாபாவமாயென்றபடி. இராப்பகல்- நக்தந்திவம், என்கண்ணனென்று- எனக்கு ஸுலபனான க்ருஷ்ணனென்று, புலம்பி- ப்ரலபித்து. அவன்கார்க்கரை- அவனுடைய திருக்கார்க்கரையை, ஏத்தும்- ஸ்துதியாநிற்கும், அவனெழுந்தருளியிருக்கிற திருக்கார்க்கரையை அவனைக்காணவேணுமென்னுமாசையாலே கொண்டாடாநிற்குமென்றபடி. ‖௬‖

என்- என்னுடைய, ஆர்- அவனுக்கு பூர்ணமான, உயிர்- ஆத்மாவானது, கார்க்கரை- அவனெழுந்தருளியிருக்கிற திருக்கார்க்கரையை, ஏத்தும்- அவனைக்காணவேணு மென்னுமாசையாலே ஸ்துதியாநிற்கும், அதனுள்- அதுக்குள்ளே நிற்கிற, கண்ணாவென்னும்- க்ருஷ்ண? என்றழையாநிற்கும், வேட்கை நோய்- அபிநிவேஶ வ்யாதியானது, நோய்- வ்யாதி, கூர- கூரும்படி, வர்த்திக்கும்படி யென்கை. நினைந்து- அவனை ஸ்மரித்து, கரைந்து- ஶிதிலமாய், உகும்- நீராயுருகாநிற்கும், இப்படி யாசைப்பட்டவாறே யிதுக்குவகாரகமாக வருமாப்போலேவந்து ஸ்வாத்மத்திலே வயத்தவஸிதனாய்ப் போவனென்கிறார்மேல். ஆட்கொள்வானொத்து- என்னை யடிமைசெய்வித்துக் கொள்ளுகிறவனுக்கு ஸத்ருஶனாய், என்னைக்கொண்டு ஶேஷியான தனக்கடிமை செய்வித்துக் கொள்ளுகிறவனைப்போலே வந்தென்றபடி என்னுயிருண்ட- என்னாத்மாவைத்தனக்கு போக்ய மாக வநுபவித்தவனான, மாயனால்- ஆஶ்சர்யசேஷ்டிதனாலே, இது க்ருதிஶேமென்று தோற்றும்படி யிருக்கிற ஆஶ்சர்யசேஷ்டிதனாலே யென்றபடி, கோளுண்டு- கொள்ளப்படுகையை யநுபவித்து, அநுபவிக்கப்படுகை யைப் பெற்றென்றபடி. கோட்குறை பட்டது- கொள்ளுகையிலே குறைப்பட்டது. பூர்ணமாக போஜிக்கும்

மூ—கோளுண்டானன்றிவந்தென்னுயிர்தானுண்டான்* நாளுநாள்வந்தென்னைமுற்றவுந்தானுண்டான்* காளநீர்மேகத்தென்கார்க்கரையென்னப்பற்* காளன்றேபட்டதென்னாருயிர்பட்டதே* ॥அ॥
ஆருயிர்பட்டதெனதுயிர்பட்டது* பேரிதழ்தாமரைக்கட்கனிவாயதோர்* காரெழில்மேகத்தென்கார்க்கரைக்

---

ஆ—(கோளுண்டான்) இப்படியென்னுயிரை மாளபுஜித்தே பின்னையும்புஜிப்பதாகவே வந்துபுஜிக்கும், இப்படி நாளும்நாளும்வந்து என்னைபுஜித்தருளினான், நான்றனக்கடிமையானவித்தனையன்றோ, என்னையிங்ஙனேபடுத்தவேணுமோவென்கிறார். ॥அ॥

(ஆருயிர்) அவன் உம்முடைய திறத்தில் விசேஷமாகச்செய்ததுண்டோ தன்னோடுபரிமாறுவாரை யெல்லாரையு மப்படியன்றோபடுத்துவதென்னில்; அவனால் நான்பட்டபாடு திருநாட்டிலுள்ளார்தாம்பட்டாரோ,

---

இ—த்வநந்திலனென்கிறாரென்றிப்பாட்டுக்குப் ப்ரவேசஸங்கதியும் ஸங்கதையாயிற்று ॥எ॥

✻ எட்டாம்பாட்டு. ✻

ப்ரயோஜநத்துக்குத்தாத்பர்யமருளிச்செய்கிறார் (இப்படியித்யாதியால்) ஆளன்றேபட்டதென்றகிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நான்றனக்கித்யாதியால்) என்னாருயிர்பட்டதென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னையிங்ஙனேயித்யாதியால்) இத்தால் நாள்தோறுமென்னை அநுபவியாநின்றாலும் பெருப்பேறுபெற்றாப்போலே புஜிக்கிறவிவனுடைய, மாணவத்தையொன்றும் பொறுக்கமாட்டுகிறிலேனென்கிறாரென்று ஸங்கதியுஞ்சொல்லிற்றாயிற்று. ॥அ॥

✻ ஒன்பதாம்பாட்டு. ✻

ஸர்வேச்வரப்ரவசநப்ரகரணத்திலே 'ஆருயிர்ப்பட்டதெனதுயிர்ப்பட்ட' தென்று ஸ்வரூபநம்பண்ணுகைக்கு ஸங்கதமன்றோவென்ன விதுக்குத் தாத்பர்யஞ்சொல்லுகைக்காக வவதாரிப்பிக்கிறார் (அவனித்யாதியால்) ப்ரயோஜநத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவனால்நானித்யாதியால்) மேல்வாக்யத்துக்குத்

---

ரூ—பட்டதன்றிக்கேயிராநின்றதென்றபடி. அவனிதையநுபவித்தும் பின்னையும் வர்ணாமாக அநுபவிப்பாரைப்போலே அத்யுஜ்ஜ்வலனாயிராநின்றானென்று தாத்பர்யம். ॥எ॥

கோளுண்டானன்றிவந்து- கொள்கையுண்டானன்றியேவந்து, பிடநாபவத்தை யொருக்காலும் பெற்றவனல்லாதவனாய் வந்தென்றபடி. தானென்னையொருக்காலும் அநுபவித்தறியாதே அபூர்வமாக அநுபவிக்கப்பெற்றாப்போலே வந்தென்கை. என்னுயிர்- என்னாத்மாவை, தான்- ஸத்யஜ்ஞாநாதிவிசிஷ்டனான தான், உண்டான்- அநுபவித்தான், நாளுநாள்வந்து- இதுதானொருநாளன்றியே நாள்தோறும்வந்து, அவனுடைய அப்பொழுதைக்கப்பொழுதென்னாராவமுதம் இருக்கும்படி யிதுவென்றுகருத்து. என்னை- நிரதிசயபோக்யனானவென்னை, முற்றவும்- க்ருத்ஸ்நத்தையும், என்ஸ்வரூபத்தோடு மாணங்களோடு சரீரத்தோடு வாசியற வெல்லாவற்றையுமென்றபடி. தானுண்டான்- ஸ்வயம்போஜித்தான், தன்பேறாகவே யநுபவித்தானென்றபடி. காளநீர்மேக- காலவர்ணமாய் ஜலபூர்ணமான மேகம்போலிருக்கிறவனான, தென்கார்க்கரையென்னப்பற்கு- அழகிய திருக்கார்க்கரையில்வஸிக்கிற வென்னுடைய நிரவதிகவாத்ஸல்யவான ஸ்வாமிக்கு, ஆளன்றேபட்டது- அடிமையன்றோபுக்கது, அன்றேயென்றது- அன்றோவென்றபடி. அடிமைபுகுந்ததத்தனையொழிய ராவணாதிகளைப்போலே யெதிரம்புகோத்ததோவென்றபடி. என்னாருயிர்பட்டதே- என்னுடைய ப்ராணவ்யமான வாத்மாபட்டதென்னவாச்சர்யம், பட்டதேயென்கிறவிடத்தில் ஸ்வரவிசேஷத்தாலே விஸ்மயம் விவக்ஷிதம், இப்படியடிமைபுக்க விவ்வாத்மாவை யித்தனைபடுத்தவேணுமோ, ஸர்வமும்பொறுக்கலாம் இந்தமாணவத்தும் படுத்துகிறபாடொன்றும் பொறுக்கமுடிகிறதில்லையென்றுகருத்து. ॥அ॥

பேரிதழ்- பெரியவிதழையுடைத்தான, இதழ்- தளம், ஸௌகுமார்யத்தாலே விசாலதளசாலியான வென்றபடி, தாமரைக்கண்- தாமரஸஸாத்ருச்யம்போலேயிருக்கிற கண்களையுடைத்தான, கண்ணென்கிறவிடத்தில் ஸந்தியிலே டகாராதேசம். கனிவாயது- கனிபோலேயிருக்கிற வாயையுடைத்தான, கனி- பழம், ஸ்வாபராகசாலியானவென்றபடி. வாயையுடைத்தானது- வாயது, ஓர்- லோகவிலக்ஷணமான, அத்விதீயமென்றபடி. காரெழில்- கறுத்தவெழிலையுடைத்தான, எழில்- ஔஜ்ஜ்வல்யம், மேகம்போலேயிருக்கிற, நீலமேகவர்ணனானவென்றபடி. தென்கார்க்கரை- அழகிய திருக்கார்க்கரையை

மூ—கோயில்கொள்* சீரெழினான்றடந்தோட் டெய்வவாரிக்கே* ‖௧௦‖

வாரிக்கொண்டுன்னைவிழுங்குவன்காணிலென்* றார்வுற்றவென்னையொழியவென்னின்முன்னம்* பாரித்துத் தானென்னைமுற்றப்பருகினான்*

ஆ—தனக்கென்னகுறையுண்டா யிப்படிச்செய்தருளினானென்கிறார். ‖௧௦‖

(வாரிக்கொண்டு) "நீர்தாமவனை புஜியாதே உம்மைபுஜிக்கக்கொடுத்துக்கொண்டிருப்பானேன்" என்னில்? உன்னைக்காணில் வாரிக்கொண்டுவிழுங்குவன் என்று நான்மநோரதித்துக்கொண்டிருக்க எனக்குத்தன்னை

இ—தாத்பர்யமருளிச்செய்கிறார் (தனக்கித்யாதியால) என்னகுறையென்றது- அழகில்குறையோ வை ரூபத்தில்குறையோவென்றபடி. ஸர்வாதிசயித ஸம்ருத்தமான ஸ்வர்க்கவிலேயிறே யெல்லாருமாசைப்பண்ணுவது, ஸர்வப்ரகாரஸம்ருத்தனாலும் தானேயதிசயிதனுயிருக்க வென்பக்கலித்தனை பாரிப்பண்ணுவதென்னவாச்சர்யமென்கிறாரென்றுகருத்து. ‖௧௦‖

✻பத்தம்பாட்டு.✻

அவனுடைய அபிநிவேசாதிசயத்தைச் சொல்லவந்த விப்ரகரணத்திலே 'வாரிக்கொண்டு' இத்யாதியாலே தம்முடைய அபிநிவேசத்தைச்சொல்லுகை யஸங்கதமன்றோவென்ன ஸங்கதிப்பிக்கிறார் (நீர்தாமித்யாதியால்) ஆர்வுற்றவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (மநோரதித்துக்கொண்டிருக்கவென்று) என்னையொழியவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (எனக்குத்தன்னையித்யாதியால்) காரொக்கு;

மூ— கோயில்கொள்- கோயிலாகக்கொண்டவனை, தனக்கு நித்யவாஸஸ்தானமாக வுடையவனையென்றபடி. சீரெழில்- சீரையுமெழிலையுமுடையவனை, சீர்- ஸ்ரீ, வீரஸ்ரீயையு மௌஜ்ஜ்வல்யத்தையுமுடையவனை யென்றபடி. நால்- ஒருகல்பதருவுக்கு நாலுசாகைகளிருக்குமாப்போலே நாலாயிருக்கிற, தடம்- பெரியதுகளான, "ரூபசாஸ்ஸாம்யாத்ரஸ் பாஹவ:பரிவேஷ்டிதா:" என்கிறபடியே வ்ருத்தாயதபீவர ஸுந்தரமான புஜங்களானவென்றபடி. தோள்- புஜங்களையுடையவனை, தெய்வவாரிக்கு- தைவஸமுத்ரத்துக்கு, வாரி- ஸமுத்ரம், ப்ராக்ருதஜலங்களுக்கு ஸமுத்ரம்போலே தைவதங்களுக்கு உத்பத்திஸ்தாநமான ஸமுத்ரமான ஸ்வாமிக்காயென்றபடி. ஸ்வாமிக்கு ஸௌஹ்ருதமாயென்கை. எனதுயிர்பட்டது- என்னாத்மா பட்டபாடுகளை, ஆருயிர்பட்டது- ஆருடையவாத்மாபட்டது, நித்யஸூரிகளுடைய வாத்மாதான் பட்டதோவென்றபடி. என்னாத்மாவானது அவனாலே புஜிக்கப்படுகிறதசையிலே யவனுடைய வக்த்ராதிவ்யாபாரங்களைக்கொண்டு ஆநந்தாதிசயத்தாலே ஜாதஹர்ஷவிகாரங்களையடைந்து வ்யாகுலப்பட்டாப்போலே நித்யஸூரிகளுடைய வாத்மாவும் பட்டதில்லையென்றபடி. ஸ்வேதத்வீபமான க்ஷீரார்ணவத்துக்கு நாயகஸ்தானத்திலே ஸர்வேஸ்வரர்கள் வ்யக்தநாயகியிற்காட்டிலும் விஞ்சியிருக்குமாப்போலே அநாதிஸம்ஸாரியாயிருந்த விவருக்கு ஸம்ஸாரதோஷம் புதியதாய்வந்ததாகையாலே ரஸாதிசயகாரியான வையாகுலீ நித்யஸூரிகளிற்காட்டிலும் விஞ்சியிருக்குமென்று நஞ்சீயாருளிச்செய்தார். ‖௧௦‖

காணில்- காணப்பெற்றேனாகில், உன்னை- ஸர்வேச்வரனுமானவுன்னை, வாரிக்கொண்டு- பிறர்க்கொன்றும் சேஷியாதபடி க்ரஹித்துக்கொண்டு, விழுங்குவன்என்று- புஜிப்பனென்று, அநந்தவைநதேயாதிகளுக்கவகாசமில்லையாம்படி 'அஹமந்நமஹமந்நம்' என்கிறபடியே நானே ஸர்வாவயவங்களையும்பண்ணி புஜிக்கவேணுமென்றென்றபடி. ஆர்வு- அபிநிவேசத்தை, உற்ற- அடைந்தவனை, என்னையொழிய என்னைத்தவிர, எனக்குத்தன்னை புஜிக்கவொண்ணாதபடியாக வென்றபடி. என்னில்முன்னம்- தன்னைபுஜிக்கவுத்யோகிக்கிற வென்னிலும்முன்னமே, பாரித்து- ஸ்வரித்து. மநோரதங்களையுமென்றபடி. தான்- விலக்ஷணமான ஸ்வதந்த்ரனானதான், என்னை- அணுவாய் பரதந்த்ரனானவென்னை, முற்ற- ஸர்வாவஸ்தைகளிலும், நிச்சேஷமாகவென்றபடி. ரஸாதிசயத்தாலே மஹாபோகனாகையாலே இவ்வாத்மாவுண்டுபோயிற்றென்னும்படியாக வென்றபடி. பருகினான்- பானம்பண்ணினான், "ஸர்வகந்தஸ்ஸர்வரஸ:" என்கிறபடியே தன்போக்யதைகளைக்காட்டி யென்னை நீராயுருக்கிப் பானம்பண்ணினானென்றபடி. என்னைமுற்றவும் தானுண்டானென்று அவனுண்டபடிசொன்னாரிதிலும், உண்டவனுக்குத் தண்ணீருமவேக்ஷிதமாகையால் தண்ணீர்குடித்தபடி சொன்னாரிதில், இத்தாலவனுடைய உண்ணுஞ்சோறு

ஆ — தா — (ஸுவிஶேஷாதிஶயாய) தென்காட்கரையென்னப்பா- ஸர்வஸ்வாமியாகையாலும், (ஸர்வாத்மஸம்ருத்தி) என்னுயிராயென்னுமிருண்டான்- ஸர்வாத்மாவாயிருக்கையாலும், (ஸமஸ்தஸங்கல்பம்) தன்னுளனைத்துலகுமிற்கநெறிமையாற்றுனுமவற்றுணிற்கும்பிரான்- ஸகலவஸ்துக்களுக்கும் தான் ஆதாரமாய் அவற்றை ஆதாரமாகவுடையனும் இவ்வழி ஸர்வநியந்தாவுமாகையாலும், (ஜலதகந்தயா) கருவளர்மேனி- கறுப்புவளராநிற்கைபாலே நீலமேகம்போலேயிருக்கிற திருமேனியை யுடையவனாகையாலும், (ஸ்வாஶ்ரிதரக்ஷகதயா) என்கண்ணன்கள்வம்- கார்க்கரையேத்துமதனுட் கண்ணனென்றும்- ஆஶ்ரிதர்க்கு ஸுலபனுமாய் இவர்களுடைய ஸம்பத்தை ரக்ஷிக்குமவனாகையாலும், (ஔதார்யாதிஶயேந) காளநீர் மேகத்தென்காட்கரையென்னப்பற்கு- காளமேகம்வர்ஷிக்குமாப்போலே எல்லார்க்கும் மஹோபகாரகனாகையாலும் ஔதார்யாதிஶயத்தை யுடையவனாகையாலும், ஆஶ்ரயத்தாலே பெரியழத்தாமரைக்கண்" ஐ ஶ்வர்யாதிஶயகஸ்வரூபமான வைபவம் ஸாதிக்கப்படுகிறது. (ஸ்வஸ்வாம்யலக்ஷணதிவ்ய ஸம்பந்தம்) என்னில்முன்னம்பாரித்து- ஸம்ஸாரிஜந ரக்ஷணத்திலே யிவர்களைக்காட்டிலும் தானேமுன்னே ஆபனுமவனாகையாலும், எம்பெருமான் விஸ்தாரணத்துக்கஸக்யனென்று "உருகுமால்நெஞ்சம்" என்கிறதிலே ஆழ்வார் ப்ரதிபாதித்தருளினாரென்கிறார். ௧௦-ஆ

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஒன்பதாம்பத்தில் ஆறாந்திருவாய்மொழி முற்றிற்று.

# ஏழாந்திருவாய்மொழி.

மூ— எங்கானலங்கழிவாயிரைதேர்ந்திங்கினிதமருஞ்*

ஆ— (எங்கானல்) இந்தவத்ருஷ்டமான ஸம்ஶ்லேஷ ஜநிதவ்யக்தியானது மாறி அத்ருஷ்டமே தலையெடுத்து அநந்யவிஷயத்தாலே தூதுப்ரேஷணம்பண்ணுகிறார்.

எழாந்திருவாய்மொழி.

இ— இப்படி ஸம்ஶ்லேஷிரானிருக்கிறவாழ்வார் அத்யந்தவிரஹமெய்தில்போலே இத்திருவாய்மொழியிலே தூதுப்ரேஷணம்பண்ணுகை யஸம்கதமன்றோவென்ன வ்யதிரேகிக்கிறார் (இந்தவத்ருஷ்ட்யாதியால்) கீழ்த்திருவாய்மொழியில் விஷாத்ருஷ்டாதிஶயி ஸம்ஶ்லேஷாரணத்தாலே வீ நடந்ததேயாகிலும் அத்ருஷ்டவிஷயமாக ஸாக்ஷாத்தமாய்க்கொண்டு அநுபவ்யத்தமாயிருந்ததாகையாலே யிப்போதும் ஸம்ஶ்லேஷாநுகூலமில்லாமையாலே பின்னையும் அத்ருஷ்டம்ஸமே உஜ்ஜீவமாய்விட்டதாகையாலே மிகவுமார்த்தராகையாலே தூதுப்ரேஷணம்பண்ணுகை ஸம்கதமென்றதாயிற்று. தூதுப்ரேஷணம்பண்ணுகிறாரென்றது- வடிவார்ஸ்வாரஸ்ய ஸாஹித்யத்தை யெம்பெருமானுக்கறிவிக்கிறாரென்றபடி. இத்தாலித்திருவாய்மொழிக்கு வடிகாரிவிஷயவிஷயமென்கிற ஸமஸ்தாரணம் ஸம்ஸாரமென்றதாயிற்று. *

ஈ— எங்கானல்- எங்கள்கானலுடைய, கானல்- ஸமுத்ரதீரவநம், இங்கு ஸஞ்சரித்ர உபகாரம், உங்களுக்குபயோகமாம்படி எங்களுக்கொரு உபகாரமுண்டாகப் பெற்றதேயென்றுகருத்து. அகம்- உள்ளில், இப்படியுள்ளே அம்ஸகிதராய் வந்திருக்கும்படி யுங்களை ஆதரமமாகப் பெற்றோமேயென்று கருத்து. கழிவாய்- கழியினிடத்திலே, கழி- ஸமுத்ரத்ருஷ்டிகளுடைய ஜலவரிவாஹப்ரதேஶம்- வாயென்று இடம், இரை- ஆஹாரத்தை, தேர்ந்து- தேடி, "ம்ருகஸ்ஸம்ஸகிதம்" என்கிறபடியே எங்கள் ஜீவநஸாதந விஷயங்களான வஸ்துக்களை நீங்கள் ஸ்வீகரிக்கவும் ஸம்ஹம்பெற்றோமேயென்று கருத்து. இங்கு- இந்த ஸமீபப்ரதேஶத்திலே, தன் ஸௌந்தர்யத்தாலே யென் நெஞ்சை அபஹரித்துக்கொண்டு என்னை விஶ்லேஷித்துப்போய் தூதுவிடவேண்டும்படியாயிருக்கிற வவனைப்போலன்றிக்கே ஸந்நிஹிதராக ப்பெற்றோமேயென்று கருத்து. இனிது- போகமாக, ப்ரணயஸரஸமாக வென்றபடி. க்ரியாவிஶேஷணம். அமரும்- ப்ரதிஷ்டிதராகாநிற்கிற, என்பக்கல் ஸௌஹார்த்தத்தாலே இங்கே நித்யவாஸஸ்திதராகாநிற்கிற.

மூ— செங்காலமடநாராய் திருமூழிக்களத்துறையுங்* கொங்கார்பூந்துழாய்முடியெங்குடக் கூத்தர்க்கென்
றூதாய்* நுங்கால்களென்றலைமேற் கெழுமீரோ நுமரோடே* ‖ க ‖

ஆ— தன்னைப்பிரியில நான்யரிக்கமாட்டாததொரு நபடி, தன்னழகாலும் தன்செயலகளாலும என்னைத்தோற்பித்-
தடிமையாக்கி என்னோடுகலந்த நளிப்போய் திருமூழிக்களத்திலே யிருந்தருளின வெம்பெருமானுக்கென் றிறம்
சொல்லவேணும், உங்களுக்கடிமையே நானிருக்கிறேன், என்றுநாரைகளை யிரக்கிறாள். க

## முதற்பாட்டு.

ஈ— கொங்கார்பூந்துழாய்முடி யென்குடக்கூத்தர்க்கென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தன்னைப்பி-
ரிவிலித்யாதியால்) அதில்தன்னழகாலுமென்றது- கொங்கார்பூந்துழாய்முடியென்கிறதற்குத் தாத்பர்யஞ்சொ-
ன்னபடி. தன்செயல்களாலுமென்றது- குடக்கூத்தர்க்கென்கிறதற்குத் தாத்பர்யஞ்சொன்னபடி. என்னைத்
தோற்பித்தித்யாதியாகச்சொன்னது- எம்மென்கிறவிடத்தில் விவக்ஷிதாம்சஞ்சொன்னபடி. என்றூதாய்என்-
கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்திறஞ்சொல்லவேணுமென்று) திறம்- ப்ரகாரம், என்விரஹக்லே-
சத்தையென்றபடி. உத்தரவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உங்களுக்கித்யாதியால) தன்னழகா-
லுமென்றதாலும் நாரைகளையென்றதாலும் இப்பிராட்டி எம்பெருமானுடைய வழகிலேயீடுபட்டு அவனோடே
ஸம்ஸ்லேஷித்து விஸ்லேஷித்தவளாய், விரஹவ்யஸநிநியாய், தன்னாற்றாமையாலே ஸ்வஸ்தானத்திலநின்று மு-
க்த்ரநப்ரதேசத்திலேசென்று அங்கேயிருந்தன சிலபக்ஷிகளைக்கண்டவளாய், தன்னுடையஸகிகளும் தன்
னோடு ஸமாநதுக்கிகளாகையால் அவர்கள் காரியக்ஷமரல்லாமையாலும், தான் வ்யஸநாதிசயத்தா-
லறிவழிந்திருக்கையாலே 'தான்சொல்லுகிறவார்த்தையை அவையறியா' என்று விவேகிக்கமாட்டாமையா-
லும், அவற்றைத்தூதுபோகப் ப்ரார்த்திக்கிறாளென்றுகருத்து. தன்னைப்பிரியிலித்யாதியாலே விஸ்லேஷத்தி-
லென்னை யரித்திருக்கவொட்டாத ஸௌந்தர்யத்தையுடையவனென்கையாலே ஸ்வதேசத்தில் அஞ்சிறை
யமடநாரையில் ஸௌந்தர்யஸம்ஸ்மரண பற்றாசாகவும், வைகல்பூங்கழிவாயில சேஷித்வஸம்பந்தம் பற்றாசாகவும்,

மூ— வென்றபடி, செங்கால- சிவந்தகாலை யுடையீர்களான, என்மடியிலிருக்கும் கால்போலே யிராநின்றது
நான்தலையிலே வைத்துக்கொள்ளப்புகுகிற காலுமென்று கருத்து. படநாராய்- ஸ்வ்யங்களான நாரைகாள்?, நாரா
யென்று ஜாத்யேகவசநம். திருமூழிக்களத்து- திருமூழிக்களமென்கிற திவ்யநகரத்திலே, உறையும்- வஸி-
யாநிற்கிறவனை, தூதுபோவார்க்கு ஸுலபனும்படி. ஸந்நிஹிதனாயிருக்கையாலே வாஸஸ்தலத்திலும் ஏற்ற
ஞ்சொல்லுகிறபடி. கொங்கார்- ஸௌரப்யபூர்ணமான, கொங்கு ஸௌரப்யம், பூம்- தர்சநீயமான துழாய்
முடி- திருத்துழாயைத் திருமுடியிலேயுடையவரான. எங்குடக்கூத்தார்க்கு- என்னுடைய குடக்கூத்தர்க்கு,
எம்மென்று ஆத்மநிபஹுவசநம். இங்கு பரத்வேதரஸகவிசேஷண ஸமஸ்வ்யாஹாரத்தால தன்னுடைய
திவ்யாலங்காராதி ஸௌந்தர்யங்களாலும் விசித்ரசேஷ்டிதங்களாலு மென்னை வசீகரித்தவனை வென்றபடி.
குடக்கூத்தாவது- இடையர் பால்குடத்தைத் தலையிலேவைத்துக்கொண்டு ஆடும் ந்ருத்தவிசேஷம், குடக்
கூத்துடையவர்- குடக்கூத்தர். விசித்ரசேஷ்டிதங்களையுடைய க்ருஷ்ணனுக்கென்றபடி. என்தூதாய்- என்னு-
டைய தூதிலேயாய், தூது- தௌத்யகார்யம், சேஷபூதமான தௌத்யகார்யத்திலே ஸ்வீகரித்தென்றபடி.
இதுசெய்கிறோமென் றங்கீகரித்தென்றபடி. இதுக்குக்கெழுமீரோவென்கிறத்தோடே யந்வயம். ஸங்கீகா
ரமாத்ரத்தாலே நானுங்களுக்கு ஸ்வம்மாகையாலே நீங்களெனக்கு நித்யஸேவ்யர்களென்று கருத்து.
நுமரோடே- பக்ஷிபர்களோடே, உங்களுடைய ஸாபத்ராதிகளோடேகூடவென்றபடி. இங்கு ஸ்வ
விஷயத்தில் 'ஆபஸ்ததாவாஸசாவ்யாக்தி:' 'ஆபஸ்தாஸ்வாத்ருக்தி:' "ஸாஸாகதாதா
ஸம்ஸ்ரூஷ்வ:" என்றதுவிவக்ஷிதம். நுங்கால்கள்- எங்களுக்குபகாரிஷ்டைரான வுங்களுடையதிருவடி-
களை, என்தலைமேல்- உங்களையாச்ரயித்து உஜ்ஜீவிக்கவிருக்கிற வென்னுடைய உத்தமாங்கத்திலே, தலையென்று
உத்தமாங்கபர்யாயம், ஸ்வவிஷயத்தில் உபகாரானவர்களுடைய சரணாரவிந்தத்தை வஹிக்கப்பெ
றுகிறதென்னும் ப்ரீதியாலே தன்சிரஸ்ஸைக்கொண்டாடுகிறபடி. அழகியமயிரையுடையார் பூச்சூடவாசைப்
படுமாப்போலே ப்ரீதியாலேசொல்லுகிறபடி. கெழுமீரோ- சேர்க்கிறீரோ, கெழுமை- சேர்க்கை, சேர்த்தருள
வேணுமென்றபடி, வையுங்கோளென்னாதே சேருங்கோளென்றதாலே யென்தலையு மூங்கள்திருவடிகளும்

சூ— நமரோடும்பிரியாதே நீரும் நுஞ்சேவலுமாய்* அமர்காதற் குருகினங்காள் அணிமூழிக்களத்துறையும்* எமரானும் பழிப்புண்டிங்கென் தம்மால் இழிப்புண்டு* தமரோடங்குறைவார்க்குத் தக்கிலமே கேளீரே* ॥௨॥

ஆ—(நமரோடும்) 'அவனுக்குச் சொல்லும் வார்த்தையைக் கேளுங்கோள்' என்று குருகுகளை யழைத்து வைத்து நடுவே தன்னெஞ்சாலே 'தமராலுபேக்ஷிதையாய் என் பந்துக்களாலும் ஹேயையாயிங்கேயிருக்குமிவ்விருப்பென்செய்ய? இவ்விருப்பில் முடிகைபோன்று' என்று தம்மிலே சொல்லி யின்னுதாய், பின்னையுமவனை விடமாட்டாமையாலே 'தாமும் தம் பரிஜநங்களுமாயிருந்தவிருப்பைக் காண்கைக்கு நான் ஸமர்த்தையாயிழந்துபோமித்தனையோ' என்று கேளீரென்றுகொண்டு தான்சொல்லப்புக்க வார்த்தையை யவற்றுக்குச் சொல்லி முடிக்கிறாள். ॥௨॥

இ— பொன்னுலகாளீரிலே 'ஶ்ரீகரோடைகாரஸ்யம் பற்றாசாகவும், தூதுவிட்டவர் இத்திருவாய்மொழியிலே தன்னழகைக்கண்டநுபவித்தவர்கள் விஶ்லேஷத்தில் தரிக்கமாட்டுவர்களோ' என்று அறிவிக்கவே எழுந்தருளும்' என்றிப்படி ஸ்வரூபம்பற்றாசாகத் தூதுவிடுகிறாளென்று ஸங்கதமாயிற்று. இப்படி இந்நாலு திருவாய்மொழிகளுக்குமுள்ள ஸம்பந்தவிஶேஷங்களை "ஸ்வாபாவஸம்பந்தாத் விஶ்லேஷாஸம்பவாதபி। ஸௌகாரஸ்யாத் ஸ்வரூபாச்ச தூதகாரீ ஶடமுநி:" என்று உரைக்காரர் ஸங்க்ரஹித்தருளினார். ॥௩॥

✻ இரண்டாம்பாட்டு. ✻

ப்ரதமவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவருக்கித்யாதியால்) கீழ்நாரைகளைப் ப்ரார்த்தித்தவள் அவற்றுக்குச் சொல்லவேண்டும்வார்த்தையை வ்யஸநாதிஶயத்தாலே வந்தகலக்கத்தாலே குருகுகளைநோக்கிச்சொல்லுகிறாளென்று ஸங்கதியபிப்ராயம். த்விதீயவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நடுவேயித்யாதியால்) தன்னெஞ்சாலேயென்கிறதற்கு இன்னுதாயென்கிறத்தோடே அந்வயம். என்செய்யவென்கிறதற்குக் கீழோடே அந்வயம். இதென்ன ப்ரயோஜநத்தை ஸாதிக்கைக்காக விருக்கிறதென்றபடி. இன்னுதாயித்யந்தமாய், த்ருதீயவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பின்னையுமித்யாதியால்) மாட்டாமையாலேயென்கிறதற்குச் சொல்லியென்கிறத்தோடே அந்வயம். ॥௨॥

மு— பிரிகதிநுக்கை யிவையிரண்டுக்கும் ஸாமாந்யாஸஹாநியென்றுகருத்து. ஓகாரத்தால் இதுஶேஷிகளுக்கு ஸ்வரூபமன்றோ? இது ப்ரார்த்திக்கவேணுமோ வென்றபடி. ॥௪॥

நமரோடும் பாகவதரோடும், உங்கள்பந்துக்களோடுமென்றபடி. உம்மையும் ஸமுச்சயார்த்தத்தோடே ஸமுச்சயம். பந்துக்களோடும்பிரியாதே தம்பதிகளாக ஸம்ஶ்லேஷித்திருக்கிறவென்று வாக்யார்த்தஸமுச்சயப்ரகாரம். பிரியாதே- விஶ்லேஷியாதே, நீரும்நும்சேவலுமாய்- ஶக்தித்ரயவதிகளான நீரும் பாகவத்த்ரயவதிகளான பதிகளுமாய், சேவல்- பாகவதபக்ஷி, அமர்- அமர்ந்திருக்கிறவையான, விச்சேதமின்றிக்கே ஸம்ஶ்லேஷித்திருக்கிறவையான வென்றபடி. இப்படி பரஸ்பரஸம்ஶ்லேஷஸாபேக்ஷரான நீங்கள் விஶ்லேஷதுக்கிதையான வென்வேதனைகளைப் போக்கவேணடாவோ வென்றுகருத்து. காதல்குருகினங்காள்- காதலையுடைய குருகின்ஸமூஹங்காள், காதல்- ப்ரேமம், காதல்குருகென்று ஶாகபார்த்திவவத்ஸமாஸ:. குருகு- நாரையிலே ஜாதிவிஶேஷம், இனம்- ஸமூஹம், பரஸ்பரப்ரேமயுக்தைகளான குருகுஸமூஹங்காளென்றபடி. அணி- அழகியதான, மூழிக்களத்து- திருமூழிக்களமென்கிற திவ்யதேஶத்திலே, உறையும்- வஸிக்கிறவரான, தம்மால- அங்குள்ளபரிஜநங்களோடே ஸம்ஶ்லேஷரஸிகரான தம்மாலே, இழிப்புண்டு- உபேக்ஷயநுபவித்து, இழிப்பு- உபேக்ஷை, ஸக்ருத்ஸம்ஶ்லேஷமாத்ரமே உபேக்ஷிக்கப்பட்டேனென்றபடி. எமரானும்- ஸ்வகீயராலும், என்பந்துக்களாலுமென்றபடி. பழிப்புண்டு- ஹேயதையையநுபவித்து, பழிப்பு- ஹேயதை, இங்கு- இந்தலோகத்திலே. என்- என்ன ப்ரயோஜநம், தமரோடு- ஸ்வகீயரோடு, தமக்கபிமதரான பரிஜநங்களோடே கூடவென்றபடி. அங்கு- அந்தத்திருமூழிக்களத்திலே, உறைவார்க்கு- நித்யவாஸம்பண்ணுகிறவர்க்கு, தக்கிலமே- தக்கவரல்லோமே, யோக்யரல்லோமோவென்றபடி. ஆத்மநிவேதகம், கேளீர்- கேளுங்கோள்; தாமும் தம் பரிஜநங்களுமா யெழுந்தருளியிருக்கிறவழகை யநுபவிக்கைக்கு நான் ஸமர்த்தையல்லேனோவென்று நீங்கள் கேட்கவேணுமென்றபடி. ॥௪॥

மூ—தக்கிலமேகேளீர்கடடம்புனல்வாயிரைதேருங்* கொக்கினங்காள்குருகினங்காள்குளிர்மூழிக்களத்துறை யுஞ்* செக்கமலத்தலர்போலுங்கண்கைகால்செங்கனிவா* யக்கமலத்திலைபோலுந்திருமேனியடிகளுக்கே ॥ திருமேனியடிகளுக்குத்தீவினையேன்விடுதூதாய்த்* திருமூழிக்களமென்னுஞ்செழுநகர்வாயணிமுகில்கா* டிருமேனியவட்கருளீரென்றக்காலும்மைத்தன்*

---

ஆ—(தக்கிலமே) தன்னைக்காண்கைக்கு நானபேக்ஷிக்கவன்றியே அவ்வழகையுங் காணப்பெறாதே யிழந்துபோயித்தனைபோவென்று கேளீரென்கிறாள். ॥ க ॥

(திருமேனி) திருமூழிக்களமென்னுஞ் செழுநகர்வாயணிமுகில்காள்? 'திருமேனியவர்க்கருளீர்' என்றித்தனையுஞ்சொன்னாலுமுங்களுக்குப் பரமபோக்யமான திருமேனியொளியை யுங்களையிழப்பித்து அவ்வூரில்நின்றும்

---

✳ மூன்றாம்பாட்டு. ✳

இ— செக்கமலத்தித்யாதி அடிகளுக்குத்தக்கிலமேகேளீர்க ளென்றநயித்து அதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தன்னைபித்யாதியால்) அவ்வழகையுமென்கிறவிடத்தில் ஸமுச்சயத்தால் கீழ்ப்பாட்டிற்சொன்ன வர்ஜந லாபமிலையைக் காணப்பெறாதவளவன்றிக்கே அவன்திருமேனியழகையும் காணப்பெறேனேவென்கிறாளென்று ஸம்பந்திஸூசிதமென்ன, ॥ க ॥

✳ நாலாம்பாட்டு. ✳

என்னக்காலென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இத்தனையுஞ்சொன்னாலுமென்று) ஸமுச்சயமிவ்வுக்திமாத்தாலு முங்களை ஸம்பிக்குமோவென்கைக்காக. திருமேனியொளியகற்றியென்கிறதற்குத் தாத்பர்ய

---

ஈ— தடம்புனல்வாய்- தடாகஜலப்ரதேசத்திலே, தடம்- தடாகம், புனல்- ஜலம், வாய்- இடம், இரை- ஆஹாரங்களை, தேரும்- தேடாநிற்கிற, நான் உபவாஸக்ருசையாயிருக்க நீங்களிங்ஙனே யாஹாரபராயிருக்கை யுசிதமோவென்று கருத்து. கொக்கினங்காள்- பகஸமூஹங்காள், குருகினங்காள்- நாரைபக்ஷிவிசேஷஸமூஹங்காள், என்னுடைய ப்ராணரக்ஷணமாகத் தூதுபோகைக்குத் திரள்திரளாகக் காணப்பெற்றேனென்று கருத்து. குளிர்- சீதளமான, ஸஞ்சாரயோக்யமானவென்றபடி. என்விரஹதாபம்போகைக்கு அவ்வூரைக் காணப்பெற்றிலேனென்று கருத்து. மூழிக்களத்து- திருமூழிக்களமென்கிற திவ்யநகரத்திலே, உறையும்- வஸியாநிற்கிறவனுடைய, செக்கமலத்து- செந்தாமரையினுடைய, அலர்போலும்- புஷ்பத்துக்கு ஸத்ருசமாகாநிற்கிற, கண்கைகால்செங்கனிவாய்- நயநகரசரண பிம்பாதரங்களையுடையவரான, செங்கனி- சிவந்தபழம், பிம்பபலமென்றபடி. வாய்- அதரம், அக்கமலத்து- அந்தசெந்தாமரையினுடைய, இலைபோலும்- இலைக்குஸத்ருசமாகாநின்றுள்ள, திருமேனி- அந்தஸ்த்ராவயவங்களுக்குப் பாஸமமாம்படி ஸ்யாமளமான திருமேனியையுடையவருடைய, அடிகளுக்கு- ஸ்வாமிக்கு, பரிஜாயாபேக்ஷாஸுரம். தக்கிலமே- நாம்தக்கவரல்லோமோ, அவருடையவவ்வழகை நாம் அநுபவிக்கைக்கு யோக்யரல்லோமோ வென்றபடி. கேளீர்கள்- நீங்களங்கேசென்று கேட்கவேணும். ॥ க ॥

திருமூழிக்களம்என்னும்- திருமூழிக்களமென்றப்ரஸித்தமான, செழுநகர்வாய்- ரமணீயநகரப்ரதேசத்திலே, செழு- ரமணீயம், நகரத்துக்குஸந்நிஹிதமான பாஹ்யப்ரதேசத்திலே வர்த்திக்கிறவென்றபடி. அணி- ஸுந்தரங்களான, முகில்காள்- மேகங்காள், திருமேனியடிகளுக்கு- திருமேனியாலே ஸ்வாமியாயிருக்கிறவருக்கு, "பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்" என்கிறபடியே தன்திருமேனியழகாலே ஸர்வரையும் வசீகரித்தடிமைகொண்டிருக்கிறவருக் கென்றபடி. இதுக்கு தூதாயென்கிறத்தோடே யந்வயம், தீவினையேன்- அவ்வழகை யநுபவிக்கப்பெறாதே யிழந்து உங்கள்காலிலே விழவேண்டும்படியான க்ரூரகர்மங்களையுடையவளானநான், விடுதூது- விடுகிறதூதிலே, நான்விடுகிற தூதக்ருத்யத்திலேயென்றபடி. ஆய்- ஸ்வீகரித்து, அதிலே ப்ரவ்ருத்தராயென்றபடி. இதுக்கு என்னக்காலென்கிறத்தோடே யந்வயம். திருமேனி- "ஸஹஸ்ராம்சும் ப்ரகாசயேத்" என்கிறபடியே பரமபோக்யமாயிருக்கிற வும்முடையதிருமேனியை, அவர்க்கு- இத்தையாசைப்படுகிற அவளுக்கு, அருளீர்- க்ருபையாலே கொடுக்கவேணும், உமக்கவள்பக்கல் ப்ரணயித்வம்போனாலும் தீநஸாதாரணமான க்ருபையுமில்லையோ வென்றுகருத்து. என்றக்கால். இப்படிச்சொன்னக்கால், "வாஸுதேவ ஸர்வம்" என்கிறபடியே உங்களுக்கொரு உக்திமாத்ரமன்றோ வேண்டு

மூ—திருமேனிபொளிபகற்றித்தெளிவிசும்புகடிபுமே* ।௪॥

தெளிவிசும்புகடிதோடித்தீவளைத்துமின்னிலகு*மொளிமுகில்காடிருமூழிக்களத்துறையுமொண்சுடர்க்குத்*
தெளிவிசும்புதிருநாடாத்தீவினையென்மனத்துறையுந்*துளிவார்கட்குழலார்க்கென்றூதுரைத்தல்செப்புமினே॥

ஆ—போகவுக்குமோ. இத்தனையுஞ்சொன்னாலென்செப்புமென்கிறாள். ।௪॥

(தெளிவிசும்பு) அவனுக்கருளீரென்னவமையுமோ, இன்னுமக்கருளீரென்னவேண்டாவோ வென்னில், யாவளொருத்திபுடையநெஞ்சை யுமக்குத்திருநாடாகக்கொண்டு நீருறைகிறீர், அவளுக்கருளீரென்று சொல்லிப் போமென்கிறாள். ॥ரு॥

(தூதுரைத்தல்) தூமொழிவாய்வண்டினங்காள், என்னுடைய சுடர்வளையுங் கலையு மிழந்தேனென்று

இ— மருளிச்செய்கிறார் (உங்களுக்குப்ராப்தஸ்வித்யாதிபதல்) தெளிவிசும்புகடியுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச் செய்கிறார் (அவ்வூரிலநின்றுமித்யாதிபால்) கீழ்ச்சொன்னவஸ்திகள் போகாதிருந்தவாறே திருமூழிக்களத்துக்கு ஸந்நிதிகளாயிருக்கிற மேகங்களோடே க்கிச்சொல்லுகிறாளென்று ஸங்கதி. ।௪॥

## ✳ ஐந்தாம்பாட்டு. ✳

கீழ்ப்பாட்டில் சேல இப்பாட்டிலுட மேகங்களைத்தூதுவிடுகிறதாயிருக்கையாலே யிது வாக்யநிரூபண மென்றோவென்ன வதலிப்பிக்கிறார் (அவனுக்கித்யாதிபால்) அவளுக்கென்று ஸாமாந்யமாகச் சொன்னாலவ ளறியுமோ விஶேஷித்துச் சொல்லவேண்டாவோ வென்றபடி. இப்பாட்டுக்கெல்லாம் த்ருதீயபாதாயத்தி லே தாத்பர்யமென்று கருத்தாலே யதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (யாவளொருத்தியித்யாதியால்)॥

## ✳ ஆறாம்பாட்டு ✳

சுடர்வளையுங்கலையுந் தூதுரைத்தல்செப்புமின்களென்றநுபித்துத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னுடைய

ஸ—வதென்றுகருத்து. தன்திருமேனியொளி— உங்களுக்குத்தந்தருளின ஸ்வீபதிவ்யமங்களவிக்ரஹகாந்தியை ஒளி— காந்தி, உம்மை— உங்களை, அகற்றி— விஶ்லேஷிப்பித்து, அிகரக்ஷகம். உங்களுடையகாந்தியை நஶிப் பித்தென்றபடி. தெளிவிசும்பு— நிர்மலமானவாகாஶத்தில்நின்றும், விசும்பு— ஆகாஶம், உங்களழகு எல்லாரு க்கும்தெரியும்படி நீங்கள்வர்த்திக்கிற நிர்மலாகாஶத்திலநின்று மென்றபடி. கடியுமே— கடியுமோ, கடிகை— துரத்துகை, உங்களைத்துரத்துமோவென்றபடி. ஸ்வஸாத்ருஶ்யமாத்ரமன்றிக்கே வாஸஸ்தைத்தைத்தந்து ஆ காஶமாத்ரஸ்திதியன்றிக்கே வாஸாகாஶஸ்திதியு முங்களுக்குத்தாராநோவென்றுகருத்து ।௪॥

தெளிவிசும்பு— நிர்மலமானவாகாஶத்திலே, கடிது— ஶீக்ரமாக, ஓடி— யாவகம்பண்ணி, சிறுத்திருவடிக்கு ப்போலே ரிவந்நின்வெரவஸமும் ஆகாஶவாஸிகளும் தன்காபர்த்துக்கு ஸாயகமென்றிருக்கிறாள், தீவ ளைத்து— சுழிவஶபத்துக்குஸத்ருஶமான, தீ— சுழி, வளை— வஶயம், வளைத்துஎன்று வளைக்குஸத்ருஶமானது க்குப்பேர், சங்கவக ஸத்ருஶங்களான வென்றபடி, மின்னிலகும்— மின்களிலகாநிற்கிற, வித்யுல்லதாஸம ங்கள் விளங்காநிற்கிறவென்றபடி. இலகுதல்— விளங்குதல், ஒளிமுகில்காள்— காந்தியையுடைய மேகங்க ள், அந்த வித்யுத்துக்களாலே வாஸமம்பெற்ற வடிவழகையுடைய தேவங்காளென்றபடி. திருமூழிக்கள த்து— அந்தநிவநகரத்திலே, உறையும் வஸியாநிற்கிற. ஒண்சுடர்க்கு— ஒள்ளியசுடரையுடையவரான, அவ் வூரில நித்யவாஸத்தாலே பத்ராஜ்வமான காந்தியையுடையவரானவென்றபடி. தீவினையேன்— நெஞ்சிலேவ்யா காஶிகச்செய்தே கண்ணுக்கிலக்காகவொட்டாதபடி கர்மங்களான பாபங்களையுடையேனானவென்னுடை ய, மனத்து உறைவிலே, தெளிவிசும்பு— விஶதாகாஶாகாரமான, பரமாகாஶவாஸவேத்யாகாரமான வெ ன்றபடி. திருநாடா— திவ்யதேஶமாய். சாத்ருஶதிவ்யதேஶத்திற்போலே யாதராதிஶயமுடையனாயென்றபடி. உறை யும்— வஸியாநிற்கிறவரான, துளிவார்— துளித்துவாராநிற்கிற விந்துவிந்துவாய் ஸ்ரவிக்காநிற்கிறவென்றபடி. கள்— மதுவைத்தையுடைத்தான, கள்ளென்று மதுவமாய் இந்தஶப்தத்தைச்சொல்லுகிறது, குழலார்க்கு— கூந்தலங்களையுடையவர்களுக்கு, கூந்தலங்கள் கூந்தலேஸுந்தரங்களாயிருக்கையாலே ஸகாருஷ்யதிகளென் றுகருத்து. குழல— கூந்தலம், குழலையுடையவர் குழலார், வடுஜாயாபேக்ஷவநம் என்தூதுரைத்தல்— தலைபில்பூவெல்லாம் சருகாம்படி விரஹாக்நிதப்தையான வென்னுடைய தூதவாக்யத்தை, தேசமுண்டான தூதவாக்யத் தையென்றபடி. செப்புமின்— சொல்லுங்கோள். ।ரு।

மூ— மேகலையுமீடழிந்தென் * அகமேனியொழியாமே திருமூழிக்களத்தார்க்கே* ॥ய॥

ஒழிவின்றித் திருமூழிக்களத்துறையுமொண்சுடரை* யொழிவில்லாவணிமழலைக்கிளிமொழியாளலற்றிய சொல்* வழுவில்லாவண்குருகூர்ச்சடகோபன்வாய்ந்துரைத்த* வழுவில்லாவாயிரத்திப்பத்துநோயறுக்குமே* ॥கக॥

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ஆ—(ஒழிவின்றி) எம்பெருமானைப்பிரியில் தரிக்கமாட்டாத ஸ்வபாவையாயிருப்பாளொருபிராட்டி அவனைப்பிரிந்தலற்றின பாசுரத்தாலே தத்வஜ்ஞஸ்வபாவரான வண்குருகூர்ச்சடகோபன் எம்பெருமானைப்பிரிந்தலற்றின விப்பத்து, தவிஶ்லேஷாஸஹவ்யாதியைப் போக்குமென்கிறார். ॥கக॥

திருக்குருகைப்பிரான்பிள்ளான் திருவடிகளே சரணம்.

✳ நிகமனம். ✳

இ— ஒண்சுடரை யொழிவில்லாவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (எம்பெருமானைப் பிரியில் தரியாதவிதியால்) அலற்றியசொல்லென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவனையிதரியாதியால்) பாசுரத்தாலேயென்கிறதற்கு அலற்றினவென்கிறத்தோடே யந்வயம். வழுவில்லாவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தத்வஜ்ஞஸ்வபாவரானவென்று) ॥கக॥

ஈ— அடைந்து, மேகலையும்- ஶேஷமேயும், ஈடழிந்து- கட்டுக்குலைந்து, ஈடு- இடுகை, பூட்டுகையென்றபடி. ஶரீரதௌர்ப்பல்யமாகையாலே ஶேஷமேயும் ப்ரஶிதிலமாயென்றபடி. என்- என்னுடைய, அகமேனி- உள்ஸ்வரூபமும், அகம்- உள்ளு, மேனிஶப்தம் இங்கு ஸ்வரூபவாசம், ஶரீரத்துக்குள்ளேயிருக்கிற வென்னுடைய ஸ்வரூபமுமென்றபடி. ஒழியாமே- உபாதமாகாதே, ஶரீரஸம்பந்தத்தை விடுவதற்கு முன்னேயென்றபடி. இதுக்கு உரையீர்களென்கிறத்தோடே யந்வயம். திருமூழிக்களத்தார்க்கு- அந்ததிவ்யநகரத்திலேயிருக்கிறஸ்வாமிக்கு, தகவன்றென்று- தாம்தம்மைத்கொண்டகலுகை க்ருபையன்றென்று, தம்முடைய காருண்யஸ்வபாவதைக்கு விருத்தமன்றென்றபடி. உரையீர்கள்- நீங்கள்சொல்லவேணும். ॥ய॥

ஒழிவின்றி- விச்சேதமின்றிக்கே, திருமூழிக்களத்துறையும்- அந்ததிவ்யநகரத்திலே வஸிக்கிறவரான, அவ்வூரில் ஸௌஹார்தாதிஶயத்தாலே யொருநாளும் விச்சேதமின்றிக்கே யிங்கே நித்யவாஸம்பண்ணுகிறவனை யென்றபடி. ஒண்சுடரை- ரமணீயதேஜஸ்ஸையுடையவனை, நிரதிஶயஸௌந்தர்யலாவண்யநிதியான ஸர்வேஶ்வரனை யென்றபடி. ஒழிவு- ஒழிகையிலே, பிரிகையிலேயென்றபடி. இல்லா- இல்லாதவளான, "நசஸீதாபரஹீநா" என்கிறபடியே அவனைப்பிரியி லிவளில்லையென்னும்படி யிருக்குமவளானவென்று பலிதார்த்தம். இதுக்கு மொழியாளென்கிறத்தோடே யந்வயம். அணிமழலை- அழகியமழலையையுடைத்தான, அணி- அழகியது, மழலையென்று ஸுகுமாரமான உக்திவிஶேஷம். கிளிமொழியாள- கிளியினுடைய உக்தியை யுடையவளான வொருபிராட்டியானவள், அலற்றியசொல்- ப்ரலபித்தபாசுரத்தாலே, எம்பெருமானைப் பிரிந்தலற்றினபிராட்டி வாக்யாவஶேஷத்தாலே யென்றபடி. இதுக்கு உரைத்தவென்கிறத்தோடே யந்வயம். வழுவில்லா- ப்ரவ்ருத்தியில்லாதவரான, வழுவு- ப்ரவ்ருத்தி, அந்தபிராட்டி ஸ்வபாவத்திலே யொன்றுங்குறையில்லாதவரான வென்றபடி. வண்குருகூர்ச்சடகோபன்- அழகிய திருநகரியையுடையவரான வாழ்வார். வாய்ந்து- கிட்டி, ஸர்வேஶ்வரனுடைய ஸ்வபாவங்களிலே பாவபந்தத்தையுடையவராயென்றபடி. உரைத்த- அருளிச்செய்ததான, இது பத்துக்குவிஶேஷணம். வழுவிலலா- ப்ரவ்ருத்தியில்லாததான. தன்ஸௌஹார்தாதிஶயத்தாலே ஶ்ரோதாக்கள் நெஞ்சைவிட்டுப்போகாததான வென்றபடி. ஆயிரத்து- ஸஹஸ்ரத்தில், இப்பத்து- இந்ததஶகமானது, நோய்- வ்யாதியை, தவிஶ்லேஷாஸஹவ்யாதியை யென்றபடி. அறுக்கும்- ஶமிக்கும், நித்யஸம்ஶ்லேஷத்தை யுண்டாக்குமென்றபடி. தன்னையப்யஸித்தார்க்கிதிஶேஷ:. ॥கக॥

✳ ஶ்ரீமதே ராமாநுஜாய நம: ஶ்ரீமதே நிகமாந்தமஹாதேஶிகாய நம:. ✳

மூ— மலர்ச்சோலைகள்சூழ்திருநாவாய்* குறுக்கும்வகையுண்டுகொலோகொடியேற்கே* ॥க॥
கொடியேறிடைக்கோகனகத்தவள்கேள்வன்* வடிவேற்றடங்கண்மடப்பின்னைமணாளன்* நெடியானுறைச்
சோலைகள்சூழ்திருநாவா* யடியேனணுகப்பெறுநாளவைகொலோ* ॥உ॥

---

ஆ— ஸர்வஜ்ஞராய் ஸமஸ்தஜ்ஞாநவேத்தாக்களாயிருப்பாருடைய தேவர்களைப்போலத் திருநாவாயைநமக்
கெந்நாள் குறுகக்கூடுமுண்டோவென்கிறார். ॥க॥
(கொடியேறிடை) பெரியபிராட்டியாரோடும் நப்பின்னைப்பிராட்டியாரோடுங்கூட அவன்எழுந்தருளியிரு
க்கிற திருநாவாயிலே போய்ப்புகுவதென்றோவென்கிறார். ॥உ॥

---

இ— தாமங்கேபோகவேணுமென்று த்வராவிக்கிறாரென்றுகருதது இம்முதற்பாட்டினபிப்ராயம் இதில்ஸம்ரு
க்ஷிதம் அதில (ஸம்வத்ஸராதிபாலே) ‘ஆகத்தவனை’ உத்ஸாஹிபாக ஷீதீயவாக்யாபிப்ராயமும் (தேவர்களைப்போ
க்குமென்கிறவிததாலே) அறுக்கும்வினையாயின வென்கிறத்தினபிப்ராயமும் (நமக்குமத்ஸாஹியாலே) தாமீடவ
ருத்தினபிப்ராயமும் சொல்லிற்றாயிற்று. *

முதற்பாட்டு.

குறுகைக்கென்றது- கிட்டுகைக் கென்றபடி. உண்டேபோவென்கிறவிடத்தி லவதாரணம் கடேரமு
ஶ்வமேஷுவாரம் உவாயமில்லாமற்போகாதே கிடைக்குமோவென்றபடி. ॥க॥

✳ இரண்டாம்பாட்டு. ✳

வாக்யவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பெரியவித்ஸாஹியால்) உத்தராயத்துக்குத் தா
த்பர்யமருளிச்செய்கிறார் (அவனித்ஸாஹிபால்) கீழ்ப்பாட்டிலே திருநாவாயைக்கிட்டுகைக் குவாயமுண்டாக்கு
மோவென்றவரிப்பாட்டிலே புகுவதென்றோவென்று ஆசிக்கிறாரென்று ஸங்கதியும்சொல்லிற்றாயிற்று. ॥உ॥

✳ மூன்றாம்பாட்டு ✳

கவையில்மனமின்றியென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (த்வைதவித்தையென்று) நவையிலெ

---

ஈ—மலர்ச்சோலைகள்- வர்த்தமாநமாய் புஷ்பிதமான வாஸோத்யாநங்களாலே, வெறி- வர்த்தம்,
பரிமளாதிஶயங்களாலும், சூழ்- வேஷ்டிதமான, திருநாவாய்- திருநாவாயென்கிற திவ்யதேசத்தை, கொ
டியேற்கு க்ரூரகர்மங்களையுடையவனை வெனக்கு, கொடியன்- க்ரூரன், இச்சதத்தாலே தன்னைச்
சொல்லிக்கொள்ளும்போது கொடியேற்கென்று ரூபமாயிருக்கும், த்வராவமுடையார்க்கு விரோதியி
வதர்க்கமானதேஶத்தையுங் கிட்டப்பெறாதபடி க்ரூரஸ்வபாவத்தையுடையவனை வெனக்கென்றபடி. குறுக்
கும்வகை- கிட்டும்ப்ரகாரம், குறுக்குமென்றது அத்தேஶமாமெஷயாய் குறுகுமென்றபடி. கிட்டுகைக்கு
வுபாயமென்கை. உண்டுகொலோ- உண்டோ, ஸித்திக்குமோவென்றபடி. ॥க॥
கொடியேறிடை- கொடிபோலே க்ருஶமாய் ஸுந்தரமான மத்யத்தையுடையவளான, ஏர்- ஸௌந்தர
ம், கோகனகத்தவள்- கோகநதவாஸிநிக்கு, பெரியபிராட்டியாருக்கென்றபடி. கேள்வன்- ஸ்நேஹிவனை
ன, கேளவனென்று ஸ்நேஹிவன், ஸ்நேஹிவல்லபனெனவென்றபடி. “நசஶ்ரீஶ்ரவாமாஷ்யதி” என்பாருமா
ருகேயிருக்க நானவ்வூரைக்காணப்பெறாதே யிழக்கவோவென்று கருத்து. வடி- வடிந்ததான, க்ருஶமானவெ
ன்றபடி. வடிகை- க்ருஶமாகை, தீக்ஷ்ணமானமென்கை. வேல்- வேலுக்குஸத்ருஶங்களான, வேலென்கிறவா
யுதவிஶேஷம்போலே தீவ்ரங்களானவென்றபடி. தடம்- விஶாலங்களான, கண்- நேத்ரங்களையு
டையவளான, மடப்பின்னை- ஸௌந்தர்யவதியான நீளாதேவிக்கு. பின்னை- நீளாதேவி, மணாளன்- நாயக
னை, நெடியான்- மஹானானவன், இன்னுமுள்ள ஸர்வேஶ்வரனிஜநாதிகளாலே ஸர்வோத்க்ருஷ்டனானவனெ
ன்றபடி உறை வஸிக்கிற, “ஸவாஸுதேவஸ்ஸர்வமிதி ஸமஹாத்மாஸுதுர்லப:” என்கிறபடியேதிவ்ய
மஹிஷிகளோடேகூட வன் வஸிக்கிறவிடமான வென்று பதார்த்தம். சோலைகள்சூழ்- உத்யாநங்களாலே
வேஷ்டிதமான, திருநாவாய்- அந்ததிவ்யதேசத்தை, அடியேன்- ஶேஷபூதனானநான், “தாஸபூதாஸ்ஸ்வத:
ஸர்வே” என்கிறபடியே ஸர்வாத்மாக்களுக்கும் பிட்டிப்பிறந்தவனான நானென்றபடி. அணுகப்
பெறுநாள்- கிட்டப்பெறும்படியானதிநங்கள், அணுகுகை- கிட்டுகை, அவைகொலோ- எதுகளோ, அந்நா
ளிப்போதே வரவேணுமென்று ஆசிக்கிறபடி. ॥உ॥

மூ— எவைகொலணுகப்பெறுநாளென்றெப்போதும்* கவையின்மனமின்றிக்கண்ணீர்கள்கலுழ்வன்* நவையிற்
திருநாரணன்சேர்திருநாவாய்* அவையுட்புகலாவதோர்நாளறியேனே* ||௩||
நாளேலறியேனெனக்குள்ளனநாளும்* மீளாவடிமைப்பணிசெய்யப்புகுந்தேன்* நீளார்மலர்ச்சோலைகள்சூழ்
திருநாவாய்* வாளேய்தடங்கண் மடப்பின்னைமணாளா* ||௪||

ஆ—(எவைகொல்) என்றுதிருநாவாயை அணுகப்பெறுவதென்றெப்போதும் கலங்கிக்கண்ணீர் சோரவிருக்கிறநான் ஸௌலப்யத்ருநீகனான திருநாரணன்சேர் திருநாவாயிலே அவனுடைய திவ்யபரிஷத்திலே போய்ப்புகுநாளென்றென்றறிகிலேனென்கிறார். ||௩||

(நாளேலறியேன்) நிரவதிகஸௌந்தர்யாதிவிஸிஷ்டையான நப்பின்னைப்பிராட்டிக்கு மணாளனானவுனக்கு மீளாவடிமைப்பணிசெய்யப்புகுந்தேன் அடிமைசெய்யுநாளென்றென்றறிகிலேனென்கிறார். ||௪||

இ— னகிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸௌலப்யத்ருநீகனானவென்று) அவையுளென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவனுடையதிவ்யபரிஷத்திலேயென்று) இத்தால் கீழ்ப்பாட்டிலே அவ்வூரிலேபுகவாசைப்பட்டவர் இப்பாட்டிலே அங்குள்ளதிவ்யபரிஷத்திலேபுகவாசைப்படுகிறாரென்று ஸங்கதிசொல்லிற்றாயிற்று. ||௩||

* நாலாம்பாட்டு. *

தாஸ்யவாசகத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நிரவதிகேத்யாதியால்) ஸ்வபாவாசகத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அடிமைசெய்யுநாளித்யாதியால்) இத்தால் கீழ்ப்பாட்டிலே திவ்யபரிஷத்திலேபுகவாசைப்பட்டவர் இப்பாட்டிலே கைங்கர்யம்பண்ண ஆசாஸிக்கிறாரென்று ஸங்கதிசொல்லிற்றாயிற்று. ||௪||

ப— அணுகப்பெறுநாள்- திருநாவாயைக்கிட்டப்பெறத்தக்கநாள், எவைகொலென்று- எதுகளோவென்று, எப்போதும்- ஸர்வகாலமும், ஒருக்காலித்தைச்சொல்லி மற்றைப்போது ஸுகமாயிருந்தானாகப் போதுபோக்கப்பெற்றிலேனென்றுகருத்து. கவையில்- வ்யாபாராந்தரத்தில், கவை- வ்யாபாராந்தரம், மனமின்றி- ஸங்கல்பமில்லாமல், ஸங்கல்பமவகீர்ணமாகாதே இதிலேகாக்ரசித்தனாயென்றபடி. கண்ணீர்கள்- பாஷ்பங்கள், கலுழ்வன்- ப்ரவஹியாநிற்பன், கலுழ்கை- ப்ரவஹிக்கை, நான்பொகாஸ்ருக்கள் ப்ரவஹிக்கவிருப்பனென்றபடி. நவையில- நவையிலலாதவனான, நவை- குற்றம், ஹேயப்ரத்யநீகனானவென்றபடி. திருநாரணன்- ஸ்ரீயஃபதியான நாராயணன், சேர்- வந்துசேர்ந்தவிடமான, திருநாவாயவையுள்- அந்த திவ்யநகரத்தில்திவ்யபரிஷத்திலே, அவையென்று பரிஷத்துக்குப்பேர். புகலாவது- நான்ப்ரவேசிக்கும்படியான, ஓர்நாள்அறியேன்- ஒருதினத்தையறிகிலேன், அந்ததினமென்றென்றறிகிறேனில்லையென்றபடி. அந்தநாளெப்போ வரப்புகுகிறதென்று ஆசாஸிக்கிறபடி. ||௩||

நீள்- நீண்டவையான, உத்துங்கவிஸாலங்களானவென்றபடி. ஆர்மலர்- ஆர்ந்தமலர்களையுடையவையான, பரிபூர்ணபுஷ்பஸாலிகளானவென்றபடி. சோலைகள்சூழ- உத்யாநங்களாலே பரிவ்ருதமான, அடிமைநாம்செய்கைக்கு ஸாத்குண்யகரணஸம்ருத்தியையுடைத்தான தேசமென்றுகருத்து. திருநாவாய்- இது மேலேபேஸத்வமாய் ஸௌந்தர்யவிஸிஷ்டமாயிருக்கிறது. திருநாவாயென்கிற திவ்யநகரத்திலே இருக்கிறவனென்றபடி. வாளேய்- வாளுக்குஸத்ருஸமான, வாள்- வஜ்ரம், ஏய்கை- ஸத்ருஸமாகை, உஜ்ஜ்வலதாங்களானவென்றபடி. தடம்- விஸாலங்களான, கண்- நேத்ரங்களையுடையவளான, மட- ஸௌந்தர்யையான, ஸௌந்தர்யகுணங்களையன்றிக்கே ஆத்மகுணங்களாலுமன்னே வஸீகரிக்க வல்லவளானவென்றுகருத்து. பின்னைமணாளா- நீளைக்குநாயகனானவனே, தேஸாந்தரம்போயிருந்து தன்னூருக்குவருகிற ராஜபுத்ரன்கிட்டினவாறே தாய்மாரைப் பலகாலும்நினைக்குமாப்போலே ப்ராப்யதேஸம் கிட்டினவாறே பாட்டுத்தோறும் பிராட்டிமார்களையநுஸந்திக்கிறார். நாளும்- ஸர்வகாலமும் ஸம்ஸாரியாயிருந்தாலும், வைகுந்தத்தில் நித்யஸூரிகள்போலே நானுமென்றபடி. மீளா- புநராவ்ருத்தியில்லாததான, அடிமைப்பணி- கைங்கர்யரூபங்களான க்ருத்யங்களை, பணி- க்ருத்யம், செய்ய- பண்ணுகைக்கு, புகுந்தேன்- ப்ரவ்ருத்தனானேன், எனக்குள்ளன- கைங்கர்யம்பண்ணுகைக்கு உன்னாலேயெனக்கு வரிக்கப்பட்டவைகளாயிருந்துள்ளவையான, ஏளேல்- நாள்களையானால், அறியேன்- அறிகிலேன், அப்படிப்பட்டநாள்களெனக்கெப்போ

மூ— மணாளன்மலர்மங்கைக்குமண்மடந்தைக்கும்* கணாளனுலகத்துயிர்தேவர்கட்கெல்லாம்* விணாளன்விரும்பியுறையுந்திருநாவாய்* கணாரக்களிக்கின்றதிங்கென்றுகொல்கண்டே* ॥௫॥

கண்டேகளிக்கின்றதிங்கென்றுகொல்கண்கள்* தொண்டேயுனக்காயொழிந்தேனொழிவின்றி* வண்டார்

ஆ— (மணாளன்) ஶ்ரீபூமிநீளாநாயகனாய், தேவாதிஸகலாத்மநிர்வாஹகனாய், ஶ்ரீவைகுண்டநிலயனான வெம்பெருமான் விரும்பியுறையுந்திருநாவாயை இப்ப்ரக்ருதியோடே கண்ணாரக்கண்டு களிப்பதென்றோவென்கிறார். ॥௫॥

(கண்டே) எனக்காகத்திருநாவாயைக் கோயில்கொண்டுநிற்கிற கோவலர்கோவே? உன்பக்கலிலே அநந்ய

❋ஐந்தாம்பாட்டு.❋

இ— இப்பாட்டிலே ஶ்ரீபூமிநீளைகளைச்சொன்னது உபலக்ஷணமென்னுங்கருத்தாலே (நீளா) ஶப்தம். இப்படி பாட்டுத்தோறும் பிராட்டிமாரை யநுஸந்திக்கையாலே ஸாத்ஜநிகமென்கிற ஸமஸ்தநாமத்திருவாய்மொழிக்கு ப்ரக்ருதார்த்தமென்று ஸூசிதம். "ஸாதிஜ யாயாயஸ்யஸாத்ஜநி:" என்று உபநிஷத்ஸூத்ரத்திலே "விஶ்வாவீஸத்ராஸாதநஸ்யதா" என்கிற வாக்யத்தின் வ்யாக்யாநத்திலே நாராயணமுனிகள் வெளியிட்டருளினாரிறே. இத்திருவாய்மொழியிலே பிராட்டிமார்க்கு ஸாதநத்வம் கணோக்தமன்றாகிலும் ஸ்வஸ்வபாவத்தாலே ஸித்திக்குமிறே. த்விதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தேவாதி ஸர்வாதியால்) இங்கென்கிறபதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இப்ப்ரக்ருதியோடேயென்று) இச்ஶரீரத்தோடேயென்றபடி. கண்ணாரக்கண்டு தர்ஶியாலே கீழ்ப்பாட்டிலே த்வாரகமெய்தலைக்கைத்தை பலவுக்ஷித்தவரிப்பாட்டிலே தத்ஸம்பந்தியான திவ்யதேஶத்தினுடைய அநுபவத்தை யாசைப்படுகிறாரென்று ஸங்கதிசொல்லிற்றாயிற்று. இரண்டாம்பாட்டில் கைங்கர்யமும் திவ்யதேஶப்ரவேஶதும் ப்ரார்த்திதமாகையாலே யிங்கு ஸாதநாந்தரமில்லை. ॥௫॥

❋ஆறாம்பாட்டு.❋

திருநாவாயி ஸர்வஜ்ஞிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (எனக்காகவி ஸர்வஜ்ஞியால்) த்விதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உன்பக்கலிலேயி ஸர்வஜ்ஞியால்) த்ருதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார்

---

ஶ— வரப்புகுகிறதென்றறியேனென்றபடி. ॥௪॥

மலர்மங்கைக்கும்- பத்மவாஸிநியான பெரியபிராட்டிக்கும், மங்கை- யுவதி, மண்மடந்தைக்கும்- பூமிப்பிராட்டிக்கும், மடந்தை- ஸ்த்ரீ, மணாளன்- நாயகனான, உலகத்து- லோகத்திலுள்ள, உயிர்தேவர்கட்கெல்லாம்- மநுஷ்யாதிப்ராணிகள் தேவர்களென்கிற ஸமூஹங்களுக்கும், கணாளன்- நிர்வாஹகனான, விணாளன்- பரமபதத்தையுடையவன், விண்- பரமபதம், ஶ்ரீவைகுண்டநாதனானவனென்றபடி. விரும்பி- ஶ்ரீவைகுண்டத்திற்காட்டிலுமாதரித்து, உறையும்- வஸிக்கும்ஸ்தலமான, திருநாவாய்- அந்ததிவ்யதேஶத்தை, இங்கு- இந்தலோகத்திலே, இச்ஶரீரத்தோடேயென்றபடி. கணார- கண்கள்விடாய் தீர்ந்து த்ருப்தங்களாம்படி, கண்டு- கண்ணாலேகாணப்பெற்று, களிக்கின்றது- ஆநந்திப்பது, என்றுகொல்- என்றைக்கோ? அதிப்போதேவரவேணுமென்று ப்ரார்த்திக்கிறபடி. [கண்ணாளன் விணாளன் கணார என்பவை இடைகுறைந்துகிடக்கிறது.] ॥௫॥

வண்டார்- வண்டுகளாலே ஆர்ந்தவையான, ஸேவ்யங்களானவென்றபடி. மலர்ச்சோலைகள்சூழ்- புஷ்பஸமூஹங்களாலே பரிவ்ருதமான, திருநாவாய்- அந்ததிவ்யதேஶத்தை, தொண்டே- ஸ்வீகரியாநின்றுகொண்டே, அநந்யார்ஹஶேஷபூதனாய். இது ஆழ்வாரை வஶீகரிக்கைக்கு யோக்யமானதேஶமென்று திருவுள்ளத்தாலே நிஶ்சயித்தானின்றுகொண்டென்றபடி. உறைகின்ற- அங்கேவஸியாநிற்கிறவனான, எம்- எங்களுடையவனான, ஆஶ்ரிதர்க்கெல்லாம் ஸுலபனானவென்றபடி. கோவலர்கோவே- கோபாலநாயகனே, கோவென்று நாயன், துரிசு- அபத்யம், ப்ரயோஜநாந்தராபேக்ஷமாகிற வஸ்துவென்றபடி. இன்றி- இல்லாமல், தொண்டேயென்கிறவிடத்தில் ஏகாரத்தை உனக்குஎன்கிறத்தோடே கூட்டுவது. உனக்கே- நிரதிஶயபோக்யனானவுனக்கே, அநந்யார்ஹ மநந்யபோக்யவஸ்துவாய், தொண்டாயொழிந்தேன்- ஸ்வதந்த்ரனாய் விட்டேன், ஒழிந்தேனென்று "பரித்யக்தாஸ்வதந்த்ர்யஸ்ஸ்வாதந்த்ர்யஹீந" மென்கிறகணக்கிலே

௮ — அருளாதொழிவாயருள்செய்தடியேனைப்* பொருளாக்கியுன்பொன்னடிக்கீழ்ப்புகவைப்பாய்* மருளே
யின்றியுன்னை யென்னெஞ்சகத்திருத்துந்* தெருளேதரு தென்றிருநாவாயென்றேவே* ॥௮॥
தேவர்முனிவர்க்கென்றுங்காண்டற்கரியன்* மூவர்முதல்வனொருமூவுலகாளி* தேவன்விரும்பியுறையுந்
திருநாவாய்* யாவரணுகப்பெறுவாரினியந்தோ* ॥௯॥

ஆ — யானிவன்' என்று விஷயீகரித்தருளி, அடியேனையுன் பொன்னடிக்கீழ்ப் புகவைத்தருளுவாய், வைத்தரு ளாதொழிவாய், திருவுள்ளமானபடி செய்தருள, என்றுகொண்டு எம்பெருமானையின்னதாகிறார் ॥௮॥

(தேவர்) ப்ரஹ்மாதிகளுடைய சக்ஷுராதிகரணங்களுக்கும் அகோசரனும், ப்ரஹ்மாதிஸ்தாவராந்த ஸர்வஜகந்நிர்வாஹணதாரண ஸம்ஹாரணசீலனான வெம்பெருமான் விரும்பிக்கொண்டு ஸஸம்ப்ரமனாயுறை கின்ற திருநாவாயை அணுகப்பெறுமவர்கள் என்ன ஸாமர்த்யபண்ணினார்களோ, நான் ஸாமர்த்யஹீனனாயிருக்கே. ॥௯॥

இ — அருளாதொழிவாயென்று) ஷஷ்டிகாரணமருளிச்செய்கிறார் (திருவுள்ளமிகு ஆழியால்) இன்னதாகிறாரென்று வெறுக்கிறாரெனறபடி. கீழ்ப்பாட்டிலே தாமபேக்ஷித்தபடி பெறாமையாலே திருவுள்ளங்கலங்கி யிப்பாட்டிலே எம்பெருமானைவெறுக்கிறாரென்று ஸங்கதிசொல்லிற்றாயிற்று ॥௮॥

✻ஒன்பதாம்பாட்டு.✻

ஆஷ்யவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ப்ரஹ்மாத்யாதியால்) அதீதவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ப்ரஹ்மாதிஸ்தாவரேத்யாதியால்)இனி என்கிறவக்ஷரத்தாலே ஸூசிதமாகிறவர்த்தத்தையருளிச் செய்கிறார் (நானித்யாதியால்) இத்தால் கீழ்ப்பாட்டில் தாம்வெறுத்துச்சொன்னவிடத்திலுமவனொருவிசேஷகடாக்ஷம் பண்ணாதொழிகைவாலே யிப்பாட்டிலே வ்யதிதராகிறாரென்று ஸங்கதியுஞ்சொல்லிற்றாயிற்று. ॥௯॥

ய — மருளேயின்றி- அஜ்ஞானமேயில்லாமல், மருள்- அஜ்ஞானம், ஏகாரம் ஸகலதோஷநிவ்ருத்திவ்யவச்சேதகமாய்க் கொண்டு க்ருத்ஸ்நநிவ்ருத்திபரம், அஜ்ஞானமம்சமுமில்லாமலென்றபடி. உன்னை- ஸ்வரூபரூபகுணவிபூதிகளாலே அபரிச்சின்னனானவுன்னை, என்னெஞ்சகத்து- என்நெஞ்சிலே, இருத்துந்தெருளே- ஸ்திதிபணுக்குகிற ஸம்யக்ஜ்ஞானத்தையே, தெருள்- ஸம்யக்ஜ்ஞானம், ப்ரோஜ்ஜ்வலமாய் உன்னை நிரந்தரமாக விஷயீகரிக்கிற ஸாக்ஷாத்காரத்தையேயென்றபடி. ஏகாரம் ப்ராக்ருதவிஷயஜ்ஞானவ்யவச்சேதபரம். தரு- தந் தருளினவனான, மயர்வறமதிநலமருளினனென்றதை யநுஸந்தித்தபடி. தென்திருநாவாய்- ஸுந்தரமான திருநாவாயிலேயிருக்கிற, தென்என்று ஸௌந்தர்யம், என்தேவே- என்னுடையதெய்வமே, தேவு- தெய்வம், எனக்குப்ராப்யமும் ப்ராபகமுமானவனேயென்றபடி. அருள்செய்து- என்பக்கலிலே க்ருபைபண்ணி, அடியேனை- உனக்கு நித்யசேஷபூதனானவென்னை, பொருளாக்கி- ஒருவஸ்துவாக்கி, பொருள்- வஸ்து, த்ருணாதிகளைப்போலே யுபேக்ஷியாதே ஸ்வீகரித்து விஷயீகரித்தென்றபடி. உன்பொன்னடிக்கீழ்- உன்னுடைய ஸ்ப்ருஹணீயங்களான திருவடிகளின்கீழே, பொன்னென்பது ஸ்ப்ருஹணீயவாசகம் புகப் ப்ரவேசிக்கும்படி, வைப்பாய்- வைத்தருளா, அருளாதொழிவாய்- அப்படிக்ருபைபண்ணாதே தானொழிந் துவிடு, உனக்குத்திருவுள்ளமானபடி செய்தருளாயென்றபடி. வெறுப்பாலே அருளிச்செய்கிறபடி. ॥௮॥

தேவர்முனிவர்க்கு- ப்ரஹ்மாதிதேவர்களுக்கும் ஸநகாதிமுனிகளுக்கும், என்றும்- ஸர்வகாலமும், காண்டற்கு- சக்ஷுராதிகரணங்களாலே காணுகைக்கு, அரியன்- அசக்யனான, ஸ்வயத்னத்தாலே காணவசக்யனானவென்றபடி. மூவர்முதல்வன்- ப்ரஹ்மருத்ரேந்த்ராதிகளுக்கும் காரணபூதனான, ஒரு- அத்விதீயனான, மூவுலகாளி- த்ரைலோக்யநிர்வாஹகனான, க்ருதகாக்ருதகாதிபேதபிந்ந த்ரிவிதங்களான ஸகலலோகங்களுக்கும் நிர்வாஹகனானவென்றபடி. தேவன்- தேவதாஸார்வபௌமன், ஸர்வேச்வரனான ஸர்வேச்வரனென்றபடி. விரும்பி- ஆதரித்து, உறையும்- வஸிக்கிறவிடமான, ப்ரஹ்மாதிகளிற்காட்டிலும் ஸம்ஸாரிசேதநர்களான வீச்வரன் அத்யாதரம்பண்ணிக்கொண்டு நித்யவாஸம்பண்ணுகிற தேசமென்று பாவம். திருநாவாய்- அந்தத்திவ்யநகரத்தை, இதுக்கு அணுகப்பெறுவாரென்கிறத்தோடே யன்வயம். இனி- நான்காணப்பெறாதேமுடிந்தபின்பு, அந்தோ- அப்போ! தாங்காணப்பெறாமையாலே வெறுக்கிறபடி, அணுகப்பெறுவார்- கிட்டியநுபவிக்கப்பெறுவார், அணுகை- கிட்டுகை, யாவர்- ஆர்களோ! எந்தஸாமர்த்யவான்களோவென்றபடி. அவர்கள் தேசாந்தரஸ்தர்; நித்யஸூரிகளென்றுகருத்து [illegible]

ஸ்ரீ:

த்ருமிடோபநிஷத்தாத்பர்ய ரத்நாவளி:

(அறுக்கும்வினையாயின.)

தந்வீமத்யோ ஜகதி விதிதஸ்ரீவராஹாவதார:
மந்த்ராத்யப்ஜோத்பவநதமஹாதேவதாஸ்த்ரீகுணாட்ய: |
வைமாதர்யோக்ஷிதவஸுமதீஸ்த்ரீவதாஸேதுதேவ:
ஸ்தாநீ தீர்த்தோ பஹுகுணநிதிஸ்ஸம்மதோ நந்தநோயம் ||கக0

(தந்வீமத்யோ) உ* கொடியேரிடைக்கோகனகத்தவள் - கொடிபோலே நுண்ணிதான இடையையுடையவளாகையாலும், (ஜகதிவிதிதஸ்ரீவராஹாவதார) ந* திருநாரணன் - இதுவரையில் ப்ரஸித்தமாய்ச் சொல்லப்பட்டது. மேல் நாச்சியாருடைய வைலக்ஷண்யம் சொல்லுகிறது. 'ஸ்ரீயப்பதிரூபத்தோ மஹாவராஹஸ்யாரூபகவ்' என்கிற நிருக்திகளையுடைத்தாய் ஸ்ருதிஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களிலே ப்ரஸித்தமான ஸ்ரீஸப்தத்தாலே வாச்யையாகையாலும்; (மந்த்ராத்யப்ஜோத்பவநதமஹாதேவதாஸ்த்ரீ) சு* மனனன்மலர் மங்கைக்கு மண்மடந்தைக்கும் - மண்மடந்தையென்றது கீழும்மேலும்சொல்லும் நப்பின்னைக்குமுபலக்ஷணம் - நீளாதிகளை விபூதியாகவுடையவளாகையாலும், (குணாட்யமஹாதேவஸ்த்ரீ) எ* பூவின்மிசைநங்கைமார் - திருமாலே - குணாட்யையாகிலே "தேவதேவ தேவதேவ ப்ரஸந்தோத்ஸவ ராஜ்யஸ்ய மஹாராஜ விஷ்ணுபத்நீ யுவதீரபீஷ்டாஸி" என்கிறபடியே அநந்தருக்கு ஆஸ்ரயணமாக எம்பெருமானோடே சுவதரிக்கையாலும், (ஸேதுஸேதுவைமாத்யோ) கூ* திருமாலென்று - எம்பெருமான் ஆஸ்ரிதருடைய தோஷங்களைப்பாராதே க்ஷமிக்கைக்குப் புருஷகாரபூதையாயிருந்து பிரிப்பிக்குமவளாகையாலும், (ஸேதுவைமாத்யோ) அ* தெருளேதரு - தெருளனுக்கு ஜ்ஞாநாதிமானஸாக்ஷிகத்தை யுண்டாக்குமவளாகையாலும், (ஸேதுதேவ) எ* தேவாசுரர்செற்றவனே - ஆஸ்ரிதர்க்கு விரோதிகளைப்போக்குமவளாகையாலும், (ஸ்தாநீதீர்த்தோ) கூ* அணுகப்பெறுநாள் - எப்போதும் ஸந்நிஹிதையாயிருக்கையாலும், 'நாதத்தோயிதீ' 'வேஸ்யாதிதேவாலயம்' இத்யாதிகளிற்படியே நிரவதிக கல்யாணகுணங்களையுடையவளாகையாலும், ஸமர்த்தையான பிராட்டிக்கு ஸத்ருஸனான எம்பெருமானை ஸம்மதையான ஜாயையையுடையவனாக 'அறுக்கும்வினையாயின' வென்கிறதசகத்திலே ஆழ்வார் அருளிச்செய்தருளினாரென்கிறார். ||கக0||

இத்திருவாய்மொழியிலே ஐந்துபாட்டுக்களிலே பிராட்டிஸம்பந்தம்சொல்லுகையாலே
ஐந்துபாட்டுகளிலும் இதுவே விவக்ஷிதமென்றுதிருவுள்ளம்.

[*ஜகதிவிதிதஸ்ரீவராஹாவதார' ஸ்தாநம்' என்றுவரம். முதற்பாட்டில் குறுக்கும்வகையென்று ஸோஸக்கமும் ஆறாம்பாட்டில் கோவலர்கோவேயென்று குணாட்யமஹாதேவஸ்த்ரீயும் விவக்ஷிதம். இது பதினெண்ணாயிரத்தின்படி. ஸ என்பதை ஸாவதாரணமாகக்கொண்டு அதையுடையவளானது கொண்டு ஸதீஎன்று ஸப்தமாக்கி மேலே பஹுவ்ரீஹியாயிருக்கிறதென்று ஸ்ரீவேங்கடதேஸிகர் திருவுள்ளம். தநயாதாவின்மேல் ஸம்பந்தப்பண்ணி ஸாஹநாதஸ்யஸ்ருஷ்டாஸாகே, என்றுதல் ஸாஹநம் ஸந்ததி குத்ஸிதப்பண்ணி ஸாதக் என்றுதல், வைத்து தாத்ருஸீஜாயாயஸ்ய என்று ஆஸ்ரிதர்திறத்தில் ஸமமான விதேயையுடையவளென்றுகருத்து. "ஸாஹஜாநயேவிஷ்ணோ" என்னுமிடத்தில் தாயவன்இவ்வா றேஷ்யாவ்யாநம்பண்ணினான். ஸாஷ்டோபத்ருதீகிதயாம்தாம் ஸஹிதஸ்யாதநாம்ஸகாக குத்ஸிதவி ஸாதிக்ஷஷேஸெந கல்யாணகுணங்களைவிவக்ஷித்து ஸ்வாதநத்தையும்விவக்ஷித்துப் பொருள்கொள்ளிலுமாம் என்று நம்பூர்வாசார்யர்கள் அருளிச்செய்யும்படி.]

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேஸிகாய நம:.

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஒன்பதாம்பத்தில் எட்டாந்திருவாய்மொழிமுற்றிற்று.

மூ— வண்குறிஞ்சிப்பிசைதவருமாலோ* செல்கதிர்மாலையுமயக்குமாலோ செக்கர்நன்மேகங்கள்சிதைக்குமாலோ* அல்லியந்தாமரைக்கண்ணனெம்மானாயர்களேறரியேறெம்மாயோன்* புல்லியமுலைகளுந்தோளுங்கொண்டு புகலிடமறிகிலந் தமியமாலோ* ॥க॥

ஆ—முதலான வஸ்துக்கள் என்னைவாதியாநின்றன, ஆஶ்ரயமான ஸௌந்தர்யாதிகுணங்களையுடையனுமிருந்த வெம்பெருமானைப்புல்கி அதுவேதாரகமாயிருந்த விம்முலைகளையும் தோள்களையுங்கொண்டு புகலிடமறிகிலோம், முடிவதோமே என்று கூப்பிடுகிறாள். ॥கா॥

## முதற்பாட்டு

இ— த்ருதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆஶ்ரயமித்யாதியால்) புகலிடமறிகிலமென்கிறதோடு ஸமபிவ்யாஹாரத்தால் புல்லியவென்கிறதில ஸூசிதார்த்தத்தை அருளிச்செய்கிறார் (அதுவேதாரகமாயிருந்தவென்று) புகலிடமறிகிலமென்கிறதற்கு ஸூசிதார்த்தமருளிச்செய்கிறார் (முடிவதோமென்று) ॥க॥

ஈ—வென்றும் உத்தீபகங்களான வஸ்துக்கள், இவையிரண்டாலும் அத்ருஷ்டசரம் அப்ராப்தமாகிறது, ப்ராணத்துக்கொருபுறம் பாதையாயிருக்குமாப்போலன்றிக்கே விஶ்லேஷத்துக்கெங்கும் பாதையாயிராநின்றதே என்றுகருத்து. "யாநி ஸ்ம ரமணீயாநி தயா ஸஹ பவந்தி மே । தாந்யேவாரமணீயாநி ஜீவதோ மே தயா விநா ॥ வஹதே வாயுரத்யந்தம் ஸ்வாவஶ்யம் ஶோகவர்த்தந: । தாம் விநா விஹகைஸ்தேஜ: பாவக: ப்ரதிதீப்யதே" என்கிறகணக்கிலே தத்ஸம்ஶ்லேஷதஶையிலே ஆநந்தஹேதுவாயிருந்தவஸ்துவே இப்போது பாதகமாவதேயென்றபிப்ராயம். வண்- ஔதார்யமான, குறிஞ்சிப்பிசை- குறிஞ்சியென்கிற ராகவிஶேஷமானது, கீதஜ்ஞர் ஸம்ப்ரதாயத்திலே பாதுஷ்கமாகப்பண்ணுகிற ராகவிஶேஷமென்றபடி. தவரும்- ஶரீரத்தைத்துளையாநின்றது, தவர்தல்- துளைத்தல், ஶரம்போலே ஶரீரத்தைத் துளையாநின்றதென்கிறார். ஆலோ! ஹா கஷ்டம், செல்கதிர்- செல்லாநிற்கிற கதிரையுடைத்தான, கதிர்ஶப்தம் ஸாமான்யம்போலே கிரணத்துக்கும் ஆதித்யனுக்கும்பேர். அஸ்தமியாநின்றுள்ள ஆதித்யனையுடைத்தானவென்றபடி. மாலையும்- ஸந்த்யையும், மாலையென்று ராத்ரிக்கும் ஸந்த்யைக்கும்பெயர். மயக்கும்- மோஹிப்பியாநின்றது, வாய்விட்டுவிலபிக்கவுமொட்டாதே மோஹிப்பித்துக் கொல்லாநின்றதென்றபடி. ஆலோ- ஹா கஷ்டம்! செக்கர்- சிவந்தவையான, ஸாயங்காலராகரஞ்ஜிதமேகஶகலங்களானவென்றபடி. நல்- நல்லவையான, இந்த்ரநீலமணிவர்ணங்களானவென்றபடி. மேகங்கள்- மேகங்கள், சிதைக்கும்- ஶரீரத்தைச் செதுக்காநின்றது, சிதைக்கை- தக்ஷணம்பண்ணுகை, பீதாம்பராலங்க்ருதமான அவன் திருமேனிக்கு ஸ்மாரகங்களாய்க்கொண்டு ஹிம்ஸியாநின்றனவென்றபடி. ஆலோ! ஹா பத, இங்கு உத்தீபகாதிகள்தோறும் தனித்தனியே ஆலோவென்றது இவை போரொன்றின்பின்பே துஸ்ஸஹமென்கைக்காக. அல்லி- விகஸிதமான, அம்- அழகியதான, ரமணீயவஸ்துவேஷ காந்திமௌக்த்யாதி குணாஶ்ரயமானவென்றபடி. தாமரைக்கண்ணன்- பத்மம்போலேயிருக்கிற திருக்கண்களையுடையவனான, எம்மான்- அக்கண்ணாலே நமக்கு ப்ராணநாயகனான, ஆயர்களேறு- கோபாலஶ்ரேஷ்டனான, ஏறு- வ்ருஷபம், ஶ்ரேஷ்டனென்றபடி. "பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்" என்கிறபடியே அக்கண்ணழகாலே கோபாலர்களையும் வஶீகரித்துக்கொண்டவனான வென்றபடி. இப்படியிருக்கிறவன் அபலைகளை வஶீகரிக்கச்சொல்லவேண்டாவிறே யென்றுகருத்து. அரியேறு- ஸிம்ஹஶ்ரேஷ்டமான, அரி- ஹரி, ஸிம்ஹமென்றபடி, இப்படி தன்னுடைய ஸௌந்தர்யத்தாலே ஸ்த்ரீபும்ஸவிபாகமற எல்லாரையும் வஶீகரிக்கையாலே த்ருப்தஸிம்ஹம்போலே உத்ஸாஹகராயிருக்குமவனானவென்றபடி. எம்- நம்முடையவனான, ஸம்ஶ்லேஷதஶையிலே நம்பக்கல த்ருஷ்டஸாரனாயிருந்தவனான வென்றபடி. மாயோன்- ஆஶ்சர்யசேஷ்டிதன், புல்லிய- ஆலிங்கனம்பண்ணின, புல்லுகை- ஆலிங்கனம், தத்ஸம்ஶ்லேஷமே தாரகமாயிருந்தவையானவென்றபடி. முலைகளுந்தோளுங்கொண்டு- ஸ்தனங்களையும் தோள்களையுங்கொண்டு, நாமிருந்தபடியறியிருக்கிலுமவன் அங்கீகாரம்பண்ணிப்போன இவ்வவயவங்களுடைய ரக்ஷணத்துக்கென்செய்வேனென்று கருத்து. புகலிடம்- ஒதுங்குமிடம், உத்தீபகாதிகள் நலியாதபடியொதுங்குகைக்கொரு ஸ்தலத்தையென்றபடி. அறிகிலம்- அறிகிறோமில்லை, தமியம்- அஸஹாயைகள், அவனைப்பிரிந்திருக்கிற நமக்கு உத்தீபகாதி பாதகவஸ்துக்களெங்கும் வ்யாபகங்களானபின்பு இனி யொதுங்கவிடமில்லை

௨—புகலிடமறிகிலந்தமியமாலோ புலம்புறுமணிதென்றலாம்பலாலோ* பகலொடுமாலைவண்சாந்தமாலோ பஞ்சம
முல்லைதண்வாடையாலோ* அகலிடம்படைத்திடந்துண்டுமிழ்ந்தளந் தெங்குமளிக்கின்றவாயன்மாயோ*

அ—(புகலிடம்) புலம்புறுமணிதென்றல் தொடக்கமாகவுள்ளவிவையும் பாதிக்கின்றன, ஸர்வஸ்வாமியான்

## ✳ இரண்டாம்பாட்டு. ✳

இ—புலம்புறுமித்யாதியாக பதார்த்தங்களுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார்) புலம்புறுமணியித்யாதி பல்)
இவையுமென்கிறவிடத்தில் உம்மைத்தால் கீழ்ச்சொன்னபதார்த்தங்கள் ஸாதமன்றிக்கே பின்னையுஞ்சில
பாதிக்கின்றன, இப்படியிருக்கச்செய்தேயு மவன்வருகிறானில்லையென்று விஷமிக்கிறாளென்று ஸம்ப
ந்தி. இகலிடத்தசுரர்கள் கூற்றமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸமேஷ்வித்யாதியால்)

ஈ—யென்று பதார்த்தங்களுக்கு நிர்வாஹம். தமியம்- இத்தசையிலஸஹாயரானோம்,
தமியர்- அஸஹாயர், இச்சப்த்தாலே தன்னைச்சொல்லிக்கொள்ளும்போது தமியமென்று பஹுவசனமாயிரு
க்கும். இவை யித்தனைபாதகபதார்த்தங்கள் வருகிறஸமயத்திலே ரக்ஷகனானதான் கூடவிருக்கவேண்டாவோ
அநாத்ருதமென்னுயிரனவென்னை யிவற்றின்கையிலேகாட்டிக்கொடுத்துத் தான் உதாஸீனனாயிருக்கலாமோ
வென்றுகருத்து. ஆலோ! ஹாஹா, "ராஜ்ஞீஸீஹதி ஸமஹிஷீதாவிஸஹாயாமஹாமெத்யம்" என்று அவர்தாம்
விரஹாதுரராய்க் கூப்பிடும்போதொரு தம்பியாகிலுமுண்டு தம்மைபரிபாலிக்கைக்கு, அப்படியுமொரு
துணையில்லையெனக்கென்றுகருத்து. 412

தமியம்- அஸஹாயரானநாம், புகலிடமறிகிலம்- ரக்ஷணபாலக பதார்த்தைத்தப்பியொதுங்குகைக்
கு ஸ்தலமும் காண்கிறிலோம். ஆலோ! ஹாஹா. ஸர்வஜ்ஞனானவ னித்தசையிலுதவாதொழிவதே யென்று
கருத்து. புலம்புறு- த்வநிக்கிற, மணி கண்டைகள், பலவர்த்தகளான தாபரமிகளைத்துடருகிற
தாபஜ வ்ருஷபங்களுடைய கழுத்திலே த்வநிக்கிற கண்டைகளென்றபடி. தென்றல்- உபஸீரம், உஜ்ஜீவன
ஸஹாயப்வேண்டா, கைஶேஶீரமேயமையுமென்னைமுடிக்கைக்கென்று கருத்து. ஆம்பல்- இலைக்கு
ழல், ஆம்பலென்று மேய்ப்பவர்கள் கத்ருஹ்ஸ்தி பதங்களாலே ரஸித்து வாயிலேவைத்துக்கொண்டு ஊது
கிற இலைக்குழலுக்குப்பேர். ஆலோ! ஹாகஷ்டம். சுடுமாலோ, சிதைக்குமாலோ வென்றாப்போலே அவை
பீடிக்கிற ப்ரகாரத்தைச்சொல்லாதே தத்கார்யத்தைச்சொல்லி 'ஆலோ' என்றது- புலியின்கையி
லகப்பட்டவர் புலிபுலியென்றுகதறி மேற்சொல்லமாட்டாதே தடுமாறுமாப்போலே, வாசாமகோசரமான
ஸபமும் ஆதிக்யமிகுகைபாலே மேற்சொல்லமாட்டாதே தடுமாறுகிறபடி. இப்படி மேலுங்கண்டுகொ
ள்வது பகலடு- ஸஹஸ்ரை நாசிப்பிபாகின்ற, அடுகை- நாசிப்பிக்கை, மாலை- ஸாயம்ஸந்த்யாவேளை, பெரிய
வுடையாரை முடித்துக்கொண்டு ராவணன் வந்துநின்றாப்போலே நானாவஸ்தாநங்கள் தன்னுடைய ஸம்ருத்தா
லே கிஞ்சித்ஸுஹ்ருத்தான பகலை முடித்துக்கொண்டுவந்துநின்ற ஸாயம்ஸந்த்யையென்றபடி. வண்சா
ந்தம்- ததாகமாய் ஸ்ரேஷ்டமான சந்தனம், ஆலோ! பசுபசு, பஞ்சமம்- பஞ்சமமென்கிற ஸ்வர
விசேஷம், அக்காலத்திலே மீதிரஸிகருடைய கம்பீரகண்டோத்திதமான பஞ்சமஸ்வரமென்றபடி. முல்லை-
முல்லைப்புஷ்பங்கள், தண்- சீதளமான, வாடை- உதீசீநதேசாகதம், ஆலோ! கஷ்டமே ஸஹாய
ஞானியான வாடையை ஸாயம்ஸஞ்சாரியான தென்றலோடே சேரச்சொன்னது ஒருக்ஷணமந்தகாலமாய்
தோன்றுகைபாலே தென்றலும்வாடையும் மாறிமாறிவருகிறதாய்த் தோற்றுகிறவிவள் பாவனையாலேயவ
ளும். இங்கு கீழ்ப்பாட்டில்போலே உபமானாதிகளோசொன்றுக்குத் தனித்தனியே ஆலோ! என்னாதே
மணிதென்னல் ஆம்பல் ஆலோ! இத்யாதியாலே இரண்டு மூன்றைக்கூட்டி ஆலோ யென்கையாலே கீழ்பாட்
டிலே அவைதனித்தனியே தன்னை நலிந்தபடியைச்சொன்னவளிப் பாட்டிலே தனக்கு பலஹானிவந்
தவாறே அவை திரள்திரளாகக்கூடி நலியத்துடங்கிற்றனவென்று விஷமிக்கிறபடி தோற்றுகிறது,
இகலிடத்து- யுத்தபூமியிலே, இகல்- யுத்தம், அசுரர்கள்கூற்றம்- ஆஸ்ரிதவிரோதிகளான அஸுரருக்கு
ம்ருத்யுவானவன், கூற்றம்- ம்ருத்யு, மாயோன்- ஆஸ்சர்யசேஷ்டிதனானவன், ஆஸ்ரிதரக்ஷணைகபாதா
வானவன் ஆஸ்ரிதபக்ஷபாதியான வென்றபடி. அகலிடம்- ஸர்வலோகங்களுமாம்படி விஸ்தீர்ணமான

மூ—தோய்ந்துதுறந்தெம்மையிட்டகல்கண்ணன்கள்வன்* றனியிளஞ்சிங்கமெம்மாயன்வாரான்றாமரைக்கண்ணுஞ்செவ்வாயுநீலப்* பனியிருங்குழல்களுநான்குதோளும்பாவியேன்மனத்தேநின்றீருமாலோ* ௩

ஆ—த்ருணத்தைப் பரித்யஜித்தாற்போலே யென்னைப்பரித்யஜித்தகன்ற கண்ணன் வருகிறிலன்; அவனுடைய, தாமரைக்கண்ணும், செவ்வாயும், நீலப்பனியிருங்குழல்களும, நான்குதோளும், என்னெஞ்சையீராநின்றன, இனியிருந்தென்னுயிர்காக்கைக்குபாயமென்றென் றலற்றுகிறாள். ௩

இ—விவக்ஷிதம். துறந்தெம்மையித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஒரு த்ருணத்தையித்யாதியால்) தாமரைக்கண்ணனித்யாதியாலே. பாட்டுக்கு ஸங்கதியும்ஸூசிதமெத. கீழ்ப்பாட்டிலே பஹிஸ்ஸ்திதங்களாய் ப்ரதீபிக்கிற பதார்த்தங்களைச் சொல்லியலற்றினவளிப்பாட்டிலே அவனுடைய திவ்யாவயவஸௌந்தர்யங்கள் அந்தஸ்ஸ்திதங்களாய்நின்று பாதிக்கிறபடியைச்சொல்லி விலபிக்கிறாளென்றுஸங்கதி. ௩

ஈ—தோய்க்கை- ஸ்பர்சிக்கை, இந்த ஸம்ச்லேஷவிச்லேஷங்களாலே யென்னைநோக்கி ப்ரத்யக்ஷகாலத்திலே மடுவிலே முழுகிக்கிடப்பாரைப்போலே அத்யந்தாபிநிவேசத்தாலே யென்தேஹத்திலே ஸம்ச்லிஷ்டனாயிருந்தென்றபடி. பாதயோழி பாதிகேசாந்தமாய் பரிபூர்ணதமமாய் அதிசயாநந்த ஸௌந்தர்யாவஹமாய் பாதப்ரபாசாய ஸௌகந்த்யாதி ஸம்பூர்ணஸம்பத்ஸமிருத்தமான பரமமங்களமானதொருமஹாவைபவமிகையான தன்சரீரத்திலே யித்தனைஸம்ச்லேஷவிச்லேஷங்களைச் செய்தருளப்பெற்றால் அதிற்காட்டில் பாரார்த்யமில்லாமையாலும் அதையொருக்ஷணமிழந்தால் அதைக்காட்டில் துக்கமில்லாமையாலும் மனதவாய்விட்டுச் சொல்லிச்சொல்லியலற்றுகிறாள். எம்மை- இப்படிஸாரஜ்ஞனாயிருந்த தன்னைவிட்டுப் பிரியமாட்டாதிருக்கிற நம்மை, ஆத்மநிபஹுவசநம். துறந்து- த்யஜித்து, ஸம்ச்லிஷ்டதசையிலும் என்னைவிச்லேஷிக்கநினைத்து என்றபடி. இட்டு- எறிந்துவிட்டு, இடுகை- எறிகை, கல்லெறிந்தானென்கிறவர்த்தத்திலே கல்விட்டானென்னக்கடவதிறே. ஒரு த்ருணத்தையெறியுமாப்போலே நிர்தயமாக வென்னைவிட்டுவிட்டென்றபடி. அகல்கண்ணன்- விச்லேஷிக்கையே ஸ்வபாவமானக்ருஷ்ணன், அகலுகை- விச்லேஷிக்கை, அதன்றகண்ணனென்னாதே அகல்கண்ணனென்கையாலே அகலுகையே ஸ்வபாவமென்று தோற்றுகிறது. இவனுக்குஸம்ச்லேஷம் காதாசித்கம், அகலுகையே நித்யம். ஸம்ச்லேஷத்தாலல்லது விச்லேஷங்கூடாமையாலே ஸம்ச்லேஷித்தானத்தனையென்றுகருத்து. வாரான்- வருகிறானில்லை, தாமரைக்கண்ணும்- விச்லேஷிக்கிறபோதென்னை விடமாட்டாதே ஸாபிலாஷமாகக் குளிரப்பார்த்தருளின தாமரைஸத்ருசவிலோசனங்களும், செவ்வாயும்- அப்படி பார்த்தருளினவநந்தரம் போய்வருகிறேனென்று சொல்லவுத்யோகித்து வாய்விட்டுச்சொல்லமாட்டாதே விரஹவிஹ்வலனாகையாலே துடிப்பாநின்று அத்தாலேமிகவும் சிவந்துதோற்றின திருவதரமும், நீல- திருமேனியிற்காட்டில் அதிநீலங்களான, பனி- சீதளங்களான, ஸ்நிக்தஸாந்த்ரங்களானவென்றபடி. இரும்- விசாலங்களான, ஸம்ச்லேஷதசையிலே விஸ்ருதங்களாய்ப்பின்பு விச்லேஷஸம்ப்ரமத்தாலே அங்ஙனே விரிந்திருந்தவையானவென்றபடி. குழல்களும்- அவனுடைய குந்தளங்களும், நான்குதோளும்- ஆஜாநுலம்பிகளான வ்ருத்தஸுந்தரங்களாலே அலங்க்ருதங்களான நாலுதிருத்தோள்களும், தான்வருந்தனையும் பரிக்ஷிக்கைக்காக வென்னைநெருக்கியணைத்த நாலுபுஜங்களுமென்றபடி. சதுர்ப்புஜத்வம் திரோஹிதமென்றது ஸாமாந்யபுருஷதர்சந விஷயம், ஆச்ரிதஜநங்களை வாரியணைக்கைக்காக நாலுபுஜங்களுமவர்களுக்குப் ப்ரகாசிதமாயேயிருக்குமிறே. பாவியேன்- இவ்வழகுகளையநுபவித்திழந்தால் மறந்திருக்கப்பெறாதபடி பாபத்தைப்பண்ணினவென்னுடைய, மனத்தே- ஹ்ருதயத்திலே, நின்று- ஸ்திரமாயிருந்துகொண்டு, அவனென்கண்ணுக்கு விஷயமாகாதொழிந்தாலிவை யென்னெஞ்சுக்கு விஷயமாகாதொழியலாகாதோ, தான்போகிறவனவற்றையிங்கேவைத்துப் போகவேணுமோ வென்றுகருத்து. ஈரும்- விதாரணம்பண்ணுகின்றது, ஆலோ- ஸாகஸ்யம், இனி- எனக்கு ப்ராணஸஞ்ஜீவநமான அவனுடையஸௌந்தர்யமே உள்ளேநின்று நலியாநின்றபின்பு, இருந்து- ஸதேஹமாயிருந்துகொண்டு, என்னுயிர்- என்ப்ராணனை, காக்குமாறு- ரக்ஷிக்குமுபாயம், ஆறு- உபாயம், என்?- எது, உபாயமொன்றுங்காண்கிறிலேனென்றபடி. ௩

மூ— எண்ணுமினெந்தைநாமமிப்பிறப்பறுக்குமப்பால்* திண்ணநாமறியச்சொன்னோம் செறிபொழி லனந்தபுரத்* தண்ணலார்கமலபாத மணுகுவாரமரராவார்* ॥௫॥
அமரராய்த்திரிகின்றார்கட்காதிசேரனந்தபுரத்* தமரர்கோனர்ச்சிக்கின்றங்ககப்பணிசெய்வர்விண்ணோர்*
நமர்களோசொல்லக்கேண்மின் நாமும்போய்நணுகவேண்டும்*

ஆ— ஸாத்விகராய் திருவனந்தபுரத்திலேபோய்ப்புக்கு வாஹ்யாப்யந்தரகரணங்களாலும் எம்பெரு மானுக்கடிமைசெய்யுங்கோள் அவருங்களுடைய விந்த ஸம்ஸாரத்தைப்போக்கும் இப்போது தன்திருவடிகளை யாச்ரயிக்கிற வுங்களைப்பின்னையுமமரராக்கும், இதற்குநிஸ்ஸம்சய முமக்குத்தெரியச்சொன்னோமென்கிறார். ॥௫॥
(அமரராய்) திருநாட்டிலேபோய் எம்பெருமானுக்கடிமைசெய்கையன்றோ புருஷார்த்தமென்றிங்குள்ளாரு ந்திருவனந்தபுரத்திலேவந்தன்றோ வடிமைசெய்கிறது, ஆதலாலிங்கே யடிமைசெய்யுமிதுவே புருஷார்த்தம். ஆன பின்பு நாமிங்கேபோ யடிமைசெய்யவேணுமென்கிறார். ॥௬॥

இ— யிடத்தில் வஸவர்த்தாலே கீழ்ப்பாட்டிலே திருவனந்தபுரத்திலுள்ளாரை ப்ரசம்ஸித்தது இப்பாட்டிலே நீங் களுமப்படி அடிமைசெய்யவாருங்கோளென்று ஸநகாதிகளுக்குபதேசிக்கிறாரென்று ஸங்கதிஸூசிதமெ. இதற்கு புண்ணியஞ்செய்து என்கிறதற்குப் ஸமிதாயமருளிச்செய்கிறார் (நிரஸ்தத்யாதியால்) நல்லபு ஸவித்யாதிக்குத தாத்பர்யமருளிச்செய்கிறார் (வாஹ்யத்யாதியால்) இப்பிறப்பறுக்குமென்கிறதற்குத் தா த்பர்யமருளிச்செய்கிறார் (அவனுங்களுடையவித்யாதியால்) அண்ணலார்கமலபாதமணுகுவார் அப்பால் அம ரராவாரென்றதைபித்துத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இப்போதித்யாதியால்) சேஷம் ஸ்பஷ்டம். ॥௫॥

✱ ஆறாம்பாட்டு. ✱

பூசனைசெய்கின்றார்களித்யாதியாலே முன்பே ப்ரஸ்தாவநம்பண்ணியிருக்கையாலே விப்ரதிபத்தியை நிவர்த்திதவசநமன்றோவென்ன ஸங்கதிப்பிக்கிறார் (திருநாட்டிலேயித்யாதியால்) அனந்தபுரத்தினித்யாதி க்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அங்குள்ளாருமித்யாதியால்) நாமும்போய் நணுகவேண்டுமென்கிறதற்கு த் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆனபின்பித்யாதியால்) ॥௬॥

ப— எந்தைநாமம்- ஸ்வாமியினுடைய திருநாமங்களை, எண்ணுமின்- எண்ணுங்கோள், அப்யஸியுங்கோளென்றபடி. ஸவார ஸம்வ்யாநபாடமாக ஜபியுங்கோளென்றபடி. இப்பிறப்பு- இந்தஜந்மத்தை, ஜந்மாந்தரநிஷேதபா ராப்தக்ஷயஹேதுமான இந்த ஸம்ஸாரபந்தத்தையென்றபடி. அறுக்கும்- நிச்சேஷமாக நிவர்த்திப்பித்தரு ளுவன், செறிபொழில்- வாஸ்தவ்யவாஸிஸந்நிதங்களான உத்யாநங்களையுடைத்தான, செறிவு- ஸம்ருத்தி, அ னந்தபுரத்து- திருவனந்தபுரத்திலிருக்கிற, அண்ணலார்- ஸ்வாமியினுடைய, கமலபாதம்- கமலஸத்ருசங்க ளானதிருவடிகளை, அணுகுவார்- கிட்டுவார், ஆச்ரயிக்கிறவர்களென்றபடி. அப்பால்- ஆச்ரயணாநந்தரம், அமரராவார்- நித்யஸூரிகளைப்போலே பாவசுகாநுபவகைங்கர்ய ஸாம்ராஜ்யஸாலிகளாவார், திண்ணம்- த்ருடம் இதில்ஸம்சயமில்லையென்றபடி. திண்ணமென்கிறவிடத்தில் மகாரத்திற்கு ஸம்ஹிதாயாமபாவ: நாம்- இதில் ஸர்வஜ்ஞரானநாம், அறிய- உங்களுக்குத்தெரியும்படி, சொன்னோம்- ஸ்பஷ்டம். ॥௫॥
அமரராய்த்திரிகின்றார்கட்கு- தேவராய்த்திரிகின்றவர்களுக்கு, மநுஷ்யரில்க்காட்டில் நாலுநாள் ஜீவி க்கப்பெற்றவாறே தங்களை அயர்வறுமமரர்களோடொக்க வமரராகவபிமானித்துத் திரிகிறவர்களுக்கென்றபடி. ஆதி- காரணபூதனான ஸ்ரீபத்மநாபன், சேர்- வந்துசேர்ந்திருக்கிறவிடமான, அனந்தபுரத்து- திரு வனந்தபுரத்திலே, அமரர்கோன்- நித்யஸூரிகளுக் கதிபதியான ஸ்ரீஸேநாபதியாழ்வான், கோன்- அதிபதி அர்ச்சிக்கின்ற- ஸமர்ப்பிக்கிறவிடத்தில கைங்கர்யம்பண்ணும்போதென்றபடி. விண்ணோர்- ஸ்ரீ வைகுண்டவாஸிகளான நித்யஸூரிகள், அங்கு- அத்தேசத்தில், அகப்பணிசெய்வர்- அந்தரங்ககைங் கர்யம்பண்ணுவார்கள், அகம்- உள்ளு, பணி- கைங்கர்யம், உள்ளில் கைங்கர்யமாவது அந்தரங்ககைங் கர்யமென்றபடி. அந்தரங்ககைங்கர்யமாக எடுத்துக்கைநீட்டுவார்களென்கை. ஓ நமர்களென்றழைப்பது. ஊன்றது ஆஹ்லாதவாசனைவ்யம் ஹோ? அஸ்மதீயர்காளென்றபடி. சொல்லக்கேண்மின்- நான்சொல்லக்

மூ— குமரனார் தாதை துன்பந் துடைத்த கோவிந்தனாரே* ।அசு।

துடைத்த கோவிந்தனாரே யுலகுயிர் தேவும் மற்றும்* படைத்தவெம் பரமமூர்த்தி பாம்பணைப் பள்ளிகொண்டான்* மடைத்தலை வாளை பாயும் வயலணி யனந்தபுரம்* கடைத்தலை சீய்க்கப் பெற்றால் கடுவினை களையலாமே*॥
கடுவினை களையலாகுங் காமனைப் பயந்தகாளை*

ஆ—(துடைத்த) ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு ஸஹாயனாய் ஸர்வகாரணமாகையாலே ஸர்வேஶ்வரனான எம்பெருமான் கண்வளர்ந்தருளுகிற திருவனந்தபுரத்திலே சென்றடிமைசெய்யப்பெறில் நம்முடைய து:க்கமெல்லாம்போம் அடிமைசெய்யப் போருங்கோளென்கிறார். ।எ।

இ— துடைத்த என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸ்ரீகஜேந்த்ராதியால்) உலகுயிரித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸர்வகாரணத்வாதியால்) பரமமூர்த்தி என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸர்வேஶ்வரனான வித்யாதியால்) கடைத்தலை சீய்க்கப்பெற்றாலென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (சென்றித்யாதியால்) கடுவினையித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நம்முடைய வித்யாதியால்) து:க்கமெல்லாமென்றது ப்ராப்திப்ரதிபந்தகமான து:க்கமெல்லாமென்றபடி. இத்தால் கீழ்ப்பாட்டிலே திருவனந்தபுரத்திலே போயடிமைசெய்யவேணுமென்று சொன்னவர்த்தத்தை உபபத்தியோடே ஸ்வீகரிக்கிறதிப் பாட்டென்று ஸங்கதிஸித்திகை. ।எ।

ஈ—கேளுங்கோள், குமரனார்தாதை- ஸநத்குமாரர்களுடைய, குமரன்- ஸநத்குமாரன், ஸாக்ஷாத் ப்ரஹ்மபுத்ரர்களென்னும் ப்ரஹ்மாவினும், தாதை- பிதா, தேவஸேநாபதியாகையாலே தேவஸேநாபதி ஸ்ரீமானான ஸநத்குமாரனுக்குங்கூட ஜநகனான ருத்ரனுடையவென்றபடி. துன்பம்- ப்ரஹ்மஹத்யாது:க்கத்தை, துன்பம்- து:க்கம், துடைத்த- நிஶ்ஶேஷமாகப்போக்கினவரான, கோவிந்தன்- கோவிந்தனை, மா: விந்ததீதி கோவிந்த:, பூர்ணகாமத்வமுமுண்டு. பசுக்களுக்குங்கூட ஸுலபனான க்ருஷ்ணனையென்றபடி. நாமும்போய் நணுகவேண்டும். நாமுமங்கேபோயடிமைசெய்யவேணும், நணுகுகை- கிட்டுகை, அடிமைசெய்கையென்றபடி. ।அசு।

துடைத்த- ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய து:க்கங்களை துடைத்தவனான, ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு ஸஹாயனானவனென்றபடி. கோவிந்தனார்- கோக்களை ரக்ஷிக்கையாலே திர்யக்குகளுக்குங்கூட ஸுலபனான, பூர்ணகாமனென்றபடி. ஏகாரம் வாக்யாலங்காரம். உலகு- லோகங்களையும், உயிர்- சேதநாதிகளான ப்ராணிகளையும், தேவும்- தேவஜாதியையும், மற்றும்- மற்றுமுள்ள ப்ருதிவ்யாதிஸகலபதார்த்தங்களையும், படைத்த- ஸ்ருஷ்டித்தவனான, எம்- அஸ்மத் ஸ்வாமியான, ஸ்ரீயப்பதியானவனென்றபடி. பரமமூர்த்தி- ஸர்வாதிகஸ்வாமியான, மூர்த்திமயமானவகம், பாம்பணை- நாகஶயநத்திலே, பள்ளிகொண்டான்- கண்வளர்ந்தருளுகிற ஸ்ரீபத்மநாபனுடைய, இதற்கு அனந்தபுரத்தோடே யந்வயம். மடைத்தலை- மடைகளுடைய ப்ரவேஶதேஶத்திலே, மடை- கேதாரத்வாரஜலப்ரவேஶமார்க்கம், வாளை- மத்ஸ்யங்கள், பாயும்- பாய்கிற, ஜலஸம்ருத்திஜநிதஹர்ஷாதிஶயத்தாலே உத்பதநம் பண்ணுகிறவென்றபடி. வயல்- கழனிகளை, அணி- அலங்காரமாகவுடைத்தான, அனந்தபுரம்- திருவனந்தபுரத்தில், கடைத்தலை- தலைக்கடையிலே, வெளித்திருமுற்றத்திலேயென்றபடி. சீய்க்கப்பெற்றால்- திருவலகு திருப்பணிசெய்யப்பெற்றால், சீய்க்கை- ஸம்மார்ஜநம்பண்ணுகை, இது உபலக்ஷணம், ஸம்மார்ஜநாதிஸேவாகைங்கர்யங்களைப் பண்ணப்பெற்றாலென்றபடி. கடுவினை- கடினமான து:க்கத்தை, வினைஶப்தமிங்கே லக்ஷணயா து:க்கபரம், ப்ராப்திப்ரதிபந்தகமான து:க்கத்தையென்றபடி. களையலாம்- நிஶ்ஶேஷமாகப்போக்கலாம், ப்ரார்த்தித்திலுண்டாகக்கடவ கைங்கர்யமெல்லாமிங்கேயுண்டாமென்றபடி. ।எ।

கடுவினை- கடினமான கர்மத்தை, ப்ராப்திப்ரதிபந்தகமான கர்மத்தையென்றபடி. களையலாகும்- நிஶ்ஶேஷமாகப்போக்கலாம், நாம்சொல்லுகிறத்தைச் செய்வீர்கோளாகிலென்று கருத்து. அதெதென்ன? சொல்லுகிறார்மேல். காமனை- ப்ரத்யும்நனை, பயந்த- பெற்றவனான, ஸௌந்தர்யலாவண்யாதிகளாலே அதிஶயிதனான ப்ரத்யும்நனுக்குங்கூட உத்பாதகனாகையாலே நிரவதிகஸௌந்தர்யாதி நிதியானவென்றபடி. காளை- நித்யயுவாவான, காளையென்று யுவாவுக்குப்பேர், காமனைப்பெற்றிருந்தாலும் "ப்ரஸவாதநுபலவயஸம்"

மூ—தூ (ம)ப நல்விரைமலர்கள் துவளறவாய்ந்துகொண்டு* வாமனனடிக்கென்றேத்த மாய்ந்தறும்வினைகடாமே ॥
மாய்ந்தறும்வினைகடாமேமா தவாவென்னநாளும்* ஏய்ந்தபொன் மதிளனந்தபுரநகரெந்தைக்கென்று*
சாந்தொடுவிளக்குந்தூபந்தாமரைமலர்கணல்ல* ஆய்ந்துகொண்டேத்தவல்லாரந்தமில்புகழினாரே* ௰॥

---

ஆ—உங்களுடைய து:க்கங்களெல்லாம் தானேபோம், ஆனபின்பு அடிமைசெய்கைக்கு வகாரணமான விப்ர
க்ருதி முடிவதற்குமுன்னே யிப்போதே சென்றடிமைசெய்யுங்கோள், நாமுமக்கறியச்சொன்னோமென்கிறார். ॥௯॥
(மாய்ந்தறும்) அவன்திருநாமங்களிலே பேதேனுமொருதிருநாமத்தைச்சொல்ல அடிமைசெய்கைக்கு
ப்ரதிபந்தகங்களெல்லாம் தானேபோமென்று சொல்லிமுடித்து திருவனந்தபுரத்திலே போயெம்பெருமா
னுக்கடிமைசெய்யும் ஸமார்த்தர்களாரோதான், என்றுகொண்டு அவர்களைக்கொண்டாடுகிறார். ॥௰॥
(அந்தமில) ஸ்ரீபக்தர்களுக்கு ஸ்ரீயபதிகள் ஸௌஹார்த்தமாப்போலே திருநாட்டிலுள்ளாருக்கும்

---

இ—கைக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உங்களுடையவித்யாதியால) ப்ரதமபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்
செய்கிறார் (ஆனபின்பித்யாதியால்) முடிவதற்குமுன்னே யென்கிறவிதால கீழ்த் திருவனந்தபுரத்திலே போ
யடிமைசெய்யுங்கோள் என்றவரிப்பாட்டிலே ஸ்பஷ்டமாகப்போய்ச் செய்யுங்கோளென்கிறாரென்று ஸம்மதி
ஸூசிதமிதி. ப்ரதமபாதத்தில் ஸாதாம்ர்யமருளிச்செய்கிறார் (நாமுமக்கித்யாதியால) ॥௯॥

✱ பத்தாம்பாட்டு. ✱

ப்ரதமபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவன்திருநாமங்களிலேயித்யாதியால்) சொல்லிமு
டித்தெனகிறவிதால் கீழ்ச்சொன்னவர்த்தங்களுக்கு எல்லாமுபஸம்ஹாரமிப்பாட்டென்று ஸம்மதியும்ஸூசி
தமிதி. முடித்துஎன்கிறதற்கு கொண்டாடுகிறாரென்கிறத்தோடே யந்வயம். மேல்பாதத்வயத்துக்குத் தாத்
பர்யமருளிச்செய்கிறார் (திருவனந்தபுரத்திலேயித்யாதியால்) ॥௰॥

✱ நிகமனம். ✱

உத்தரார்த்தத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸ்ரீபக்தர்களுக்கித்யாதியால்) அமரர்களில் பைந்தொடி

---

ஶ—மாய்ந்து- நசித்து, அறும்- அற்றுப்போம், நிரவஶேஷமாய்விடுமென்றபடி. தானே என்கிறவிதால் புழுக்
குடிக்கணேப்திருமாப்போலே ஸ்வயம்ப்ரயோஜநமாக கைங்கர்யரஸத்திலே க்ஷபிக்கவே து:க்கங்கள்
தன்னடையேபோமென்றபடி. ஆகலால் அங்கேபோ யடிமைசெய்யுங்கோளென்றபடி. நாமுமக்கறியச் சொன்
னனுள்களும் 'வைற்றனுள்வரையெல்லேதுறிகிச்சென்று' என்று பூர்வார்த்தம் நமுங்களுக்குத்தெரியச்சொன்ன
ஶரீரஸவஸாநனுள்களும், நணிய- கிட்டினவையாக, நணியவை- கிட்டினவை, ஆன- ஆய்த்தின, ஆதலாலீ
ண்டப்போ யடிமைசெய்யுங்கோளென்று கருத்து. ப்ரதமபாதாதிகளிலே மகாரம் த்விதீயாக்ஷரமாயிருக்க
த்ருதீயபாதத்திலே தூபனல்விரையென்று பகாரம் த்விதீயாக்ஷரமாயிருந்தாலு மிதுவும்ஓஷ்ட்யமாகையாலே
வர்ணாநுப்ராஸாலங்காரத்துக்குக் குறையில்லை. தூமனல்விரையென்று இப்படியுமொருபாடமுண்டு என்று
ரையில நிர்வாஹம். இப்பக்ஷத்தில் தூபஸஹபாடமான தூமஸஹமிங்கே தூபவாசம். ॥௯॥
மாதவாவென்ன- ஸ்ரீயவனென்கிறதிருநாமத்தைச்சொல்லவே, வினைகள்- கர்மங்கள், கைங்கர்யஸு
ப்ரதிபந்தககர்மங்களென்றபடி. தானே- ஸ்வயமேவ, மாய்ந்து- நசித்து, அறும்- அற்றுப்போம், நிரவ
ஶேஷமாய்விடுமென்றபடி. நாளும்- ஸர்வகாலமும், ஏய்ந்த- அநுரூபமான, பொன்மதிள்- கநகமய
ப்ராகாரத்தையுடைத்தான, அனந்தபுரநகர்- திருவனந்தபுரமென்கிற திவ்யநகரத்தில், எந்தைக்கென்று-
ஸ்வாமிக்கென்றுஸங்கல்பித்து, இதுக்கு ஆய்ந்துகொண்டு என்கிறத்தோடே யந்வயம். சாந்தொடு- சந்தனத்
தோடேகூட, விளக்கும்- தீபத்தையும், தூபம்- தூபத்தையும், தாமரைமலர்கள்- தாமரைப்பூக்க
ளையும், நல்ல- நன்றாக, ஸமஸ்தகத்ருஷ்டிகளாகிற தோஷமில்லாமலென்றபடி. ஆய்ந்துகொண்டு- கெ
டுகீடாதிகளில்லாதபடி ஶோதநபூர்வகமாக ஸம்பாதித்துக்கொண்டு, ஏத்தவல்லார்- தாங்கள் ஸம்பாதி
த்த தூபாதிகளை பகவத்ஸமர்ப்பித்தருளின ரீதியாலே யுவனிஸாதிக்கவல்லார்கள், அந்தமில்புகழினார்-
அந்தமில்லாதகீர்த்தியையுடையவர்கள், புகழுடையவர்- புகழினார், நிரவதிகஶேஷத்வகீர்த்திமான்களென்றபடி ॥

ஈ—கா— ஊரும்புட்கொடியுமஃதே- பெரியதிருவடியை த்வஜமாகவுடையனானவனாகையாலும். (வாஸஸ்தானம்) வாசமேகமழுஞ்சோலை வயலணியனந்தபுரமித்யாதி- அணித்தான திருவனந்தபுரத்திலே வர்த்திக்கையாலும் (வர்த்தமானம்) அண்ணலார்கமலபாதம்- எல்லார்க்கும்ஸ்வாமியாகையாலும், (ஸர்வவிஷயாஸாதாரணஸம்பந்தம்) அமரராய்த்திரிகின்றார்கட்காதிசேரனந்தபுரத்து- ப்ரஹ்மாதிகளான தேவர்களுக்கும் நிர்வாஹகனாகையாலும், (ஸர்வாதிஸ்ருஷ்டிகர்த்ருத்வம்) துடைத்தகோவிந்தனாரே யுலகுயிர்தேவும் மற்றும்படைத்த- ஸசராசரஜாதத்தோடேகூட விந்த லோகங்களையெல்லாமுண்டாக்கி ரக்ஷிக்குமவனாகையாலும், (ஸர்வஜநஸம்ரக்ஷணம்) படமுடையரவில்பள்ளிபயின்றவன்- தன்னோட்டைஸம்பந்தத்தாலே விகஸிதபணங்களையுடையனான திருவனந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளுகையாலும், ஸம்பந்தத்தாலே வாமனனடிக்கென்றேத்த மாய்ந்தறும்வினைகள்தாமே- மாதவாவென்ன என்று மேலிரண்டுபாட்டிற்சொல்லப்படுகிற வாமநகேசவாதிகள் ஸம்க்ருஹீதங்கள். இப்படிகளாலே திருவனந்தபுரத்தெம்பெருமான் தன்னையாஶ்ரயித்த விச்வேதநருக்கு போம்வழியில்வரும் க்லேசங்களைப்போக்காநிற்கிறானென்று "கெடுமிடராய" என்கிறதசகத்திலே காரிகைமாக அருளிச்செய்தாரென்கிறார். ௧௩௦௫

ஸ்ரீமதேரம்யஜாமாத்ருமுநயேநம:.

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

பத்தாம்பத்தில இரண்டாந்திருவாய்மொழிமுற்றிற்று.

# மூன்றாந்திருவாய்மொழி.

ஆ—(வேய்மருதோளிணை) இப்படியெம்பெருமானோடுகலந்து பரிமாறிச்செல்லாநிற்கச்செய்தே இப்ப்ரக்ருதியிலே தாமிருந்தவிருப்பைக்கண்டு 'இப்ப்ரக்ருதிஸம்பந்தம் காரணமாக வெம்பெருமான்விடிலோ' என்றுள்ள அதிசங்கையாலே பயப்படுகிறார், வண்டுவரைப்பெருமாளோடே கலந்துபரிமாறச்செய்தே பசுமேய்க்கப்போங்காலம் ப்ராப்தமானவாறே 'இவனினிப்பசுமேய்க்கப்போகிலோ' என்றுள்ள அதிசங்கையினாலே அக்கோபிமாரவஸ்தைகளானப்போலே பயப்படுவராய் அவர்களுடையபாசுரத்தாலே பலற்றுகிறார், திருவாய்

மூன்றாந்திருவாய்மொழி.

இ— இப்படி ஸந்தோஷராய்க்கொண்டு தத்ர்வ்யங்களி லெம்பெருமானை யநுபவியாநிற்கிற வாழ்வார் இத்திருவாய்மொழியிலே விரஹிதகோபிகாவிலாபோக்திகளைப் பேசிக்கொண் டவஸந்நராகை யஸங்கதமன்றோவென்ன? வ்யதிரேகிக்கிறார் (இப்படியித்யாதியால்) கண்டுஎன்கிறதற்கு அவஸந்நராகிறாரென்கிறதோடே யந்வயம். 'தடமுடைவயலனந்தபுரநகர்புகுதுமின்றே' என்று தாமுபதேசித்தபடியே ஸ்ரீவைஷ்ணவர்களும் தாமுமாகத் திருவனந்தபுரத்துக்குப்போக வுத்யோகித்து தத்க்ஷணத்திலே போகப்பெறாமையாலே இதற்கு ப்ரதிபந்தகமேதென்று விமர்சிக்கப்புக்கு தாமிந்தப்ரக்ருதியிலே யிருந்தவிருப்பைக் கண்டாரென்றுகருத்து. எம்பெருமான் விடிலோஎன்றது- இந்தப்ரக்ருதியில் இன்னமும் நம்மைவைத்தாலோவென்றபடி. இப்படி அநுபவம் நடவாநிற்கச்செய்தே அதிசங்காத்தாலே அவஸந்நராகிறாராகில் வண்டுவரைப்பெருமாளோடே ஸம்ஶ்லேஷியாநிற்கச்செய்தே ஏதேனுமோரதிசங்கையினாலே அவஸந்நையான பிராட்டியினுடைய பாசுரத்தைப்பேசுகை யுசிதமாமத்தைபோக்கி "வேய்மருதோளிணைமெலியுமாலோ" இத்யாதியாலே விரஹிணியாய்த் தன்னுடைய ஸம்கடஸ்வதிகளைச்சொல்லி விலபிக்கிறவளுடைய பாசுரங்களைப்பேசுகை யுசிதமோவென்ன? வ்யதிரேகிக்கிறார் (வண்டுவரைப்பெருமாளோடேயித்யாதி) இப்படி கோபிமார்களவனோடேகூட விருக்கச்செய்தே அதிசங்காத்தாலே பயப்பட்டார்களாகில் வேய்மருதோளிணையித்யாதியாலே தங்களை விரஹிணிகளாகச் சொல்லக்கூடுமோவென்ன? வ்யதிரேகிக்கிறார் (திருவாய்ப்பாடியிலித்யாதியால்) வருமளவில்லென்கிறதற்கு கொண்டுஎன்கிறத்தோடே யந்வயம். போனானாகக்கொண்டுஎன்றது- போனானாக ஸம்பாவித்துஎன்றபடி. அதாவது:— இனியிவன் பசுமேய்க்கப்போகிலோ

மூ— வேய்மருதோளிணைமெலியுமாலோ மெலிவுமென்றனிமையும்யாதுநோக்காக்* காமருகுயில்களும் கூவுமாலோ கணமயிலவைகலந்தாலுமாலோ*

---

ஆ— பாடியிற் பெண்பிள்ளைகள் வண்டுவரைப்பெருமாளோடேகூட வெழுந்தருளியிருக்கச்செய்தே அவன் பசுமேய்க்கப்போங்காலம் வருமளவில் அவன்போனானாகக்கொண்டு பிரிந்தார்படும் வ்யஸநமெல்லாம்பட்டு வ்யஸநத்தையும் பிரிந்தவவன்கொடுமையையும் தோழிமாருக்குச்சொல்லுமாப்போலே அவன்றன்னைக்குறித்துச் சொல்லுகிறாள், உன்னைப்பிரிகையாலே யென்னுடையதோள்கள் மெலியாநின்றன, இவற்றின்மெலிவு மென்தனிமையையு மொன்றும்பாராதே இக்குயில்களானவை உன்திருநாமங்களைக் கூவாநின்றன, அதின்மேலே மயில்களும்

---

இ—வென்று தங்களுக்குண்டான வத்யந்தஸம்ஶ்லேஷத்தாலே அவன்போனதாகவே தங்களுக்குத் தோற்றுகையாலே அவன்போனானாக ஹ்ருதித்துஎன்றபடி. இத்தால் ஸ்வாநுஸந்தாநஜநகமென்கிற ஸம்வத்ஸரமித்திருவாய்மொழிக்கு ப்ருதிவாத்யமென்று ஸூசிதமாயிற்று. இப்படியவன் பசுமேய்க்கப்போனானாக ஹ்ருதித்தார்களாகில் “தாமரைக்கண்கள்கொண்டீர்தியாலோ” ஐத்யாதியாலே அவனைநோக்கி வாக்யம் சொல்லக்கூடுமோவென்ன? வததரிப்பிக்கிறார் (தோழிமார்க்கித்யாதி) “தாம்தம்மைக்கொண்டகல்தல் தகவன்றென்றுரையீரே” என்று தாம்போகிறவர் தம்மையிங்கேவைத்தனரோ போகக்கடவதென்று கலங்கும் ப்ரக்ருதிகளான விவர்களுக்கிப்போது அவன்போனானாக நிரூபமிருக்கச்செய்தேயும் அவன் ஸந்நிஹிதனாகவும் தோற்றக்கூடுகையாலும் லோகத்திலும் ஸ்வப்நத்தில் த்ருஷ்டவிஷயத்தைவேறிட்டுப்போலே யிதுவும் ப்ரேமகல்யம நிபந்தநமாக யிப்படியும் ஒருத்தவிஷயவிஶேஷ முண்டாகையாலும் அவனைநோக்கி வாக்யம்சொல்லக் கூடுமென்றுகருத்து. *

முதற்பாட்டு.

வேய்மருவித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உன்னைவித்யாதியால்) மெலிவுமித்யாதியையுரைக்கிறார் (இவைத்தனித்யாதியால்) காமருவித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இக்குயில்களித்யாதியால்) கோகிலமயூராதிகளான வுத்தீபகங்களைச் சொல்லியலற்றுகிறவிடத்திலே உத்தீபகமென்ன ப்ரஸித்தமல்லாத

---

ஶ— வேய்மரு- வேயோடேமருவுமவையான, வேய்- மூங்கில், மூங்கிலுக்குஸத்ருஶங்களானவென்றபடி. வர்த்தநவ்ருத்தாயதங்களாகையாலே வ்ருத்தாகாரஸம்ஸ்தாநஸத்ருஶங்களான வென்கை. ஸம்ஶ்லேஷதஶையிலே நீயிப்படிக்கொண்டாடிக்கொண்டு ஸுகாநுபவிக்குமவையான வென்றுகருத்து. தோளிணை- என்னுடைய யுகளமானது, ஸௌந்தர்யமுண்டான சேர்த்திபழகைசொல்லி நீ வாய்வெருவுமபடி ஸம்பந்தமாயிருக்கிற வென்தோள்களானவை யென்றபடி. மெலியும்- ஸுவிரஹத்தாலே க்ருஶமாகாநின்றது, ஆல் ஓ- ஹா, கஷ்டம், அவ்யயபதத்தால் விஷாதாதிஶயம் ஸூசிதம் என் என்கிறவசநத்தை காகாக்ஷிந்யாயேந வசநவேத்தாங்களிலே யோஜிப்பது. என்மெலிவும்- காலஸாத்யஸாதகமோஹாதநமான வென்னுடைய காஶ்யத்தையும், என்தனிமையையும்- விரஹஸஹிஷ்ணுபல்லாத வென்னுடைய விரஹத்தையும், யாதும்- ஒன்றையும், நோக்கா- பார்க்கிறனவில்லை, விரஹிணியாய் அத்தாலே க்ருஶையாயிருக்கிறவிவளுக்கு நம்முடைய த்வநிகள் பாதகங்களென்று விமர்ஶிக்கிறனவில்லையென்றபடி. குயில்களுமென்றதை காகாக்ஷிந்யாயேந விங்குமயித்து இவ்வாக்யத்துக்கு ஶேஷபூரணம்பண்ணிக்கொள்வது, காமருகுயில்களும்- அழகிய கோகிலங்களும், காமருஎன்று அழகியது, யதா- காவென்று- உத்யாநமாய், உத்யாநத்திலே மருவியிருக்கிற கோகிலங்களுமென்னுமாம். கபவா- காமருவுதல்- ஸாதநமாய் பரஸ்பரஸம்ஶ்லேஷஸாபேக்ஷ த்ரவ்யங்களான கோகிலங்களுமென்றபடி. ஸஹஜத்தால் நீசரமன்யிக்கே யிவையும் பாதகங்களாகாநின்றதென்றபடி. கூவும்- கூவாநின்றன, ஆலோ- ஹா, கஷ்டம், என்தஶையைக்கண்டாகிலிவைத்துக்கு வாயைப்புதைக்கவேண்டாவோ என்றுகருத்து. அவைகணமயிலென்று மாறியயோஜிப்பது. அந்தகணமயிலானவை பரஸ்பரஸம்ஶ்லேஷரஸத்தாலே மனம்மணமாயிருக்கிறவத்த ஸமூஹங்களானவையென்றபடி. “ஸமூஹ ஸஹ்ருதநம் ரக்ஷணஸாதநஸாத்யம்” என்கிறகணக்கிலே பரஸ்பரஸம்ஶ்லேஷரஸஸாதிகங்களானவைத்தைத்தான் கண்டுகொண்டு பாரககமாட்டாமையாலே ஸ்வபாவத்தைமாறிவைத்து அவையென்று பரோக்ஷமாக நிர்தேஶிக்கிறாள். கலந்து- பரஸ்பரஸ்பர்ஶியாலே ஸம்ஶ்லேஷித்து, ஆலும்- ஸம்ஶ்லேஷித்தஹர்ஷத்தாலே ஸஹ்ருதம் ந்ருத்தம்பண்ணுகின்றன, ஆலுகை- நர்த்தநம்பண்ணுகை, ஆலோ- ஹா கஷ்டம், இவளுடைய

மூ— வாமருவிநிரைமேய்க்கநீபோக்கொருபகலாயிரமூழியாலோ* தாமரைக்கண்கள்கொண்டீர்தியாலோ
தகவிலைதகவிலையேநீகண்ணா* ||உ||
தகவிலைதகவிலையேநீகண்ணா தடமுலைபுணர்தொறும்புணர்ச்சிக்காராச்*

ஆ— கலந்தாலாகின்றன. ஒருபகல்பிரியுமளவில் இங்ஙனேபடவேண்டுமோவென்னில்? நீ பசுமேய்க்கப்போனவாறே அவ்வொருபகற்றானாயிரமூழியாகாநிற்கும், அதின்மேலே நீயுமுன்னுடைய கண்களாலேயென்னையீராநின்றாய், உன்னைப்பிரிந்து நானிங்ஙனே படாநிற்கச்செய்தே எங்களைப்பிரிந்து நீயிருக்கவல்லையாவதே நீயிருந்தவிடத்திலுமில்லையாகாதேக்ருபை, லோகத்திலே சிறிதுக்ருபையுண்டாகிலு முனபக்கலிலொரு க்ருபையில்லையென்கிறாள். ||உ||

(தகவிலை) ஸம்ஶ்லேஷஜநிதமான நிரவதிகப்ரீதி செல்லாநிற்கச்செய்தே யிப்படிபடுகிறதென்னென்ன?

இ— பகலைச்சொல்லுகை யஸம்கதமன்றோவென்ன வவதாரிப்பிக்கிறார் (ஒருபகலித்யாதியால்) தகவிலையென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உன்னைப்பிரிந்தித்யாதியால) நீயேதகவிலையென்றநுபபித்துத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (லோகத்திலேசிறிதுவித்யாதியால்) ||உ||

✳ இரண்டாம்பாட்டு. ✳

வேய்மருதோளிணைமெலியுமாலோ என்று விரஹஜநிதகார்ஶ்யத்தைச்சொன்னபோதே தனக்கு ஸம்ஶ்லேஷரஸவிச்சேதம் ஸௌகுமார்யஸஹமாயிருக்க தடமுலையென்றுதுடங்கி சுகவெள்ளம் என்றிப்பாட்டிலே யத்தைச்சொல்லுவானேனென்ன வவதாரிப்பிக்கிறார் (ஸம்ஶ்லேஷேத்யாதியால்) தடமுலையித்யாதி சுகவெள்ள

ஶ— விரஹதஶையிலே நாம் ஸாவஸரஸம்ஶ்லேஷித்திருக்கையும் ந்ருத்தம்பண்ணுகையும் ஸ்வபாவமென்றறிந்து மீளுகிறனவில்லையென்றுகருத்து. மருவினஆநிரையென்றந்வயிப்பது. மரு- உன்னோடேமருவினவையான, 'மேய்ந்தபுல்லும்கடைவாய்வழிசோர' என்கிறபடியே உன்பக்கலதிவ்யாஸக்திகளான வென்றபடி. இன- ஸம்ஶ்லிஷ்டங்களான, ஶ்ரீநாதிரக்ஷணத்தாலே த்ருப்தைபாகாதவுன்னுடைய க்ருபைக்கு ஸதா விஷயமாம்படி யஸம்க்யங்களானவென்றபடி. ஆநிரை- ஆக்களுடையநிரையை, ஆஎன்று பசுக்கள், நிரை- வரிசை, மேய்க்க- ஸாரணம்பண்ணுகைக்காக, நீபோக்கொருபகல்- நீபோகிறஒருஅஹஸ்ஸானது, ஆயிரமூழி- ஸஹஸ்ரகல்பமாகாநின்றது, ஆலோ- ஹாகஷ்டம், எங்களைப்பிரிந்து உனக்கநேகக்ஷணமாயிருக்கிற பகலனங்களுக்கு ஶதகல்பமாவதென்றுகருத்து. தாமரைக்கண்கள்கொண்டு- தாமரஸஸத்ருஶங்களான வுன்னுடைய திருக்கண்களைக்கொண்டு, ஈர்தி- நீஈராநிற்புதி, நீபசுமேய்க்கப்போனு லென்னெஞ்சைவிட்டுப் போகாதேநிற்கிற வுன்னுடையகண்ணழகாலே யப்பகலெல்லாம் மென்னைநீ வீயிபாநின்றாயென்றபடி. ஆல் ஓ- ஹா கஷ்டம், நீபசுமேய்க்கப்போனு லுன்கண்ணழகை யென்னெஞ்சிலேவைத்துப் போகவேணுமோ வென்றுகருத்து. தகவிலை- க்ருபையில்லை, தகவு- க்ருபை, நீயெங்களைப்பிரிந்து பரிகலாவுதே நீயிருந்தவிடத்திலும் க்ருபையில்லையென்றபடி. கண்ணா- க்ருஷ்ண, நீயேதகவிலை- நீயேக்ருபையுடையையல்லை, அவதாரணத்தால் லோகத்திலேசிறிது க்ருபையுண்டானாலும் நீயொருவனுமே க்ருபையுடையவனல்லையென்றபடி. தகவிலாதவன்- தகவிலன், இச்ஶப்தத்தாலே ஸம்போதநத்தைச்சொலலும்போது தகவிலையென்றாரூபமாயிருக்கும். ||உ||

கண்ணா- பெண்பிறந்தார்க்கு ஸுலபனென்று ப்ரஸித்தனான க்ருஷ்ண?, நீ- பெண்களுக்கு ஸம்மாயிருக்கும் ஸ்வபாவனென்று ப்ரஸித்தனான நீ, தகவிலைதகவிலையே- க்ருபையுடையையல்லை, ஆவ்ருத்தியால் ஒருப்ரகாரத்தாலும் க்ருபையுடையையல்லையென்றபடி. அவதாரணத்தால் இது நிஶ்சிதமென்றபடி. தடமுலை- விஶாலங்களான ஸ்தநங்களுடைய, தடம்- விஶாலம், ஸம்ஶ்லேஷதஶையிலே விஶாலத்வம்ஸதாதி ஸௌகுமார்யங்களைச் சொலலிச்சொல்லி நீ யநுபவிக்கும்படியானவென் ஸ்தநங்களுடைய வென்றபடி. புணர்தொறும்- ஸம்ஶ்லேஷம்பண்ணுந்தோறும், புணர்- ஸம்ஶ்லேஷம், நீ ஸம்ஶ்லேஷம்பண்ணும் க்ஷணந்தோறும் என்றபடி. புணர்ச்சிக்காரா- ஸம்ஶ்லேஷத்துக்கடங்காததான, புணர்ச்சி- ஸம்ஶ்லேஷம், ஸம்ஶ்லேஷத்தினளவன்றிக்கே பரிபூர்ணமான வென்றபடி. அதாவது ஸம்ஶ்லேஷகாலத்தளவாயிருக்கையன்றிக்கே ஸர்வகாலத்திலுமநுவர்த்திக்கும் ஸவாஸநமே ஸம்பந்தமான

மூ— சுகவெள்ளம்விசும்பிறந்தறிவைமூழ்கச்சூழ்ந்ததுகனவெனநீங்கியாங்கே* அகவுயிரகமகந்தோறுமுள் புக்காவிபின்பரமல்லவேட்கையந்தோ* மிகமிகவினியுன்னைப்பிரிவையாமால் வீவநின்பசுநிரைமேய்க்கப் போகமே* ।௨॥

வீவநின்பசுநிரைமேய்க்கப்போக்குவெவ்வுயிர்கொண்டெனதாவிவேமால்*

ஆ— அந்தநிரதிஶயஸம்ஶ்லேஷமெல்லாம ஸ்வப்நகல்பமாய் உன்பக்கலிலுள்ள நிரதிஶயப்ரேமத்தினாலே பசுமேய்க்கப்போக்குக்காரணமாக நீபிரிகிறாயென்று நான்முடியக்கிடாய்ப்புகுகிறதென்கிறாள். ।௨॥

(வீவநின், உன்பசுமேய்க்கப்போக்குக்காரணமாக நான்முடிவன், விரஹாக்நியாலே யென்னுத்தா உஷ்ணஸந

இ— விக்ருஜததுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அந்தநிரதிஶயேத்யாதியால்) த்ருதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உன்பக்கலிலுள்ளவித்யாதியால) ப்ரேமத்தினாலேஎன்றதற்கு முடியக்கிடாய்ப்புகுகிற தென்கிறத்தோடேயந்வயம். உன்னைப்பிரிவையாம நின்பசுநிரைமேய்க்கபோக்கு என்றந்வயிப்பது. இதற்குமேலி தாத்பர்யமருளிசசெய்கிறார் (பசுமேய்க்கவித்யாதியால்) வீவன்என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நான்முடிபவித்யாதியால்) ।௨॥

*மூன்றாம்பாட்டு.*

துணையிலேயென்கிறத்தோடு ஸகீவ்யாஹாரத்தால் யானிருந்துஎன்கிறதற்குப் ஸஹித்வபாவத்தை

ப— ஸூழும் ஸந்தவதிக்கும்படி யதிப்ரவ்ருத்தமான வென்கை. சுகவெள்ளம்- ஸுகஸாகரமானது, வெள்ளம்- ஸாகரம், விசும்பிறந்து- ஆகாஶத்தையதிக்ரமித்துப்போய், இறக்கை- த்யஜிக்கையாயிங்கு அதிக்ரமணத் தைச்சொல்லுகிறது, நிரவதிகமாய் என்றபடி. அறிவை- என்னுடைய ஜ்ஞானத்தை, இதற்கு சூழ்ந்து என்கிறத்தோடேயந்வயம். மூழ்க- மூழ்க்கும்படி, என்னுடையவறிவெல்லாம்போய் நான் மோஹிக்கையாம் படியென்கை. சூழ்ந்து- வ்யாபித்து, அது- அந்த ஸுகஸாகரமானது, கனவென- ஸ்வப்நமென்னும்படி, நீங்கி- நிவ்ருத்தமாய்ப்போய், அதுகனவெனநீங்கி என்கிறவிடத்தில் சூழ்ந்து என்கிற க்த்வாப்ரத்யயத்தாலே அநந்தரம்தோற்றுகையால் ஸுகாநுபவமானவப்போதே நிவ்ருத்தமாய்ப்போய்விட்டதென்று ஶோகம் தோற்றுகிறது. நீ பசுமேய்க்கப்போகவுத்யோகித்தவாறே என்றுகருத்து. ஆங்கே- அவ்வவஸ்தையிலே இது க்கு உள்புக்கு என்கிறத்தோடேயந்வயம். வேழ்க்கை- ஆகிஞ்சந்யமானது, உத்தரோத்தர ஸம்ஶ்லேஷாபிநி வேஶமான தென்றபடி. அகவுயிர்- அந்தரங்கமான ப்ராணனுடைய, அகமகந்தோறும்- அந்தரங்கப்ரதே ஶங்கள்தோறும், ப்ராணவ்யாபித்திருக்கிற ஶரீராந்த: ப்ரதேஶங்களெங்குமென்று பர்யவஸாநம். உள் புக்கு- உள்ளேப்ரவேஶித்து, ஆவிபின்பரமல்ல- ஆத்மாவின்பாரமன்று, அதற்காஶ்ரயமான விஷ்வாத்ம வால்பொறுக்க முடிகிறதில்லையென்றபடி அந்தோ- அய்யோ! விரஹவ்யஸநமுனக்கு நானுபதேஶிக்க வேண்டுவதே ஸம்ஶ்லேஷரஸமிருவருக்காயிருக்க விஶ்லேஷதுக்கவமெனக்கொருத்திக்குமேயாவதே என்று கருத்து. இனி- இதின்மேலே, இத்தனை க்லேஶாநுபவமொக்களுக்குமேலே யென்றபடி. மிகமிக- மேலமே லென, உத்தரோத்தரமாகவென்றபடி. உன்னைப்பிரிவையாம்- உன்னை விஶ்லேஷிக்கையுண்டாம்படியான, பிரி வை என்கிறவிடத்தில் ஐகாரம் வாக்யாலங்காரம். பிரிவு- விஶ்லேஷம, நின்பசுநிரைமேய்க்கப்போக்கு- உன்னுடைய கோஸம்ரக்ஷணார்த்தமான கமநத்தாலே, போக்கென்று த்ருதீயாவிபக்தியர்த்தம். வீவன்- நான்முடிவன், வீவனென்கிறவிடத்தில் னகாரஸ்த்ருநகாரமொவ்வொரவ:. வீவுதல்- முடிதல், ஐகாந்திக ஶ்லேஷஸ்வபாவானவுன்னுடைய கமநமானது யென்னை முடித்துவிடுமென்று பர்யவஸாநம். ஆதலால் காலு ருபத்திலும் எனக்கு ஸுகமுமும் காணேனென்றுகருத்து. ஆல்- ஹா! ।௨॥

நின்பசுநிரைமேய்க்கப்போக்கு- உன்னுடையகோஸம்ரக்ஷணார்த்தகமநத்தாலே, த்ருதீயாவிபக் த்யர்த்தம், வீவன்- நான்முடிவன், பசுமேய்க்கை எனக்குஸ்வயமன்றோ அதெனக்குதவிரப்போமோ என் றிராதே அதுஉனக்கு ஸ்வயமாய்க்கிடாய் ஸஹிக்கப்புகுகிறதென்றுகருத்து. அதெங்ஙனேயென்னவத்தை யுபபாதிக்கிறாள்மேல், எனதாவி- என்னாத்மாவானது, உன்னைப்போலே என்றிராதேகிடாய் யென்னையுமெ ன்றபடி. வெவ்வுயிர்க்கொண்டு- உஷ்ணமானநிஶ்வாஸத்தையுடைத்தாய், வெவ்வியது- உஷ்ணமானது, உயிர்- நிஶ்வாஸம், விரஹதுக்கத்தாலே உஷ்ணமாகநிஶ்வஸித்துஎன்றபடி. வேம்- வேவாநின்றது, நிஶ்வாஸவாதவே ஷங்களாலே யுலர்ந்து விரஹாக்நியாலே தஹ்யமாநமாகாநின்றதென்றபடி. ஆல்- ஹா, துணை- இத்தஶையிலே

மூ—யாவருந்துணையில்லையானிருந்துன்னஞ்சனமேனியையாட்டங்காணேன்* போவதன்றொருபகனீயகன்றாற்பொருகயற்கண்ணிணைநீருநில்லாச்* சாவதிவ்வாய்க்குலத்தாய்ச்சியோமாய்ப் பிறந்தவித்தொழுத்தையோர்தனிமைதானே* ॥௩॥
தொழுத்தையோந்தனிமையுந்துணைபிரிந்தார் துயரமுநினைகிலை கோவிந்தாவுன்*

ஆ—மாகாநின்றது. பின்னையொருதுணையுமில்லை, உன்வரவுபார்த்துக்கொண்டு நான்தனியேயிருப்பன், என்துணையான உன்னைவரவுகாணேன், நீயகன்றால் யிப்பகலெல்லாம் போவதுஞ்செய்யாது, இக்கண்ணநீரும்நில்லாது, இந்தவொருதலைமாத்திரமான ஸ்நேஹமான்று சாலப்பொல்லாதாகாதேயென்கிறாள். ॥௩॥

இ—அருளிச்செய்கிறார் (உன்வரவி த்யாதியால்) உன்னஞ்சனவி த்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்துணையி த்யாதியால்) தாஸீயவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இந்தவொருதலையி த்யாதியால்) ஒருதலைதாமானவென்றது— உனக்கென்பக்கல் ஸ்நேஹமன்றிக்கே யென்கொருத்திக்குமே யுண்டாயிருக்கிறதானவென்றபடி. சாலப்பொல்லாதுஎன்றது— மிகவும்பொல்லாது என்றபடி. ப்ராணவ்யயஹேதுவாக்கிவிடுமென்கை. இத்தால் கீழ்ப்பாட்டிலே உன்னுடையபசுமேய்க்கப்போக்கில் நான்முடிவனென்றுசொன்னவளிப்பாட்டிலே முடியும்ப்ரகாரத்தை விஸ்தரிக்கிறாளென்று ஸங்கதிசொல்லிற்றாயிற்று. ॥௩॥

ஶ—யெனக்குத்துணையாவார், யாவருமில்லை- ஒருவருமில்லை, துணையானநீ கைவிட்டுப்போனாய், என்வ்யஸனத்தைப்பார்க்கமாட்டாமையாலே தோழிமார் எனக்குமுன்னேமாய்ந்து கிடவாநின்றார்கள், குயில்மயில்துக்கமானவையெனக்கு உள்பகையாய்விட்டதென்றுகருத்து. யானிருந்து- நான்ஜீவித்திருந்து, நீபிரிந்தால் வரக்கடவ மரணத்தைத்தான் க்ஷணத்திலேயடையப்பெற்றேனோ, இன்னமொருக்கால் காணுமோவென்றுநசையாலேயப்போதே முடியப்போகிறதில்லை, க்ஷணந்தோறு முன்னைக்காணுமையாலே வ்யஸநமும் முடிகிறதில்லையென்றுகருத்து. உன்னஞ்சனமேனியை- அஞ்ஜநம்போலே ஸ்நிக்தமான வுன்திருமேனியை, ஆட்டங்காணேன்- ஸஞ்சாரத்தைக்காணேன், ஆட்டம்- ஸஞ்சாரம், கோபீஜநங்களோடே க்ருதஸஹவாஸவ்யாபாரவிசேஷம். உன்னழகியதிருமேனியோடேகூட வென்கண்முன்னேவந்து ஸஞ்சரிக்கக்காணேனென்றபடி. நீயகன்றால்- நீவிஶ்லேஷித்துப்போனால், ஒருபகல்- ஒருஸமயமாதானும், போவதன்று- போகத்தக்கதன்று, முடிகிறதில்லையென்றபடி. பொருகயல்- பொருகிறகயலைப்போலேயிருக்கிற, பொருகை- யுத்தம்பண்ணுகை, ஸம்ஶ்லேஷதசையில் ப்ரஹ்ருஷ்டமாயிருக்கும் கயல்களைப்போலே விரஹவ்யஸநாதிஶயத்தாலே பக்ஷஸ்பந்தங்களாலவென்றபடி. கண்ணிணை- நயநயுகளத்தினுடைய, நீரும்- ஜலமும், நீருமென்கிறவிடத்தில் ஸம்ஶயார்த்தத்தையுமூகாரஸ்யவை. நில்லா- நில்லாது, என்னாலே நிறுத்தமுடியாதென்றபடி. போகிறவுன்னைத்தகைய ஶக்யமானாலும் பெருகிறகண்ணீரைத்தகைய முடிகிறதில்லையென்றுகருத்து. இவ்வாய்க்குலத்து- இந்தகோபகுலத்தில், ஆய்ச்சியோமாய்- இடைச்சிகளாய், ஆய்ச்சியர் இடைச்சியர், இச்ஶப்தத்தாலே தங்களைச்சொல்லிக்கொள்ளும்போது ஆய்ச்சியோமென்று ரூபமாயிருக்கும், பிறந்த- ஜநித்தவர்களான, இத்தொழுத்தையோம்- இந்ததொழுத்தைகளானவெங்களுடைய, தொழுத்தை- கிங்கரீ, இச்ஶப்தத்தாலே தங்களைச்சொல்லிக்கொள்ளும்போது தொழுத்தையோமென்று ரூபமாயிருக்கும், கிங்கரிகளானவிந்த வெங்களுடையவென்றபடி. தனிமைதான்- தனிமையானது, தானென்றுஸ்வரூபகம், ஏகாகித்வமானதென்றபடி. அதாவது:— நீயெங்களையுபேக்ஷித்திருக்கச்செய்தே எங்களுக்குண்டான முன்பக்கவுள்ள வொருதலைக்காமமானது என்கை. சாவது- நஶித்துப்போமது, மிகவும்பொல்லாததுஎன்றபடி. ஏதேனுமொன்றைபொல்லாதது என்றுசொல்லப்புக்கவர்கள் அதுயாழ்த்தது என்று சொல்லுமாப்போலே சாவது என்றுசொல்லுகிறாள். ॥௩॥

தொழுத்தையோம்தனிமையும்- உன்னழகுக்குத்தோற்றுனக்கு கிங்கரிகளான வெங்களுடைய விரஹத்தையும், துணைபிரிந்தார்துயரமும்- எங்களுக்குத்துணையான வுன்னைப்பிரிந்துகிடக்கிற வெங்களுடைய துக்கத்தையும், நினைகிலை- நினைக்கிறாயில்லை, பராமர்சிக்கிறாயில்லையென்றபடி. பிரிகிறவர் நாங்களென்றுமெங்களுக்குவருகிற து:க்கம் உன்னைப்பிரிகையால் வருகிறதென்றும் பராமர்சிக்கிறாயில்லையென்றபடி. அதாவது:— க்ஷணஸம்ஶ்லேஷைக ஜீவிதஸ்வபாவைகளாகையாலே யுன்னைப்பிரிந்தால் நாங்களொருக்ஷணம் ஜீவிக்கலாமோ "த்ருஷ்ட்யா மாயமிதக்ஷணாஞ்சஶ்வதாம்" என்னும்படி நீ நெஞ்சாலேதாஸ்தமாய்ப்பண்ணுகையால் யுன்னைப்பிரிந்தால்வரும் து:க்கமுமயவிலக்ஷணதியிலுந் தானடங்குமோவென்று கருத்து. கோவிந்தா- கோவிந்த,

மூ.— தொழுத்தனிற்பசுக்களையேவிரும்பித்துறந்தெம்மை [விட்டிட்டி]பிட்டவைமேய்க்கப்போதி*பழுத்தநல் அமுதினின்சாற்றுவெள்ளம் பாவியேன்மனமகந்தோறுமுள்புக்* கழுத்தநின்செங்கனிவாயின்கள்வப்பணி மொழிநினைதொறுமாவிவேமால்* ‖௪‖

ஆ.—(தொழுத்தையோம்) அடியோங்கள்தனிமையையும் உன்னைப்பிரிந்து நாங்கள்படுகிற வ்யஸநத்தையுமொ ன்றும்பாராதே உன்னுடைய பசுக்களையேயுகந்து எங்களைத்துறந்துபோகட்டு அவைமேய்க்கப்போகின்ன, உன்னுடையகடாக்ஷமே பாலகமாயிருக்கிற நான் உன்னைப்பிரிந்துபோகையாவதென்' என்றாப்போலே ஸா நுராகமாய் வ்யாஜமாய் அதிமதுரமாயிருப்பன சிலபணிமொழிகளை யருளிச்செய்தருள இவையி ே நினைக்கநினைக்கவென்னை மாய்க்கிறனவென்கிறாள். ‖௪‖

✳ நாலாம்பாட்டு. ✳

இ.— துணைபிரிந்தார்துயரமுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உன்னைப்பிரிந்தித்யாதியால்) எங்க ளைத்துறந்தித்யாதியாலே ஸம்மதியும்ஸூசிதமென்கிற. எங்ஙனேயென்னில்? கீழொருதலைக்காமமென்று தான் சொன்னவர்த்தத்தை யிப்பாட்டிலேயவன் தங்களையுபேக்ஷிக்கிற ப்ரகாரத்தைச்சொல்லி யாவவாதிக்கிறா ளென்று ஸூசிதமாகிறது. அவனுடைய ஸௌந்தர்யலாவண்யாதிக ளநேகங்களிருக்கப் பணிமொழியை விஶேஷித்துச்சொல்லுகிறது எதென்ன? வ்வதரிப்பிக்கிறார் (உன்னுடையகடாக்ஷமேயித்யாதியால்) ஸாநு ராகமாய் வ்யாஜமாய் அதிமதுரமாயென்கிறவித்தாலே த்ருதீயவாதகாத்பர்யம் ஸம்ஸூசிதமாய்த்து. நினைதொறுமித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இவையிறேயித்யாதியால்) ‖௪‖

ப.— இது ஸாபிப்ராயஸம்போதநம், மொவிநாவிஶேஷகம்பண்ணினது மொமொவஜாதிகளிரண்டையும் ரக்ஷிக்கைக்காகவன்றோ? மொஜாதிரக்ஷணார்த்தக்கோ வென்றுகருத்து. உன்- உன்னுடைய, இதுக்கும் பசுக்களோடேயந்வயம். உனக்கு ரக்ஷ்யங்களானவென்றபடி. இதுவும் ஸாபிப்ராயநிர்தேஶம்; உனக்குரக்ஷ்ய வஸ்துவிரண்டாயிருக்க ஒன்றையேவிரும்புகை யுசிதமோவென்றபிப்ராயம் தொழுத்தனில்- தொழுவென்று மாட்டுத்தொழுவம், தன்என்றது ஸாயிம்கம், ஒருபாஷாவ்யதிதேஶத்திலே நீவளைத்துவைத்த ஜநங்களை யேரக்ஷிக்கலாவது, உன்தோளையே பலம்பநமாகப் பத்திவிடாதாரை ரக்ஷிக்கலாகாதோ என்றுகருத்து. பசுக்களையே- மொக்களைத்தானே, அவதாரணம், தங்களையநுஷ்யபாமைப்பைக் காட்டுகைக்காக, உன்னைப் பிரிந்தால் வ்யஸநப்பட வறியாதவற்றையைபோ நீரக்ஷிப்பது, பிரிந்தால் வ்யஸநப்படுவாரை யாதரிக்கலா காதோவென்றுகருத்து. விரும்பி- ஆதரித்து, எங்களையணைத்துக்கொண்டு கிடக்கச்செய்தேயும் நெஞ்சுபசு க்களின்மேலேபாய்த்திருப்பது, இங்குள்ளது விஶ்வாஸபரிபாஷணமே யென்றுகருத்து. எம்மை- எங்களை, துறந்து- பரித்யஜித்து, அவைத்தின்பக்கலாஸக்தியாலே யெங்கள்பக்கல் ஸம்மதத்தைவிட்டு என்று வடதா த்பர்யம். இட்டு- எறிந்துவிட்டு, த்ருணங்களைப்போகட்டுமாப்போலே யெங்களைப்போகட்டுவிட்டு என்றபடி. அவை- அந்தப்பசுக்களை, மேய்க்கப்போதி- மேய்க்கைக்காகப்போகாநிற்புதி, ஆதலால் நாங்கள் ஒருதலைக் காமத்தால் பரிதவியாநின்றோமென்றுகருத்து. உங்களையொழிய வெனக்கார்யாரணமுண்டோ வென்றா ப்போலே சில விநயோக்திகளை யவனருளிச்செய்ய அதைக்கேட்டுச் சொல்லுகிறாள்மேல், பழுத்த- பரி பக்வமான, பரிபக்வமானவென்றபடி. நல்- நல்லதான, நிர்தோஷமானவென்றபடி. அமுதின்- அ ம்ருதத்தினுடைய, இன்சாற்றுவெள்ளம்- இனியசாற்றுவெள்ளம்போலேயிருக்கிற. இனியது- ஸ்வாதுவான து, ஸ்வாது ரஸோபரஸம்போலே யிருக்கிறவென்றபடி. இது பணிமொழிக்கு விஶேஷணம். நின்- உன்னுடைய, செங்கனிவாயின்- சிவந்தபவிழம்போலேயிருக்கிற திருப்பவளத்தினுடைய, இதுக்குப் பணிமொழியோடே யந்வயம். கள்வ- க்ருத்ரிமங்களான, எங்களுடைய ஸர்வஸ்வாபஹாரகங்களானவெ ன்றபடி. பணிமொழி- தாழ்வையுடைத்தான சொற்களை, பணி- தாழ்வு, மொழி- உக்தி; ஸவிநயோக்திகளை யென்றபடி. பாவியேன்- அநுபவிக்கும் விஷமாம்படியான பாபத்தையுடையேனான வென்னுடைய, மனமக ந்தோறும், ஹ்ருதயப்ரதேஶங்கள்தோறும், உள்புக்கழுத்த- உள்ளேபுக்கழுந்தும்படிபண்ண, எனக்கு ம்றக்கவொண்ணாதபடி என்னெஞ்சிலேவைத்து ஸ்வீகரிக்கையாலேயென்றபடி. நினைதொறும்- நினைக் கும்க்ஷணங்களெல்லாவற்றிலும், ஆவி- என்னுடையப்ராணனானது, வேம்- வேவாநின்றது, உக்ஷ்ணமாயாக

மூ— அடிச்சியோந்தலைமிசைநீயணியாயாழியங்கண்ணாவுன்கோலப்பாதம்* பிடித்ததுநடுவுனக்கரிவையரும்
பலராதுநிற்கவெம்பெண்மையாற்றோம்* வடித்தடங்கண்ணிணைநீருநில்லாமனமுநில்லாவெமக்கதுதன்னாலே*

ஆ—(அடிச்சியோம்) உன்னுடைய வழகியதிருக்கைகளை அடியோங்களுடைய தலையிலேவைத்தருளித் திருக்கண்களாலே குளிரப்பார்த்தருளாயென்று பின்னையுமிங்ஙனேசொல்லுமளவில் 'ஒருபகல்மாத்திரமேயன்றோ பசுமேய்க்கப்போய் நான்பிரிந்திருப்பது இதுக்கிங்ஙனேபடவேணுமோ' என்று அவன்சொல்ல பசுமேய்க்கப்போகையாவது உனக்கபிமதைகளாயிருப்பாரோடே நீகலந்து பரிமாறுகைபிறே, ஆனபின்பு இங்ஙனே படவேணுமோவென்று சொல்லலாமிறே யுனக்கு, அதுநிற்க நாங்களுன்னைப்பற்றியல்லது தரிக்கமாட்டாத பிறவிபிறக்கையாலே உன்னைப்பிரியில நாங்கள்தரிக்கமாட்டோம் இக்கண்ணுநீரும்நில்லாது நெஞ்சுதளராநின்றது ஆதலால் நீ பசுநிரைமேய்க்கப்போகிற தெங்களுக்கொன்றும் பொறுக்கவொண்ணாது எங்களுயிரானது விரஹாக்நியாலே வேவக்கிடாய்ப்புகுகிறதென்கிறாள். ௬

✻ ஆறாம்பாட்டு.✻

இ— அடிச்சியோமித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உன்னுடையவித்யாதியால்) ஆழியங்கண்ணா என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (திருக்கண்களாலேயித்யாதியால்) அவனுடைய பசுமேய்க்கப்போக்குநிமித்தமாக வ்யஸநப்படுகிறவளிப்பாட்டிலே உனக்கரிவையரும் பலரித்யாதியாலே நாயிகாஸஹவாஸஹோமநிமித்தமாக வ்யஸநப்படுகை யஸம்பந்தமன்றோவென்ன விதுக்குத் தாத்பர்யஞ்சொல்லுகைக்காக அவதாரிப்பிக்கிறார் (பின்னையுமிங்ஙனேயித்யாதியால்) சொல்லுமளவிலென்கிறதற்கு அவன்சொல்லவென்கிறத்தோடே அந்வயம். அதுநடுவுனக்கரிவையரும்பலர் என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பசுமேய்க்கப்போகையாவதித்யாதியால்) அதுநிற்க வெம்பெண்மையாற்றோமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அதுநிற்கவித்யாதியால்) வெடிப்புஎன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (எங்களுக்கொன்றுமித்யாதியால) வேமெமதித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (எங்களுயிரானதித்யாதியால்) ௬

ப— அடிச்சியோம்- தாஸிகளானவெங்களுடைய, தலைமிசை- தலைமேலே, நீ- ஸர்வேச்வரனான நீ, அணியாய்- அலங்காரமாகவைத்தருளவேணும், உன்தாமரைக்கையை இதி ஶேஷ:. ஆழியங்கண்ணா- ஸமுத்ரம்போலே அழகியகண்களையுடையவனே, ஆழி- ஸமுத்ரம், அம்- அழகியது, க்ஷீரஸமுத்ரம்போலே ஸுதீர்க்கவிஶால ஶீதலபாவந கம்பீர ரமணீயகாந்திகலோலாதிகங்களான திருக்கண்களையுடையவனே யென்றபடி. இது ஸாபிப்ராயஸம்போதநம், உன்திருக்கண்களாலே யென்னைக்குளிரக் கடாக்ஷித்தருளவேணுமென்றபிப்ராயம், அதுநடுவு- அந்தப்பசுமேய்க்கப்போகிற வ்யாபாரத்தின்நடுவே, உன்கோலப்பாதம்- உன்னுடைய அலங்காரஶாலியான திருவடியை, பிடித்து- அவலம்பித்து, தங்களுக்கு போக்யமாகப்பற்றியென்றபடி. உனக்கு- நிரதிஶயஸௌந்தர்யனான வுனக்கு, அரிவையரும்- அபிமதைகளாயிருப்பார்களும் அரிவையர்- அபிமதைகள், பலர்- அநேகருளர், யத்வா, அரிபர்- அருமையான யௌவநமுடையவர்கள், ஊர்வஶீமென்னலாம்படி ஶ்லாக்யமான யௌவநத்தையுடையவர்களானவென்றபடி. உனக்குப்பலர்- உனக்கநேகர்களுண்டென்றபடி. அதுநிற்க- அதுகிடக்கிடு, நீமற்றும்சிலஸ்த்ரீமாரை விரும்புகிறாயென்று அதுக்கு ஸம்ஶ்லேஷிப்படுகிறோமல்லோமென்றபடி. எம்பெண்மை- எங்களுடையஸ்த்ரீத்வத்தாலே, த்ருதீயார்த்தே ப்ரதமா, நாங்கள் பெண்பிறவியில் பிறக்கையாலேயென்றபடி. ஆற்றோம்- பொறுக்கமாட்டோம், உன்னைப்பிரியில் தரிக்கமாட்டோமென்றபடி. உங்களுக்குஸ்த்ரீத்வம் ஸாதாரணமானால் ஸ்வாமிஷன்வருமளவும் வருந்தியாகிலும் தரிக்கவேண்டாவோவென்ன? எங்கள்நிலையைப் பார்க்கமாட்டாயோவென்கிறாள்மேல், வடி- கூரியதுகளான, வடியென்று கூரியது, ஆகர்ணாயத தீர்க்கங்களானவென்றபடி. யத்வா- நாடகஶாஸ்த்ரப்ரஸித்தமாம்படி யத்தீக்ஷ்ணகடாக்ஷ வீக்ஷணஶாலிகளானவென்றபடி. தடம்- விஶாலங்களான, ஸம்ஶ்லேஷதஶையிலே யுன்னாலிப்படி கொண்டாடுமவையானவென்றபடி. கண்ணிணை- லோசநங்களுடையயுகளத்தில், நீரும்- பாஷ்பஜலமும், உபலக்ஷணம் இதி ஶேஷ:. நில்லா- நில்லாது, மனமும்- எங்களுடையமநஸ்ஸும், ஸ்வாபாவிகஸ்தைர்யரஹிதமாயிருக்கும் இதி ஶேஷ:, நில்லாது- ஸ்திரமாயிராது, தரித்திருக்கமாட்டுகிறதில்லையென்றபடி. அதுதன்னாலே- இப்படிமநஸ்ஸாஞ்சல்யமாகையாலே, நின்பசுநிரைமேய்க்கப்போக்கு- உன்னுடைய கோஸம்ரக்ஷணார்த்தகமனமானது, எமக்கு- எங்களுக்கு, வெடிப்பு- உபத்ரவம், துஸ்ஸ

மூ— வெடிப்புநின்பசுநிரைமேய்க்கப்போக்குவேமெமதுயிரழன்மெழுகிலுக்கே* ||கூ||
வேமெமதுயிரழன்மெழுகிலுக்குவெள்வளைமேகலைகழன்றுவீழ்* தூமலர்கண்ணிணைமுத்தஞ்சோரத்துணை
முலைபயந்தென்தோள்கள்வாட* மாமணிவண்ணாவுன்செங்கமலவண்ண மென்மலரடிநோவநீபோ*

அ— (வேமெமதுயிர்) விரஹாக்நியாலே எங்களுயிர்வேவ ஶூந்யம்முடிகையாலே வளைகளும் மேகலையும் கழன்றுவீழ உன்னைக்காண்கையாலே புதுக்கணித்தவென்கண்கள் அருவிசோர்ந்து துணைமுலைபயந்து என் தோள்கள்வாட அதின்மேலே உன்திருமேனியும் சுகுமாரமான வுன்திருவடிகளும்நோவ நீபோய்

✱ ஏழாம்பாட்டு ✱

இ— வேமெமதுயிரென்றுதொடங்கி வெள்வளையித்யாதியை யநந்தரம்நிர்தேசித்ததுக்குத் தாத்பர்யமருளிச் செய்கிறார் (ஶூந்யமித்யாதியால) கழன்றுவீழவென்றதுக்கு தோள்கள்வாடவென்கிறத்தோடே யந்வயம். தூமலரென்கிறவிஶேஷணத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உன்னையித்யாதியால்) வாஸுதேவனுன்னைக்கண்டு ஸந்தோஷமாயிருந்தவையான வென்றபடி. அதன்மேலேஎன்கிறதற்கு நோவவென்கிறத்தோடே யந்வயம். மாமணிவண்ணவித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உன்திருமேனியுமித்யாதியால்) எவன்கொலாங்கே

ஸா— ஸமென்றபடி. வெடிப்பு என்று உஷ்ணகாலமானதுக்குப்பேர், எமதுயிர்- அஸ்மதீயமான ஆத்மாவானது, அழல்மெழுகில்- அக்நிகதமான மெழுகிலக்காட்டில், அழல்- அக்நி, உக்கு- உருகி, வேம்- விரஹாக்நியாலே தஹ்யமாய்விடும். ||கூ||

எமது- அஸ்மதீயமான, உயிர்- ஆத்மாவானது, அழல்மெழுகில்- அக்நிகதமானமெழுகில், உக்கு- உருகி வேம்- விரஹாக்நியாலே வேவாநின்றது. வெள்வளை- வெளுத்தவளைகளும், சங்குவளைகளுமென்றபடி. மேகலை- மேகலையும், காஞ்சீதாமமுமென்றபடி. கழன்று- தேஹத்துக்கு க்ருஶமாய்விடுமாகையாலே ஶிதிலங்களாய், வீழ- விழுந்துபோம்படியாக, தூமலர்- நிர்மலபுஷ்பம்போலிருந்ததான, தூ- நிர்மலம், வாஸுதேவனுன்னோடு ஸம்ஶ்லேஷித்திருந்தபோது உஜ்ஜ்வலஸத்ருஶமாயிருந்ததான வென்றபடி. கண்ணிணை- நயநயுகளத்திலே, முத்தம்- முக்தாஸமமானது, ஸ்தூலமுக்தாஸத்ருஶமான பாஷ்பஜலபிந்துஸந்ததியானதென்றபடி. சோர- சோரும்படியாகவும், வ்யாபிக்கும்படியாகவுமென்றபடி. துணைமுலை- ஒன்றுக்கொன்று துணையாயிருக்கிறமுலைகள், பரஸ்பரஸாத்ருஶ்யத்தைக் கண்டு ஸம்ஶ்லேஷதஶையிலே நீயிப்படிக்கொண்டாடும்படியான வென்னுடைய ஸ்தநங்களென்றபடி. பயந்து- விவர்ணமாய், பயக்கை- விவர்ணமாகை, எனதோள்கள்- என்னுடைய புஜங்களானவை, வாட- வாடும்படியாக வும், இதுக்கு நோவ என்கிறத்தோடே யந்வயம். மாமணிவண்ணா- நீலமணிவர்ணனே, மா என்று நீலம், இது ஸாபிப்ராயஸம்போதநம். இத்தனை ஸுகுமாரமான திருமேனியைக்கொண்டு கோரமான வநத்திலே போனாலெங்களாலாறியிருக்கப்போமோ என்றபிப்ராயம். உன்- உன்னுடைய, இதுக்கு அடியோடே யந்வயம். காட்டிலே போகவேணுமானால்த்தான் உனடியாலேபோகவேணுமோ. 'கரத்ரிஶிக்ஷ்யாதி ஶிகீ காமகண்டகாந்' என்றுமாப்போல் பேராசைப்படுகிற வென்னடியாலேயன்றோ போகலாவது என்று கருத்து. செங்கமலவண்ண- ஆரக்தவர்ணமான, மென்மலர்- ஸுகுமாரமாயிருக்கிற, மெல லென்று ஸௌகுமார்யம், மெலலென்கிறவிடத்தில ஏகாரஸ்யலோபோ நகாரஷ்ச. லோகத்தில் ஸௌகுமார்யமெல்லாம் வந்து ஸமிஶ்ரமங்களென்று தோற்றும்படி பதிவாஞ்சலஸ்ய ஸௌகுமார்யாவதியாய் எங்களுக்கு ரஸபோகத்துக்கு ஸம்ஸாரமாகப்பிறந்ததொரு போகவிஷயமாயிருக்கிறதான வென்றபடி. அடி- திருவடியானது, நோவ- நோவும்படியாகவும், உன்திருவடி நோவவாவது எங்கள் ப்ராணன் நோவுகையிறே! என்று கருத்து. "பதிஸௌகுமார்யதர்ஶநாத் ஸந்தேஹாதந்யது: தீப்த விஷ்லேஷவேலா ஸ்மர்யதே தப்யதே நகாபி: கண்டகா: பாதயோர்தவ" என்கிறஶ்லோகமிங்கே யநுஸந்தேயம், நீ- துருதுருக்கையானநீ, போய்- வநத்துக்குப்போனாலதான் நீபோகலாமோ, ப்ராணநாயகனான உனக்கு வசித்திருந்தாலே தன்வழியேபோய் தன்வழிவருகைக்கு, போன போனவிடமெங்கும் பூசல்விளைக்குமவனல்லையோ- ஸர்வவிஷயமான நீ வநத்திலேபோனால் எங்களா

மூ—ஆள்வானாழிநீர்* கோள்வாயரவணையான்* தாள்வாய்மலரிட்டு* நாள்வாய்நாடீரே* ௪

நாடீர்நாடோறும்* வாடாமலர்கொண்டு* பாடீரவர்நாமம்* வீடேபெறலாமே* ௫

ஆ—(ஆள்வான்) ஜகத்ரக்ஷணார்த்தமாகத் திருப்பாற்கடலிலேவந்து கண்வளர்ந்தருளுகிற வெம்பெருமான் திருவடிமலர்களிலே திருநாமத்தைக்கொண்டு நாடோறும்மலரிட் டவன்திருவடிகளைப் பெறுங்கோளென் கிறார். ௪

(நாடீர்) திருநாமத்தைச்சொல்லி யவன்திருவடிமலர்களிலே வாடாமலர்கொண்டு பணிமாற வவன்திருவடிமலர்களைப்பெறலா மிதுநிச்சிதமென்கிறார். ௫

## ✳ நாலாம்பாட்டு. ✳

இ— ஆள்வானென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஜகதித்யாதியால்) ஆழிநீரித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (திருப்பாற்கடலிலேயித்யாதியால்) தாள்வாய்மலரிட்டென்றநபித்துத் தாத்பர்யமருளிச் செய்கிறார் (திருநாமத்தையித்யாதியால்) திருநாமத்தைக்கொண்டென்றது- ப்ரகரணஸ்வாரஸ்யாத்த்யாஹாரம், இத்தால் முதற்பாட்டிலே ஸங்க்ஷேபமாகமுக்தமான திருநாமஜபத்தையாதல் திருநாமஸங்கீர்த்தனத்தையாதல் அருளிச்செய்தவர் நடுவே ப்ரஸங்கங்களான சங்கைகளை யிரண்டுபாட்டாலே பரிஹரித்து சுநகோரம் இப்பாட்டில் 'கேசவ' என்ற ஸங்க்ஷேபமாகமுக்தமாக விபக்கப்பட்ட புஷ்பஸமர்ப்பணாத்யாராதனத்தை யருளிச்செய்கிறாரென்று ஸங்கதிஸூசிதை, நாடீரென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவனித்யாதியால் ௪

## ✳ ஐந்தாம்பாட்டு. ✳

பாதாவதாரத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (திருநாமத்தையித்யாதியால்) இங்கும் திருநாமத்தையென்றது- ப்ரகரணஸ்வாரஸ்யாத்த்யாஹாரம், த்ரயீபவாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவன் திருவடியித்யாதியால்) இதுநிச்சிதமென்கிறவித்தால் கீழ்ப்பாட்டிற்சொன்ன புஷ்பஸமர்ப்பணமெம்பெருமானுக்கு மிகவும் ப்ரீதிகரமென் றபிப்ராயத்தாலே யத்தையே யநுவதிக்கிறாரிப்பாட்டிலென்று ஸங்கதி ஸூசிதை. ௫

ஈ— ஆள்வான்- ஆளுகைக்கிச்சையுடையவனாய், ஆளுகை- ரக்ஷிக்கை, பசுமேய்ப்பொழிப்பானென்னுமாப்போலே ஆள்வானென்றது ஸம்ப்ரத்யயார்த்தம், ரக்ஷித்ருத்வாய்க்கொண்டு என்றபடி. ஆழிநீர்- க்ஷீரஸமுத்ரஜலத்தில், ஆழி- ஸமுத்ரம், கோள்வாய்- காந்திமான்களான தேவங்களையுடையவனை, கோள்- காந்தி, ஷணாமணி ப்ராதுர்பாவஸம்பந்திகளான ஸஹஸ்ரதேவங்களை யுடையவனையென்றபடி. அரவு- நாகத்தை, திருவனந்தாழ்வானை யென்றபடி. அணையான்- சயனமாகவுடையவனுடைய, அணை- சயனம், தாள்வாய்- திருவடிகளிலே, தாள்கள்- திருவடிகள், வாயென்பது- இடம், நாள்வாய்- நாளிடத்திலே, தினங்களிலேயென்றபடி. ப்ரதிதினமுமென்கை. மலரிட்டு- புஷ்பங்களை ஸமர்ப்பித்து, நாடீர்- தேடுங்கோள், அவன் திருவடிகளையடையப் பாருங்கோளென்றபடி. ௪

நாடோறும்- நாள்தோறும், க்ஷீரஸாகரத்தில்போலே புஷ்பஸமர்ப்பணத்தில் ப்ரீதிசயத்தாலே நாடோறுமென்கிறார், வாடாமலர்கொண்டு- வாடாதபுஷ்பங்களைக்கொண்டு, ப்ரீதிபூர்வகராய் சுகந்தஸாரஸ்யஸௌகுமார்யங்களான புஷ்பங்களை ஸம்பாதித்துக்கொண்டென்றபடி. நாடீர்- தேடுங்கோள், அக ப்ராப்யவைசிஷ்ட்யராய்க்கொண்டவனை யாச்ரயியுங்கோளென்றபடி. அவர்நாமம்- அந்தக்ருஷ்ணனுடைய திருநாமங்களை, பாடீர்- பாடுங்கோள், 'வஸுதேவஸுதம் தேவம்' என்று தேவர் ஸங்கீர்த்தனம்பண்ணுமாப்போலே ப்ரீதியுக்தராய் நாமம்பண்ணுங்கோளென்றபடி. வீடு- மோக்ஷத்தை, அவன்திருவடிகளையேயென்றபடி. இவ்விடத்தில் ஏகாரத்தைப்பெறலாமென்கிறதோடே யநுயிப்பது, த்ரயீபவாதத்திலிருக்கிற ஏகாரம் ச்ருதிஸ்வபாவத்தால் பாட்டுதோறுமுள்ளதொன்றுகையாலே பதுவாக்யாலங்காரார்த்தமிறே, பெறலாமே- நிச்சயஸம்ஸாரநிவ்ருத்திபூர்வகமாகயுடை [illegible] பாரணத்தால் பெறுகையில் ஸம்சயமில்லையென்றபடி. ௫

மூ— மேயான்வேங்கடம்* காயாமலர்வண்ணன்* பேயார்முலையுண்ட* வாயான்மாதவனே* ॥௬॥
மாதவனென்றென்* றோதவல்லீரேல்* தீதொன்றுமடையா* ஏதஞ்சாராவே* ॥௭॥

ஆ— (மேயான்) ஸகலஸமாஶ்ரயணீயராய் ஸ்ரீயபதியாயிருந்த பேயார்முலையுண்டவாயான் நம்முடைய ஸகலார்த்திகரணங்களுக்கு விஷயமாயிருக்கிறவன் திருவடிகளிலடிமைசெய்யலாவதென்னில்? அவனன்றோ ஸகலமநுஜநயநவிஷயதாம் கதனாய் ஸந்நிதிபண்ணிக்கொண்டு திருமலையிலேபுகுந்து நின்றருளுகிறானென்கிறார் ॥௬॥

(மாதவன்) இந்தபக்தியோகத்தில நதிகாரிகள் மாதவனென்றுந் திருநாமத்தைச் சொல்லுங்கோள். சொல்லுமிடத்தில வரவெருப்தராயச் சொல்லவமையும், சொல்ல ஸமர்த்தரல்லீராகிலும் (?) ...

✳ ஆறாம்பாட்டு ✳

இ— பக்தியோகமொன்றுஞ்சொல்லாத விப்பாட்டு இப்ப்ரகரணத்திலே யென்றே வென்ன அவதரிப்பிக்கிறார் (ஸகலஸமாஶ்ரயணீய) இவ்வவதாரிகையிலே ஸகலஸமாஶ்ரயணீயராலே விதீயவாக்யமும் ஸ்ரீயபதித்வத்தாலே மாதவனென்றதும் வ்யாக்யாதம், இப்பாட்டுக்கு ப்ரதமவாக்யார்த்தமொன்றுமே விஷயமென்றுகாட்டுகைக்காக கதிதவாக்யரூபதையை யிச்ஸங்காவாக்யத்திலே சேர்த்தருளிற்று, ப்ரதமவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவனன்றோவித்யாதியால) ॥௬॥

✳ ஏழாம்பாட்டு ✳

வாக்யார்த்தத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பக்தீத்யாதியால்) ஓதவல்லீரேலென்று திருநாமஸங்கீர்த்தனத்திலுங்கூட ஸாமர்த்யத்தை யபேக்ஷிதமாய் நிர்த்தேசிக்கையாலே பக்தியோகத்தில நதிகாரிகளும் தோற்றுகிறதென்றுகருத்து. இங்கு அநதிகாரிகளென்றது- வர்ணவிஶேஷத்தாலே பக்தியோகத்தில நதிகாரிகளென்றபடி. இத்தால கீழ்பக்தியோகப்ரகாரங்களை யருளிச்செய்தவிப்பாட்டிலே அதில வர்ணாதிகாரிகளல்லாதார்க்கு ஸுலபோபாயத்தை யருளிச்செய்கிறாரென்று ஸங்கதிஸூசிதமாகத. பேசவல்லீரென்னாதே ஓதவல்லீரென்று நிர்தேசித்ததுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (சொல்லுமிடத்திலித்யாதியால) ஓதுகையாவது- வாக்கொழுக்கமாக ஆவர்த்திக்கையாலே வரவெருப்திதமத்வநிர்த்தேசமாகிறது என்றுகருத்து. இங்கு வரவெருப்தராய்ச்சொல்லுகையாவது- ஸ்வாஸ்வாதகமான வர்ணக்கிரமத்தில தங்களுக்கில்லாமையாலே தாங்கள் ஶக்திவெருப்தராய் ஸ்வயமேவசொல்ல ஶக்தர்களாயிருக்கத் தயாவிஷ்டர்களான சிலர்சொல்லக்கண்டு தங்களுக்கும் அதில ருசிபிறந்து தாங்களுமவர்களோடேகூடி யவர்களை யநுகரித்துச்சொல்லுகை. உத்தரார்த்தத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (சொல்லஸமர்த்த

ஶ— காயாமலர்வண்ணன்- ஸகலஸௌந்தர்யவர்ணனான, காயாவென்று ஸகலீ, மாதவன- ஸ்ரீயபதியான நீலமேகவர்ணமான திருமேனிகறுப் வரமாமுண்டாமபடி விலக்ஷணரஸஸ்வரூபன் லக்ஷ்மியோடே நித்யஸம்ஶ்லிஷ்டனாய் தீபகநனனவென்றபடி. தீப்தநமாத்ரேண நிரவதிகஸௌந்தர்யஸம்பன்னனவென்கிறது, பேய்- வஞ்சகியினுடைய, ஆர்- வஞ்சனமான, விஷவஞ்சனமானவென்றபடி. முலையுண்டவாயான்- ஸ்தநத்தைபானம்பண்ணின வாயையுடையவன், வஞ்சகியினுடைய விஷவஞ்சனமான ஸ்தநத்தை நிவீர்யமாக்கினாப்போலே பக்திப்ரதிபந்தகமான ப்ரக்ருதியை நிவர்த்திப்பிக்கவல்ல ஸாமர்த்யத்தையுடையவனான க்ருஷ்ணனென்றபடி. வேங்கடம்- ஸ்ரீவேங்கடகிரியிலே, மேயான்- மேவியிருக்கிறவன், மேவுகை- ஆஶ்ரிதரை, எல்லாரையும் தன் திருவடிகளை யாஶ்ரயிப்பித்துக்கொள்ளுகைக்காகப் பொருந்தியிருக்கின்றானென்றபடி இப்படி க்ருஷ்ணன் ப்ரத்யக்ஷவிஷயனாயிருக்கையாலே நிரதிஶய பக்தியுக்தராக வுங்களுக்கு அவன் திருவடிகளிலே யடிமைசெய்யக் குறையில்லையென்றுகருத்து. ॥௬॥

மாதவனென்றென்று- மாதவனென்றென்று நிரந்தரமாக, ஓதுதல்- ஓதுகைக்கு, ஓதுகை- வர்ணாநுபூர்வீ ஸஹிதமாக சொல்லமாட்டீர்களாகில வரவெருப்தராயாகிலும் சொல்லுகைக்கு என்றபடி. வல்லீரேல- வல்லீர்களாகில, யதிஶூத்ரால வர்ணக்ரமத்தில பக்தியோகத்திலுங்களுக்கதிகாரமில்லையாகில அவ்வநாமத்தையாகிலும நிரந்தரமாகச்சொல்ல வல்லீர்களாகிலென்றபடி. தீது- பாவங்கள், வர்ணாஶ்ரமதர்மங்களை ஸ்வயம் ஸ்வாத்ம ஸ்தானத்தில ப்ரதிபந்தங்களான பாவங்களென்றபடி. ஒன்றும்- ஸமஸ்தமும், அடையா- உங்களைக்கிட்டமாட்டா, உங்களைவிட்டு நசித்துப்போமென்றபடி. ஏதம்- பாவங்கள்

மூ—நெடியானருள்சூடும்* படியான்சடகோபன்* நொடியாயிரத்திப்பத்* தடியார்க்கருள்பேறே* ॥கக॥

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஆ—(நெடியான்) இத்திருவாய்மொழிவல்லா ராழ்வாரைப்போலே நெடியானருள்சூடும்படி பாவரென்கிறார். ॥கக॥

திருக்குருகைப்பிரான்பிள்ளான்திருவடிகளேசரணம்.

இ— அப்யாஸமாத்ரத்தால ஸித்தவஸ்துத்தையருளிச்செய்கிறார் (ஆழ்வாரைப்போலேயித்யாதியால) ॥கக॥

ஈ— நெடியான்- ஸர்வேச்வரனுடைய ப்ரீதிவிஷயியினுடைய, அருள்சூடும்படியான்- க்ருபையை ஸிரஸா வஹிக்குமஸ்வபாவரான, படி- ஸ்வபாவம், அவனுடையக்ருபையைப்பெற்று அதுதன்னையே பூஷணாதிகளை ஸிரஸா வஹித்துக்கொண்டு அநுபவிக்குமாப்போலே நிரதிசயபோக்யமாக அநுபவிக்கும் ஸ்வபாவரானவென்றபடி. சடகோபன்- ஆழ்வாருடைய, நொடி- உக்தியான, நொடியென்று உக்திக்குப்பேர், ஆயிரத்து- ஸஹஸ்ரத்தில், இப்பத்து- இத்தஶகம், அடியார்க்கு- இதைப்யஸித்த ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு, அருளபேறு- க்ருபாலப்தி, இப்பத்தால் பகவத்ப்ரஸாதலப்தி பலஸ்வாமித்வமென்று வ்யஞ்ஜிப்பிக்கைக் காக ஸஹகாரஸஹகாரிகாரணோக்ஷாவஸாநம், இது ஸஹஸ்வீகாரம், 'ஸஹகாரஸஹகாரிகாரணோக்ஷம் ஸஹகாம்கேஷிஸப்ரவக்ஷத' இதி லக்ஷணாத். ॥கக॥

ஜ்ஞாநவைராக்யாநுஷ்டாநஶேவதயே ஸ்ரீவேதவ்யாஸாசார்யாநுஜஸஹோதராய நம:.

ஸ்ரீ:

த்ராமிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி:

(கண்ணன்கழலிணை.)

நாம்நாம் ஸங்கீர்த்தநேந ஸ்வபரிஷ்வஜ்ய ஸ்வாஸ்வாநந்தாநுபவம்

ஸம்ஸ்த்ரவ்யோஷ்டாக்ஷ்ய நிவஹநைஸ்ஸாத்ருத்யாதிக்ருதை: ।

பத்ரைர்வர்ணைர்ப்ரஸோதைர்ப்ரபத்ரஸாவிபஜநப்ரக்ரியோத்ஸவைஸ்ஸ:

ஸ்ரீநாராயணஸ்ஸ்துக்யபத்விநஶ்வரத்வப்ரஷ்டத்வம் ॥௧0௦॥

(நாம்நாம் ஸங்கீர்த்தநேநேத்யாதி) எண்ணுந்திருநாமம்- நாரணனென்னம்மான்- தானேயுலகெல்லாம்- தாள்வாய்மலரிட்டு- வாடாமலர்கொண்டுபாடிரவன்றமம்- பேயார்முலையுண்டவாயான்மாதவனே- மாதவனென்றென்றோதவல்லீரேல்- பேராதோதுவார், அமரத்தொழுவார்கட்கு- சுனைநன்மலரிட்டுநினைமின்- நாராயணாதி திருநாமஸங்கீர்த்தநத்தாலும், ஸர்வஸ்வாமித்வஸம்பந்தத்தாலும், ப்ரதிக்ஷணஸ்மரணத்தாலும், பாதாரவிந்தஸேவனத்தாலும், திருநாமங்களுடைய வஸ்யநத்தாலும், ஸேவநத்தாலும், ஸாத்ருத்யாதிகளாலும், மற்றும் நித்யநைமித்திகாதி வர்ணாஸ்ரமபேதங்களாலும், ஸமஸ்தங்களிலே சிலவற்றையருளிச்செய்தது மற்றுமுண்டான பதங்களுக்கு முமுக்ஷுமென்று திருவுள்ளம், இவைகளிலே எம்பெருமான்தன்னை பஜிக்கைக்கு ஸஹகாரிகளை யுடையனாயிருக்கிறானென்று "கண்ணன்கழலிணை" என்கிறதசகத்திலே த்ராவிடவேதஶிர யருளிச்செய்தாரென்கிறார். ॥௧0௦॥

ஸ்ரீவேதநிகமாந்தமஹாதேசிகாய நம:.

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

பத்தாம்பத்தில ஐந்தாந்திருவாய்மொழிமுற்றிற்று.

மூ—விண்ணுலகந்தருவானாய்விரைகின்றான்விதிவகையே* யெண்ணினவாறாகாவிக்கருமங்களென்னெஞ்சே*॥
என்னெஞ்சத்துள்ளிருந்திங்கிருந்தமிழ்நூலிவைமொழிந்து*

---

ஆ—அதின்மேலே அவன்தானேவந்து நிர்ஹேதுகமாக நமக்கு திருநாட்டைத்தருகையிலே விரையாநின்றான், நாம் 'இத்தைச்செய்' என்றுசொல்லுமிதுவே தாழ்வாகவிருக்கிறனததனே, ஆனபின்பு இனியவனை நண்ணினோமேயல்லேலாமோ நெஞ்சே இங்ஙனேயிருப்பதொரு ஸம்ருத்தி நமக்கு விளையக்கடவதாக ஸங்கல்பத்திலேதான் நினைவுண்டோவென்கிறார். ௩

(என்னெஞ்சத்துள்) ஸநகாதிவாரமொதிவர்த்தநஸ்வாமிஸ்ரேஷ்டமான திருநாட்டை நம்முடையசிறுமைபாராதே நமக்குத்தந்தருளுமோவென்னில? என்னுடைய நிகர்ஷத்தையும் சிறுமையும்பாராதே யென்னெஞ்சுள்

இ—வடித்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நிர்ஹேதுகமாகவென்று) ஸக்தியொமாதிமாதமாயாவாயமன்றிக்கே யென்றபடி. விரையாநின்றானென்றது- த்வரியாநின்றானென்றபடி. இத்தால் முதற்பாட்டிலே திருநாட்டைத்தருகையிலே வரிவஸ்யனானென்றவரிப்பாட்டிலேயதற்கு த்வரியாநிற்கிறாரென்று ஸூசிராகிறாரென்று ஸம்மதிஸூசிமெத. விதிவகையேயென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நாமித்தையிதர்யாதியால்) இதுக்கு ஸ்ரீதாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆனபின்பிதர்யாதியால்) தாத்பர்யவாடித்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நெஞ்சேயிங்ஙனேயிதர்யாதியால்) ௩

✳ நாலாம்பாட்டு. ✳

நமக்கருடான்செய்வானே என்றிப்பாட்டிலேசொல்லுகிறவித்தை அருள்தருவானமைகின்றான் என்று முதற்பாட்டிற்சொன்னத்தைக்கொண்டு வ்யாக்யாபன்னுவென்ன இப்பாட்டுக்குத் தாத்பர்யஞ்சொல்லுகைக்காக வவதரிப்பிக்கிறார் (ஸநகேதர்யாதியால்) என்னெஞ்சத்துள்ளிருந்து என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னுடைய ஐதர்யாதியால்) இங்கு என் என்கிறவிடம் ஸ்நிகர்ஷாநுஸந்தாநமென்று கருத்து, நிகர்ஷம்- தோஷபூயஸ்த்வம், சிறுமை- ஸாதநாதிகத்வம், இங்கிருந்தமிழ்நூலிவைமொழிந்து

---

ஈ—இன்று- இதுக்குமுன்பு நாம்ஒரு ஸாதநாநுஷ்டானம்பண்ணியறியாதிருக்க ஸஹஸாஸமாக விண்ணைக்கு, விண்ணுலகம்- பரமபதத்தை, அங்கேயொரு குடியிருப்புமாத்திரத்தையன்றிக்கே அந்தலோகத்தை யெல்லாமென்றபடி. விதிவகையே- விதிப்ரகாரமாக, நம்முடைய பாக்யாநுகாரத்திலேயென்றபடி. தருவானாய்- தாதாவாய், விரைகின்றான்- த்வரியாநின்றான், விரைதல்- த்வரிக்கை, என்னெஞ்சே- எனக்கநாதிவொவகாரணமானநெஞ்சே, நீயெனக்குவகாரணமாயிருந் தநாசுகுமிக்கையால்வந்த ஸம்ருத்தியன்றேயிதெல்லாமென்றுகருத்து. இக்கருமங்கள்- இந்தகார்யங்கள், நாமவனையிங்கே நிரந்தரமாக வநுபவிக்கப்பெறுகையும் நாம்செல்லவேண்டும் தேசமெல்லாமவன்கடந்துவருகையும் திருநாட்டைத்தருகையிலே த்வரிக்கையும் அதுநம்முடைய பாக்யாநுகாரமாகையுமாகிற விகாரங்களென்றபடி. எண்ணினவாறு- நாமெண்ணினப்ரகாரமாக, ஆறு- ப்ரகாரம், ஆகா- ஆகிறனவல்ல, நாமெண்ணின்படி வருகிறனவல்ல என்கை- இக்கார்யங்களிங்ஙனே ஸித்திப்பனவாக ஸங்கல்பத்திலேதான் நமக்குநினைவுண்டோவென்றுகருத்து. ௩

என்னெஞ்சத்து- ஸர்வேஶ்வரஸ்ஸர்வஜ்ஞனாய் ஸர்வத்ரஸர்வஸம்பந்நனாயிருந்த என்நெஞ்சினுடைய, கவாக்ஷஸம்பந்தத்தால் ராஜாபோலே என்ஸம்பந்தத்தால் என்னெஞ்சவனுக்கு ராஜ்யமென்றுநானிருக்க அவன் என்ஸம்பந்தமேஹேதுவாக என்னெஞ்சை குடியாகின்றானென்று கருத்து. உள- உள்ளுக்குள்ளே, விடாய்ப்பட்டவன் சுரயமானஸரஸ்ஸிலே மேல்நீரைநீக்கி ஆழமுழுகிக்கிடக்குமாப்போலே என்னெஞ்சினுள்ளுக்குள்ளே புகுந்தானென்றுகருத்து. இருந்து- ஸ்திதனாய், தன்ஸோபாவ்ருத்தியையும்நினையாதே இங்கே ஸ்திரவாஸியாயிருந்து என்றபடி. இதுக்கு மொழிந்துஎன்கிறத்தோடேயன்வயம், வாக்யகிரணஸு வாக்யகாதூணிஸம்வதமே தத்த்வஸீதாபரஜநநஹேதுவானுப்போலே அவன் எனனெஞ்சுள்ளிருந்தே என்னைக்கொண்டு தான்கவிபாடுகைக்கு ஹேதுவாய்விட்டதென்றுகருத்து, இங்கு- இந்தலோகத்திலே, இதற்கும் மொழிந்துஎன்கிறத்தோடேயன்வயம், திருநாட்டிலும் இல்லாததான திருவாய்மொழியாகிற ஸம்பத்தை இங்குண்டாக்கினானென்று கருத்து. இரும்- விபுலங்களான, கேட்டாரார் வானவர்களென்னும்படி நித்யஸூரிகளுமடங்காததான வைபவத்தை யுடையவனானவென்றபடி. தமிழ்நூல்- த்ரமிடஶாஸ்த்ரங்களான, நூல்- ஶாஸ்த்ரம், 'வேதவேத்யே பரே பும்ஸி'- என்கிற

மூ— வன்னெஞ்சத்திரணியனைமார்விடந்தவாட்டாற்றான்* மன்னஞ்சப்பாரதத்துப்பாண்டவர்க்காய்ப்படை தொட்டான்* நன்னெஞ்சேநம்பெருமானமக்கருள்தான்செய்வானே* ॥௪॥

ஆ— புகுந்திருந்து என்னையுபகரணமாகக்கொண்டு திருவாய்மொழியைச்சொல்லி ஸூரிகவிப்ரீயிகளான ஹிரண்யவதப்ரப்ருதிநிரஸநத்தையும் எனக்கு ஸாத்ம்யமாகச்செய்தருளின நிரவதிகவாத்ஸல்ய காருண்யௌதார்யாதி குணங்களையுடையவனாயிருந்தவன் இனித்திருநாட்டை நமக்குத்தந்தருளுமென்னுமிடம் சொல்லவேணுமோ என்னைக்கொண்டு திருவாய்மொழியைச்சொல்லுவிக்கையாகிற இந்தஸௌஹார்த்தத்திற்காட்டிலும்

இ— என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னை உபகரணமித்யாதியால்) த்விதீயத்ருதீயபாதத்திற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸூரிகவிப்ரீயிகளித்யாதியால்) நம்பெருமானென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (எனக்குஸாத்ம்யமித்யாதியால்) என்னெஞ்சத்துள்ளிருந்து என்கிறதற்கு ஸூசிதார்த்தமருளிச்செய்கிறார் (வாத்ஸல்யஸௌசீல்யத்தாலே) இருந்தமிழ்நூலித்யாதி நம்பெருமானித்யந்தமாக ஸூசிதார்த்தமருளிச்செய்கிறார் (காருண்யௌதார்யாதியால்) நமக்கருள்தான்செய்வானே என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இனித்திருநாட்டையித்யாதியால்) பாட்டுக்கு பாவார்த்தமருளிச்செய்கிறார் (என்னைக்கொண்டித்யாதியால்)

ஈ— கணக்கிலே பின்புள்ளகவிகளுக்கெல்லாம் இத்தைக்கொண்டு லக்ஷணம்காட்டலாம்படி ஸ்ருதிகவிதைகளுக்கு உபப்ருஹ்மணரூபங்களானவென்றபடி. நானென்னாற்றாமையாலே யலற்றுகிறத் தானந்தபாசுரங்களை ஸர்வலக்ஷணோபேதங்களாம்படி பேசுவிக்கிறானென்றுகருத்து. பதா- தமிழ்நூலென்றது- ஸ்ருதிஸாரபூதங்களாய் ஸகலவேததாத்பர்யநிர்ணயகஸாஸ்த்ரரூபங்களானவென்றபடி. இவை- இப்பாட்டுக்களை. இவற்றின்ஸாத்ம்யஸௌகுமார்யமாயிருக்கையாலே மேற்போகமாட்டாதே தம்மாலும் விசேஷித்துச் சொல்லவொண்ணாதபடியான ஸாத்ம்யஸௌந்தர்யநுடைய ஆநந்தவைலக்ஷண்யமும் தோற்றும்படி யிவையென்று ஸாமாந்யநிர்தேசம்பண்ணித்தக்கொண்டு அநுபவிக்கும்படி மொழிந்து தானருளிச்செய்த "பரிவ்ராஜகவேஷேண ஸீதேஷா தேஷா தேஷா ஸர்வதோ ஜநா: । ஆநந்த மோக்ஷகாரணே தேயாஸ்ஸீதிதஸேஷ்டித:" என்கிறபடியே இப்ப்ரபந்தமருளிச்செய்தவனவனே, நானவனுடைய ஆநந்தப்ரகாசத்துக்கு விஷயமாயிருந்தேனத்தனையென்று பாவார்த்தம். இதில் நம்முடைய வ்யாபாரமும் ஸாதநமாயிருக்கிறதேயாகிலும் அதெல்லாம் ப்ரயோஜகதாவான அவனுடைய தாமோதரவத்வ்யாபாரதந்த்ர்யமென்றுகருத்து. "ப்ராவ்ருஷஜலஸ:" மென்கிறவிடத்தில் ப்ராவ்ருஷென்றது ப்ராவ்ருஷகாலோதித:, என்று வ்யாவ்யாதமானாற்போலே இவ்விடத்திலும் மொழிந்தது என்றது மொழிந்திருக்கிறவனை என்றபடி. வல்- வலியதான, வல்லென்றுவலியது, லகாரஸ்யநகாரேரேணே நகாராதேசஸ:. ஸூக்ஷ்மம்வ்யமில்லாதவளவன்றிக்கே ப்ரஹ்லாதவத்ஸ்வபாவஸம்பந்தமான என்றபடி. நெஞ்சத்து- உசஸ்ஸையுடையவனான, நெஞ்சையுடையவன் நெஞ்சத்தான், நெஞ்சத்திரணியனென்று ஸமாஸம், இரணியனை- ஹிரண்யாஸுரனை, மார்விடந்த- வக்ஷஸ்ஸை நகங்களாலே கீண்டவனை அகப்பக்கவலம்ந்ருதிம்வலஸமாவ்ருதவளமும், அந்த வன்னெஞ்சுகிடக்கிறவிடமான வக்ஷஸ்தலத்தை விதாரணம்பண்ணினவனைவென்றுகருத்து. வாட்டாற்றான்- திருவாட்டாற்றிலேயிருக்கிறவனை, ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுக்கு ஸ்தம்பத்திலே ஒளிந்திருந்துதவினாற்போலன்றிக்கே நித்யம்ப்ரத்யக்ஷிதனுயிருந்தெல்லாற்குமாவத்திலே யுதவுகைக்காக திருவாட்டாற்றிலே யெழுந்தருளியிருக்கிறவனைனென்றபடி. மன்- க்ஷத்ரஜாதிடனது, மன்- க்ஷத்ரஜாதிக்குப்பேர், ஸாரதவாஸரஸமித்தஸூர்யஸேநஸமித்ர ஸமாஜலோகமுமென்றபடி. அஞ்ச- அஞ்சும்படி, கௌரயஸம்ரம்பஸிம்ஹஷண்டத்தைக்கண்ட நரிக்கூட்டம் போலே வ்யதித்துஸமாம்படியென்கை. இதற்கு தொட்டானென்கிறத்தோடே யந்வயம். பாரதத்து- பாரதத்திலே, பாரதயுத்தத்திலேயென்றபடி. பாண்டவர்க்காய்- பாண்டவர்களுக்காக, படை- ஆயுதத்தை, தொட்டான்- தொட்டவனை, ஆயுதந்தொடேனென்று ப்ரதிஜ்ஞைபண்ணியிருக்கச் செய்தேயும் ஆஸ்ரிதரான பாண்டவர்களுக்காக தன்ப்ரதிஜ்ஞையைக்குலைத்து வக்த்ரத்தையெடுத்தவனை வென்றபடி. நம்பெருமான்- நம்முடையஸ்வாமியானவன், இந்தசரித்ரங்களையெல்லாம் நமக்கு ஸாத்ம்யமாய்ச்செய்தருளின ஸவேஸ்வரனனவனென்றபடி நல்- நல்லதான, லகாரஸ்யநகாரேரேணே நகாராதேசஸ:. ஸம்பந்தவிஷயமென்று ஸத்ஸ்வரூபணைதகஸ்வமாவனை வென்றபடி. நெஞ்சே- என்நெஞ்சே நமக்கு-இப்படி திருவாய்மொழிபாடும்படி தான்விஷயீகரித்தருளினநமக்கு, தான்- நம்பக்கலித்தனை பாவஸ்தம்பண்ணினதான், அருள்செ

மூ— வானேறவழிதந்தவாட்டாற்றானபணிவகையே* நானேறப்பெறுகின்றேன் நரகத்தைநகுநெஞ்சே* தேனேறு மலர்த்துளவந்திகழ்பாதன்செழும்பறவை* தானேறித்திரிவானதாளிணையென்றலைமேலே* ||ரு||

ஆ— சீரியதோ திருநாடென்கிறார். ||௪||

(வானேற) திருநாடுபெறவேணுமென்ற அபேக்ஷையுடையார்க்கெல்லார்க்கும் வானேறுகைக்கீடான உபாயத்தைக்கொடுத்தருளினான், அவனுடைய ப்ரஸாதத்தாலே தேனேறுமலர்த்துளவத்தினாலே பரிஷ்க்ருதமாயிருந்தவனுடைய தாளிணை பெரியதிருவடிமேலேறுமாப்போலே என்தலைமேலே நானேறப்பெறுகின்றேன், இனியவனைப்பிரிந்திருக்கையாகிற நரகத்தை வென்றிருப்பேனென்கிறார். ||ரு||

இ— சீரியதோ என்றது- ச்லாக்யமானதோ என்றபடி. ||௪||

* ஐந்தாம்பாட்டு *

வானேறவழிதந்த என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (திருநாடு இத்யாதியால்) வாட்டாற்றான் பணிவகையேயென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவனுடைய இத்யாதியால) துளவந்திகழ்என்றது தாளிணையென்கிறதற்கு விசேஷணமன்றிக்கே பாதமென்கிறதற்கு விசேஷணமாயிருந்தாலும் உக்தவிசேஷணவிசிஷ்டமான பாதத்தையே அத்தாளிணையென் றநுவதிக்கிறதாகையாலே இவ்விசேஷணம் அதுக்கும் அந்வயிக்குமென்றுகருத்தாலே யருளிச்செய்கிறார் (தேனேறி இத்யாதியால்) செழும்பறவைஇத்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பெரியஇத்யாதியால்) தாளிணையென்தலைமேலேற நான்பெறுகின்றேனென்றநவயம், நரகத்தைநகுநெஞ்சேயென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இனியவனைஇத்யாதியால்) இத்தால மூன்றாம்பாட்டிலே நமக்குத் திருநாட்டைத்தருகையிலே கூசியாநின்றானென்றவ ரிப்பாட்டிலே பெரியதிருவடிக்குஸமமாக நம்மை பக்ஷபாதியாநின்றானென்று ஹ்ருஷ்டராகிறாரென்று ஸங்கதியுஞ்சொல்லிற்றாயிற்று. ||ரு||

ப்ர- ய்வான்- க்ருபைசெய்தருளுவான், பரமபோமிச்ராஞ்சநலா ஸர்வச்ரேஷ்டமான திருநாட்டையுந்தருமவன், இத்திருவாய்மொழிப்பிற்காட்டில் அதிகமோ திருநாடென்றுகருத்து. ||௪||

வானேற- பரமபதத்தைப்பெறுகைக்கு, வழி- உபாயத்தை, ஸித்தஸாதனங்களையென்றபடி தந்த- அபேக்ஷிப்பாரெல்லார்க்கும் கொடுத்தருளினவனை, உபதேசாதிமுகத்தாலே அறிவித்து அநுஷ்டாநதசையிலே ஸஹகாரியாயிருந்து ஸத்ருஷ்டிநிஷ்டநம் பண்ணிக்கொடுத்தவனான வென்றபடி. வாட்டாற்றான், திருவாட்டாற்றிலே யெழுந்தருளியிருக்கிற ஸ்வாமியினுடைய, பணிவகையே- அருளிச்செயல்படியே, அவனுடைய ஸ்வஸங்கல்பாநுஸாரமாக என்றபடி. நான்- அவனுக்கு க்ருபாவிஷயபூதனான நான், இதற்கு தலைமேலே பேறப்பெறுகின்றேனென்று மேலேயந்வயமாகிறது. தேனேறு- தேன் ஏறுகிற்கிற, பரமபவித்ரஸம்ஸர்க்கஸம்பந்தத்தாலே நாள்செல்லநாள்செல்ல ஸ்ப்ருஹணீயங்கள் வர்த்தியாநிற்கிறவென்றபடி. மலர்துளபந்திகழ பாதம்- புஷ்பங்களோடேகூடின திருத்துழாய்விளங்காநிற்கிற (திருவடிகளையுடையவனை, திகழ்பாதமென் று வாரொனாலும் இதுவேபொருள்) இதற்கு திரிவானென்கிறதோடே அந்வயம், செழும்பறவை- செழித்த பக்ஷியை, பறவை- பக்ஷி, ஸர்வஜ்ஞவஸ்துஸம்பந்தமுண்டான ஸம்ஸ்லேஷபாவத்தாலே குளுந்து உபசீந மானவேஷத்தைபுடையவனான ஸ்ரீவைநதேயனையென்றபடி, தானேறி- தானதானேயேறி, ஸ்ரீவைந தேயனுகப்புக்காக வேறுகையன்றிக்கே யவனுடைய ஸம்யோகமாத்ரம் தனக்கு நிரதிசய ஸுகமா யிருக்கையாலே ஸ்வபாவஸ்வாமியாய்க்கொண் டேறியென்றபடி, திரிவான்- ஸர்வஜ்ஞமாகஸஞ்சரிக்கிற ஸ்வாமியுடைய, அத்தாளிணை- அந்தசரணயுகளமானது, அ என்றது தத்வஸ்வரூபீயா, கீழ்ச்சொன்ன ஜகத்ஸ்ரஷ்டாவினுடைய க்ஷேமஸம்ரக்ஷணார்த்தமான ஸர்வஜ்ஞத்வாதியுக்த சரணஸரோருஹமான தென்றபடி. என்தலைமேலே- ஸ்வயம், ஏறப்பெறுகின்றேன்- ஏறியிருக்கப்பெறுகின்றேன், நெஞ்சே- என்னுடைய மநஸ்ஸே, நரகத்தை- நரகத்தை, அவனை விச்லேஷித்திருக்கையாகிற நரகத்தையென்றபடி. நகு- பரி ஹஸி. நகுகை- பரிஹஸிக்கை இத்தனைகாலமும் நம்மைப்பீடித்த இந்த விச்லேஷநரகமினி நம்மைக்கிட் டமாட்டாமையாலே நாம் ஜயித்தோமாகையா லத்தை நீ பரிஹாஸம்பண்ணிக்கொண்டு ஹ்ருஷ்டமாயி ரு என்றபடி. ||ரு||

மூ—திரைகுழுவுகடல்புடைசூழ்தென்னாட்டுத்திலதமன்ன* வரைகுழுவுமணிமாடவாட்டாற்றான்மலரடிமேல்*
விரைகுழுவுநறுந்துளபமெய்ந்நின்றுகமழுமே* ।எ।

மெய்ந்நின்றுகமழ்துளபவிரையேறுதிருமுடியன்* கைந்நின்றசக்கரத்தன்கருதுமிடம்பொருதுபுனல்*

ஆ—(குரைகழல்கள்) இப்படிநெஞ்சே நாம் குரைகழல்கள்குறுகினம் நங்கோவிந்தன் ஸர்வஸ்வாமியாக வந்தென்னுள்ளே புகுந்தருளினான், இதுக்கடையாளமென்னென்னில்? வாட்டாற்றான்திருவடிகள் திருத்துழாய் என்னுடம்பெல்லாம் கமழ்கிறபடியாராயென்கிறார். ।எ।

(மெய்ந்நின்று) திருத்துழாய்தொடக்கமாக வ்யாவர்த்தகசிஹ்நங்களையுடையவனுக்ஸேநாபதியாயிஸ்ராங

✳ஏழாம்பாட்டு.✳

இ— குடிகொண்டானென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸர்வேஸ்வரஸ்வமித்யாதியால்) அவனே ஸர்வேஸ்வரனாகவந்து தம்நெஞ்சிலே புகுந்திருக்கச்செய்தே சரணஸம்ஸ்ரயத்தில்வரக்கூடுமோ தமக்கொருவரூபமில்லாமையாலென்றும் தானவமித்யாதியாலே யத்தை யொருமோசமாகச்சொல்லுகை யஸம்மதமன்றோவென்ன வதரிப்பிக்கிறார் (இதுக்கடையாளமென்னென்னிலென்று) தாளிணையென்தலைமேலேயித்யாதியாலே சொன்னவிவையெல்லாம் ஞானவிஷயதாவிஶேஷமாத்ரமன்றோ அவனும்முடையவுடம்பிலே ஸந்நிஹிதனானென்னக்கூடுமோவென்று ஶங்காஸ்பதத்துக்கு அபிப்ராயம், இத்தால் கீழ்சொன்ன ஶ்லோகங்களையெல்லாம் ஸத்யஸித்தானுபவமாக ஊஹித்துக்கொண்டநுஸந்திக்கிறாரிப்பாட்டிலென்று ஸம்ஶயமுத்தரம்போதமாயிற்று. இங்கு ஞானவிஷயமாத்ரமன்றிக்கே ஸாக்ஷாத்ஸந்நிஹிதனானவனுடைய திவ்யஸம்பந்தமிருக்கை தாம்வார்திருமேனியிலேவந்து ஸந்நிஹிதமாயிருக்குமென்றும் இப்படி ஸந்நிஹிதமானுமது வக்ஷஸ்தலாதிகளோடன்றிக்கே யொருவ்யக்த்யக்ஷவிஷயமாயே யிருக்குமென்றும் திருவுள்ளம். ஆனாலும் பரிமளாதிகளிவயவிஷயமாத்ரம் ப்ரத்யக்ஷ ப்ரத்யக்ஷவிஷயமாகக் குறையில்லையிறே. ஶேஷம்ஸ்பஷ்டம். ।எ।

✳எட்டாம்பாட்டு.✳

ஸ்வயஸேவாக்ஷத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (திருத்துழாயித்யாதியால்) கருதுமிடம்பொருது கைந்நின்றசக்கரத்தனென்று கூட்டித்துத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸேநேத்யாதியால்) புனலித்யாதிக்குத்

ஶ— ஸாயாதிகளோடே வந்து என்னெஞ்சிலே நிலைநின்றருளினானென்றபடி. திரைகுழுவு- தரங்கபங்க்திகளையுடைத்தான, திரை- தரங்கம், குழுவு- பங்க்தி, திரைகுழுவு கடலென்று ஶாகபார்த்திவவத்ஸமாஸ:. ஸமுத்ரஶயனஸந்நிதியாக ஸ்தஸஞ்சிதஸமஷ்டி தாமரைகம்போலே வஹாஸஹஸ்ரஶாயியான வென்றபடி. கடல்- ஸமுத்ரத்தாலே, புடை- பார்ஶ்வங்களிலே, சூழ்- பரிவ்ருதமான, இது வாட்டாத்துக்கு விஶேஷணம். தென்னாட்டுத்திலதமன்ன- தக்ஷிணதேஶத்துக்கு திலகம்போலேயிருக்கிற, அன்ன என்று உபமாவாசகம். வரைகுழுவுமணிமாட- கநககிரிபங்க்திபோலிருக்கிற ரத்நமயமந்தங்களையுடைத்தான, வாட்டாற்றான்- திருவாட்டாற்றிலே யெழுந்தருளியிருக்கிற பரமபுருஷனுடைய, மலரடிமேல்- பத்மஸத்ருஶங்களான திருவடிகள்மேலே, விரைகுழுவுநறுந்துளபம்- பரிமளஸமூஹஸஹிதமாய் பரிமளியாநிற்கிற திருத்துழாயானது, விரையென்று பரிமளம், ஸ்வரூபஸம்பந்தத்தாலே யதிஶயிதபரிமளமாய்க்கொண்டு பரிமளிக்கிற திருத்துழாயானதென்றபடி. மெய்- என்ஶரீரத்திலே, மெய்யென்று ஶரீரம், நின்றுகமழும்- ஸ்திரமாகநின்று பரிமளியாநின்றது, ஆதலால்அவன்ஶரீரத்திலே ஸந்நிஹிதனென்றிடத்தில் ஸம்ஶயமில்லையென்றுகருத்து. ।எ।

மெய்- திருமேனியிலே, நின்றுகமழ்- ஸ்திரமாய்நின்று பரிமளியாநிற்கிற, துளபவிரை- தாஸீபரிமளமானது, ஏறுதிருமுடியன்- ஏறுகிற்கிற திருமுடியையுடையவனான, ஸம்ஸர்க்கத்தாலே திருத்துழாய்க்குங்கூட பரிமளாதிஶயித்துவருகிற திருவபிஷேகத்தை யுடையவனானவென்று பாவம். கருதுமிடம்- தான்நினைக்கிறவிடத்திலே, பொருது- யுத்தம்பண்ணி, தான்நினைத்து ப்ரேரிதவிடத்திலே போய் ஶத்ருக்களை நிரஸ்தாக்கியென்றபடி. கைநின்ற- 'ஸுதர்ஶநம்ஸநாதநம்' என்னுமாப்போலே மீண்டு திருக்கையிலேவந்துநின்றதான, ஸேநாபதியாயியானவென்று தாத்பர்யம், சக்கரத்தன்- சக்ரத்தையுடையவனான, புனல்- ஜலமென்ன, மைந்நின்றவரை- நீலம் ஸ்திரமாய்நின்ற பர்வதமென்ன,

மூ— மைந்தின்றவரைபோலுந் திருவுருவ வாட்டாற்றாற்கு* என்னன்றிசெய்தேனோவென்னெஞ்சிற்றிகழ்வதுவே*॥
திகழ்கின்றதிருமார்பிற் றிருமங்கைதன்னோடும்* திகழ்கின்றதிருமாலார்சேர்விடந்தண்வாட்டாறு* புகழ்கின்ற

ஆ— ஸ்ரீவத்ஸவக்ஷ திவ்யாபரணையொவைகளைப் நிரவதிகஸௌந்தர்யவிசிஷ்டனாயிருந்த வாட்டாற்றார்க்கு நானென்ன ஆநுகூல்யவ்ருத்தி பண்ணினேனாகக்கொண்டு தானென்னுள்ளே புகுந்து திகழ்கிறதென்கிறார். ௮॥

(திகழ்கின்ற) தனக்கு திவ்யமஹிஷீ ஸமஸ்தைகேஸ்வரியான பெரியபிராட்டி, சேர்விடந்திருவாட்டாறு, தன்திருவடிகளில் கைங்கர்யைகரஸ்ஸமே புகழாகவுடையனாயிருந்த பெரியதிருவடி தனக்கு திவ்யவாஹநமும் ஆஸ்ரிதவிரோதிநிரஸநைகபரணமும், இங்ஙனேயிருந்துவைத் தென்னுடைய நிகஷத்

இ— தாத்பர்யமருளிச்செய்கிறார் (நிரவதிகேத்யாதியால்) த்ருதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நானென்னவித்யாதியால்) பண்ணினேனாகக்கொண்டென்றது- பண்ணினேனாக ஆரோபித்துஎன்றபடி. நான்ப ண்ணினதாகவோர் ஆநுகூல்யவ்ருத்தியையுங் காணேனென்றபடி. இத்தால் கீழ்த்தம்முடைய ஸங்கதிகளைச் சொல்லியிருந்தவ ரிப்பாட்டிலே யவற்றுக்கநாரூபமான ஹேதுவென்பக்கல் காணேனென்றுகொண்டு அவற்றினுடைய நிரதிசயஸ்வாரஸ்யத்தைப் யநுஸந்திக்கிறாரென்று ஸங்கதியும்ஸூசிதை. ௮॥

✳ ஒன்பதாம்பாட்டு. ✳

ப்ரதமபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தனக்கித்யாதியால்) புகழ்கின்றபுள்ளூர்தி என்கிறத ற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தன்திருவடிகளித்யாதியால்) போரரக்கர்குலங்கெடுத்தானென்கிறதற்குப் புள்ளூர்தியென்கிறதோடு ஸமபிவ்யாஹாரத்தால் ஸித்திக்கிறவர்த்தத்தை யருளிச்செய்கிறார் (ஆஸ்ரிதவிரோ தீத்யாதியால்) இகழ்வின்றியென்கிறதற்கு இப்பாததுயத்தோடு ஸமபிவ்யாஹாரத்தால் ஸித்தவர்த்தத் தை யருளிச்செய்கிறார் (இங்ஙனேயிருந்துவைத்தித்யாதியால்) இத்தால் கீழ்ப்பாட்டிலே என்பக்கல் ஆநு ரூபஹேதுவின்றியே யிருக்கச்செய்தே யெனக்கு மஹாஸங்கதியையுண்டாக்கினானென்று ப்ரீதரானவ ரிப்பாட்டிலே தனக்கு நிரதிசயகல்யாணங்களான விபூதிகளிருக்கச்செய்தே யதிமோஹனனவென்

ப—ஸ்ரீபநேத்யாதியான் வ்யக்தமென்றபடி. போலும்- ஸத்ருஸமாகாநின்றுள்ள. நீலாரத்நமஹாமேகவர் ணமென்ன, ஜம்பூநதாபவர்ணமென்ன, இவைகளுக்கு ஸத்ருஸமாகாநின்றுள்ள என்று வர்த்தம், திருவுருவு- திவ்யரூபத்தையுடையவனான, வாட்டாற்றார்க்கு- திருவாட்டாற்றிலேயிருக்கிற வெம்பெருமா னுக்கு, என்னன்றிசெய்தேனோ - என்னநன்மைசெய்தேனாக, என்னவாநுகூல்யாசரணம் பண்ணினேனாக, பெரியவுடையாரைப்போலே ப்ராணவர்ப்பணமாக வடிமைசெய்தேனாகவோ சிறுத்திருவடியைப்போலே 'த்ருஷ்டா ஸீதா'வென்று வந்தேனாகவோஎன்றுகருத்து. என்னெஞ்சிற்றிகழ்வது- என்னுடைய நெஞ்சிலேதான் வந்துவிளங்குகிறது, திகழுகை- விளங்குகை, இப்படி என்னெஞ்சிலேதான் வந்துவிளங்குகைக்கநுரூபமாக நான்தனக்குப்பண்ணின வாநுகூல்யாசரணம் ஒன்றுங்காணேனென்றபடி. ௮॥

திகழ்கின்ற- ஸாமாதிகஸௌந்தர்யத்தாலே விளங்காநின்றுள்ள, திருமார்பில்- வக்ஷஸ்ஸ்தலத்தில், திருமங்கை தன்னோடும்- லக்ஷ்மீயாகிற யுவதியோடேயுங்கூட, மங்கை- யுவதி, தன்னென்றுஸ்வாமித்வம், திகழ்கின்ற- விளங்காநிற்கிறவனான, திருமங்கைதன்னோடுமென்கிறவிடத்தில் உபஸ்வபத்தால் 'ஆஸ்ரிதவத்ஸலோஹமனை நாவி ஸ்ரேயாதநந்தநர் ஸ்தனாய' என்கிறகணக்கிலே ஸ்வஸௌந்தர்யாதிஸகிதாய்த்திருக்கிறவன் லக்ஷ்மீஸாஹி த்யத்தாலும் விளங்காநிற்கிறானென்றுகருத்து. திருமாலார்- லக்ஷ்மீவிஷயத்தில் வ்யாமோஹனான வாஸுதேவா ஷன், மாலென்றுவ்யாமோஹன், சேர்விடம்- சேர்ந்திருக்கிறஸ்தலம், நித்யவாஸம்பண்ணுகிற ஸ்தலமென்றபடி. தண்வாட்டாறு- ஸீதளமான திருவாட்டாறு, ஆதிரமணீயமான திருவாட்டாறென்றபடி. சேர்விடமாவது தண்வாட்டாறுஎன்று காரகக்ரியாக்ரமமாக விங்கு வாக்யஸேஷமாகிறது, லக்ஷ்மீஸாஹித்யஸம்பந்நனானவ னுக்கு நித்யவாஸம்பண்ணும்படி ப்ரமாணயோக்யமாயிருக்கிறது திருவாட்டாறென்கையாலே லக்ஷ்மீபதி யத்தோடு ஸாதநபாவாஷாணமாயிருக்கிறது அவனுக்குத் திருவாட்டாற்றிலிருப்புமென்று கருத்து. இப்படி காரகக்ரியாக்ரமமாக ஸமஸ்தவஸ்துமான விபவாதிவைபவ ஸ்தித்யாதிமாயிப்படி தனக்கு கல்யா ணகுணவிபூதிகளிருக்கச்செய்தே ஹேயனானவென்னெஞ்சிலே ரஸிபாகின்றானென் றுதாரதையத்தோடு ஸம்யிக்கிறது, புகழ்கின்ற- கீர்த்திகளெல்லாம் தன்னிடத்திலே நின்றிருக்கிறவனான 'ஜாஸஸவாஸதநந்'

மூ-பெரியார்க்காட்பட்டக்காற்பெறுதபயன்பெறுமாறு* வரிவாள்வாயரவணைமேல்வாட்டாற்றான்காட்டினனே*
காட்டித்தன்கனைகழல்கள் கடுநரகம்புகலொழித்த* வாட்டாற்றெம்பெருமானைவளங்குருகூர்ச்சடகோபன்*
பாட்டாயதமிழ்மாலை யாயிரத்துளிப்பத்தும்* கேட்டாரார்வானவர்கள் செவிக்கினியசெஞ்சொல்லே*।௧௧॥
ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஆ — பவர்களுக்கினியில்லையென்றுஞ் சிறியபேறுகளைக் கொடுப்பனென்னுமிடம் வரிவாள்வாயரவணைமேல் வாட்டாற்றிலெண்பக்கலிலே காட்டியருளினனென்கிறார். ।ம।

(காட்டி) அபூர்வருமமரர்களித்திருவாய்மொழியைக்கேட்டா லென்படுவாரோவென்கிறார். ॥௧௧॥

திருக்குருகைப்பிரான்பிள்ளான்திருவடிகளேசரணம்.

இ — பாகவதர்களுடைய ஸ்வாமித்வத்தை யறிந்தால் ஸம்ஸாரத்திலே யெனக்கிப்போது க்ருதக்ருத்யனாயிற்றேன் றுவீதராகிறாரென்று ஸமாப்தியும் ஸம்பூர்ணமாயிற்று. விரக்தப்ராப்திகமாயிருந்த ஸாக்ஷாத்காரம் க்ருதக்ருத்ய திகளாலே ஸந்தோஷமாரம்பத்துகை ஸ்வாமிபக்ஷபாதம் பண்ணுகிறது. ॥யு॥

✻ நிகமனம். ✻

தாஸீபவாத்துக்குத் தாஸ்யமருளிச்செய்கிறார் (அபூர்வரும் த்ருதீயால்) ॥௧௧॥

---

ஈ — பெரியார்க்கு- பாகவதர்களுக்கு, ஆட்பட்டக்கால்- சேஷபூதரானால், பெறுதபயன்பெறுமாறு- துர்லபமானஸுகத்தைப்பெறும்ப்ரகாரத்தை, பாகவதர்களுக்கு அடிமைப்பட்டால் துர்லபமான ஸுகத்தை யெல்லாம் பெறுவாரென்று சாஸ்த்ரங்களில் சொல்லுகிற வசனத்தையென்றபடி. இதற்குக் காட்டினனென்கிறதோடே யன்வயம். வரிவாள்வாயரவணைமேல்- வரியையும் வாளையுமுடைத்தான நாமசயனத்தின்மேலே, வரி- ரேகை, வாள்- காந்தி, வரிவாள்வாயென்று அம்சஸ்தானமாய் இதுக்கு ஆவுஸவத்தோடே ஸாகல்யவிசேஷணமாயிருக்கிறது, ஸ்வஜாத்யநுகுணமாகத் திருவுடலிலே ரேகைபரேகை ஒங்களையும் ஜ்யோத்ஸ்நாவிதானதநீய தீப்திஸம்பத்தையுமநேகமணங்களையுமுடைத்தான திருவனந்தாழ்வானுகிற சயனத்தின்மேலேயென்றபடி. வாட்டாற்றான்- திருவாட்டாற்றிலேயிருக்கிறவன், அரவணைமேலே வாட்டாற்றிலேயிருக்கிறவனுவது- திருவாட்டாற்றிலே அரவணைமேலே கண்வளர்ந்தருளுகிறவனென்றபடி. காட்டினன்- என்பக்கலிலே ப்ரத்யக்ஷமாக்கியருளினன், ॥ய॥

தன்கனைகழல்கள்- தன்னுடைய கனைக்கிறகழல்களை, கனைக்கை- த்வனிக்கை, கழல்- திருவடி, நூபுராதிபூஷணசோபிதமான தன் திருவடிகளை யென்றபடி. காட்டி- எனக்கு ஸாக்ஷாத்கரிப்பித்தருளி, கடுநரகம்- கடுநரகத்தை, விவேகிகளுக்கு ஸாதகஸஜாதீயவஸ்துஸமான ஸம்ஸாரமாகிற நரகத்தையென்றபடி. புகல்- ப்ரவேசிக்கையை, ஒழித்த- உபஸம்ஹரித்தவனை, எனக்கு ஸம்ஸார நிவ்ருத்தியை நிவர்த்திப்பித்தவனை யென்றபடி. வாட்டாற்றெம்பெருமானை- திருவாட்டாற்றிலே யெழுந்தருளியிருக்கிற ஸ்வாமியைக்குறித்து, இதுக்குப் பாட்டாயவென்கிறத்தோடே யன்வயம். வளங்குருகூர்- அழகிய திருநகரியையுடையவரான, வளம்- அழகியது; திருநகரிக்கு நிர்வாஹகரானவென்றபடி. சடகோபன்பாட்டாய- ஆழ்வாருடையபாட்டுக்களான, அவருடைய வசனத்திலே திவ்யஸமாய்க்கொண்டு மாநஸாக்ஷமாயாரூபங்களாய் 'வாக்யமேவதூபாரம்' என்னும்படி யிருக்குமவையானவென்றபடி. தமிழ்மாலை- த்ராவிடஸந்தர்ப்பரூபமான, ஆயிரத்துள்- ஸஹஸ்ரத்துக்குள்ளே, செவிக்கினிய- கர்ணாம்ருதங்களான, இனியது- மதுரமானது, செஞ்சொல்- செவ்வியசொல்லான, காரணரூபமும் ஸகாரணமாய்ச்சொன்னவையானவையாலே ஸுஜஸப்தஸங்க்ரஹங்களான என்றபடி. ஸாவயவத்வமான என்கை, இப்பத்தும்- இந்தப்பத்துப்பாட்டுக்களையும், வானவர்கள்- நித்யஸூரிகள், கேட்டாரார்- கேட்டு த்ருப்தராகார், இத்தையவர்கள் கேட்கத்தொடங்கின் இன்னஞ்சொல்லின்னஞ்சொல்லென்னை யிருப்பாரத்தனை- யொழிய ஒருக்காலும் த்ருப்தராகாரென்றபடி. ॥௧௧॥

ஜ்ஞானவைராக்யநிஷ்டாநிஸேவதி ஸ்ரீவேதவ்யாஸராமாநுஜதேசிகாய நமஃ.

ஸ்ரீ:.

த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளீ.

(அருள்பெறுவார்.)

சக்ராங்க: கேசவாக்யோ நிரவதிகதய: ஸ்ரீமந் நாராயணாக்ய:
ஸேநாங்கோ பாரதாஜௌ ஸுரபிததுளஸீ வாஸநீயாங்க்ரிபத்ம: ।
அம்போஜாக்ஷோ கோவிந்த: ததுளஸீ ஸ்ரக்ஸ்ரீவத்ஸ வக்ஷா:
ஸ்ரீவாட்டார் தீர்த்தே ஸ்வபக்ஷ ஸத்வதவிதரணே தக்ஷிணோ நாதோஹமாஷீத் ॥ ௬௰௱

(சக்ராங்க:) ஆழியான் அருள்தருவான் - திருவாழியைத் திருக்கையிலேயுடையனாகையாலும், (கேசவாக்யோ நிரவதிகதய:) கேசவனெம்பெருமானை - நிரவதிகதயனாகையாலும், ஆஸ்ரயத்தாலே ஸ்வாமித்வம் ஸங்க்ருஹீதம், (ஸ்ரீமந் நாராயணாக்ய:) நண்ணினம் நாராயணனை - கீழ்ச்சொன்ன ஸ்வாமித்வத்துக்கு விவரணம், ஸ்ரீமானாய் ஸர்வாதாரனாய் ஸர்வநியந்தாவுமாகையாலும், (ஸேநாங்கோ பாரதாஜௌ) பாரதத்துப்பாண்டவர்க்காய்ப் படைதொட்டான் - பாரதயுத்தத்திலே ஆயுதமெடேனென்று ப்ரதிஜ்ஞை பண்ணினவன் ஆஸ்ரிதரான பாண்டவர்களிடத்தில் ஸ்நேஹத்தாலே ப்ரதிஜ்ஞையையழித்து ஆயுதமெடுக்கையாலும், (ஸுரபிததுளஸீ வாஸநீயாங்க்ரிபத்ம:) தேனேறுமலர்துளவந்திகழ்பாதன் - தயாஸம்பந்தியான திருத்துழாய்மலராலே விளங்காநிற்கிற திருவடிகளையுடையவனாகையாலும், (அம்போஜாக்ஷ:) தாமரைக்கணனென்னம்மான் - ஸர்வஜநஸ்ப்ருஹங்களான திருக்கண்மலரையுடையனாகையாலும், (கோவிந்த:) கோவிந்தன்குடிகொண்டான் - ஆஸ்ரிதவாத்ஸல்யனாகையாலும், (ஸாயக:) துளப்விரையேறுதிருமுடியன் - ஸுரபிததுளஸீதாமாலங்க்ருத கிரீடத்தாலே ஸுசிதமான ஸௌஸீல்யத்தையுடையனாகையாலும் (ஸ்ரீவத்ஸவக்ஷா:) திகழ்கின்றதிருமார்பில் திருமங்கைதன்னோடும் - பெரியபிராட்டியாரைத் திருமார்பிலேயுடையனாகையாலும், ஆஸ்ரயத்தாலே 'வரிவாள்வாயரவணைமேல்' என்று மேலிற்பாட்டிற்சொல்லுகிற ஸேஷஸாயித்வம் ஸங்க்ருஹிக்கப்படுகிறது, இப்படிகளாலே திருவாட்டாற்றெம்பெருமான் ஆஸ்ரிதர்க்கு ஸ்வபதப்ரதானத்திலே மிகவும் ஸமர்த்தனையுடையனாயிருக்கிறானென்று "அருள்பெறுவார்" என்கிற தஸகத்திலே ஆழ்வாராலே யறுதியிடப்பட்டதென்கிறார். ॥௬௰௱

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேஸிகாய நம:.

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

பத்தாம்பத்தில் ஆறாந்திருவாய்மொழி முற்றிற்று.

# ஏழாந்திருவாய்மொழி.

அ— (செஞ்சொற்கவிகாள்) தான்சொன்னபடிசெய்யக்கடவனாகச் சமைந்துகொண்டு தம்முடையதிருவுள்

ஏழாந்திருவாய்மொழி.

இ— இப்படி ஸர்வேஸ்வரன் தமக்குத்திருநாட்டைத்தந்தருளுகையிலே க்ருதஸங்கல்பனாய்த் தமக்கு வாரதிருப்பத் தம்முடைய வாஜ்ஞாப்ரதீக்ஷனாயிராநின்றானென் றவனுடைய ஸம்விதான தீவ்ரதரத்தை யநுஸந்தித்தவாழ்வார் தமக்கு அபேக்ஷிதமாயிருந்த மோக்ஷஸாம்ராஜ்யத்தை யாத்ருக்ஷணத்திலே கைகொண்டவிளம்பிதமத்திலே புறப்படுகை யுசிதமாயிருக்க வதுசெய்யாதே செஞ்சொற்கவிகாளித்யாதியாலே கவிகளைக்குறித்துச் சிலவுபதேஸம்பண்ணுகை யஸங்கதமன்றோவென்ன வஸ்தரிப்பிக்கிறார் (தான்சொன்னபடியேபித்யாதியால்) சமைந்துகொண்டுஎன்றது - ஸர்வஜ்ஞயனாய்க்கொண்டென்றபடி. தம்மோடுகலந்தகலவியாலேயென்றது - இவர்திருமுடியிலே தன்திருவடிகளைவைத்துத் திருவுள்ளத்திலே வாஸமாகப்புகுந்திருந்து 'விரைகுழுவநறுந்துளபம்மெய்நின்றுகமழு'மென்னும்படி இவருடைய ஸரீரத்தோடு அந்த:கரணத்தோடு மற்றுமுள்ளவவயவங்களோடு வாசியற வத்யந்தாபிநிவிஷ்டனாய்க்கலந்த விலக்ஷணஸம்ஸ்லேஷத்தாலேயென்றபடி. ஸர்வேஸ்வரன்தனக்குச் அபேக்ஷிதமான பரமபோக்யதாமத்தைத்

மூ— தானேயாகிநிறைந்தெல்லாவுலகுமுயிருந்தானேயாய்த்* தானேயானென்பானாகித்தன்னைத்தானேதுதித்தெனக்குத்* தேனேபாலேகன்னலேயமுதேதிருமாலிருஞ்சோலைக்* கோனேயாகிநின்றொழிந்தானென்னைமுற்றுமுயிருண்டே* ॥௨॥

---

ஆ—(தானேயாகி) இப்படியென்னுயிரைமுற்றுமுண்டு தானேயாகி ஸர்வஸ்வதானேயாய்த் திருமலே ஸர்வேஶ்வரனுமாபென்னுயிரை மாளஸாஜித்தும் த்ருப்தனாகாதே நான்சொல்லுஞ்சொற்களைக்கொண்டநுபவிக்கைக்காக வென்னைக்கொண்டு திருவாய்மொழிபாடச்சொல்லுவித்து இப்படியேயன்றேயுள்ள ஸம்ஶ்லேஷந்தனக்கினிதாகைக்காக வெனக்குத்தன்னையே நிரவதிகபோக்யமாக்கியருளினான், திருமாலிருஞ்சோலைமலை நாயனாய் நின்ற நிலையவனுக்கு ஸஹஜமாயிற்றென்றுகொண்டு ப்ரீதிப்ராசுர்யத்தாலே சொல்லுகிறார். ॥௨॥

(என்னைமுற்றும்) என்னைஸாஜித்தருளுகிறானிந்த வைபமான ப்ரக்ருதியினுள்ளேபுகுந்து

---

இ—அதாவது:— என்னுடைய தேஹேந்த்ரியமந:ப்ராணாதிகளிலே ஓரவயவமும்விடாதென்றபடி. ॥௧॥

✳இரண்டாம்பாட்டு.✳

என்னைமுற்றுமுயிருண்டென்கிறத்தை அடியிலே பணிக்கிறார் (இப்படி இத்யாதியால்) எல்லாவுலகும் இத்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இதனாலே இத்யாதியால்) அதீதபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னுயிரை இத்யாதியால்) எனக்குத்தேனே இத்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இப்படியன்றேயுள்ள இத்யாதியால்) ஒருத்தனை ஸம்ஶ்லேஷமாய்விட்டால் தனக்கு ரஸாவஹமாகாதொழியுமென்று பார்த்து அதற்காகவெனக்கும் தன்பக்கலிலே நிரவதிகஸ்நேஹமுண்டாம்படி தன்னையெனக்கு நிரவதிகபோக்யமாக்கினானென்றபடி. திருமாலிருஞ்சோலை இத்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (திருமாலிருஞ்சோலைமலைநாயனாய் இத்யாதியால்) நாயன்- நாயகன். ப்ரீதிப்ராசுர்யத்தாலேயென்றது- ஸமதிப்ராசுர்யத்தாலேயென்றபடி. இத்தால் கீழ்ப்பாட்டிலே தம்மோடுகலந்தகலவியைப்பேசி யநுபவித்தவரிப்பாட்டிலே தம்மோடு கலந்தவநந்தரம் தம்மைக்கொண்டு கவிபாடுவித்து க்ருதக்ருத்யனாயிராநின்றானென்று ப்ரீதராகிறாரென்று ஸங்கதியுஞ்சொல்லிற்றாயிற்று. ॥௨॥

✳மூன்றாம்பாட்டு.✳

என்மாயவாக்கையிதனுட்புக்கு (புகுந்து) என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னைஸாஜித்தருளுகி

---

ஈ—றானென்றபடி. ஆதலால் உயிகாத்தாட்செய்மினென்று கீழோடே ப்ரஸங்கிக்கிறது. ॥௩॥

என்னை- தனக்கு நிரதிஶயபோக்யனானவென்னை, உயிர்- ஆத்மாவை, அகரேகவசனம். என்னாத்மாவையென்றபடி. யதா- "ஜ்ஞாநீத்வாத்மைவமேமதம்" மென்கிறபடியே தனக்குப்ராணமாயிருக்கிறவென்னையென்றபடியாகவுமாம். முற்றும்- நிஶ்ஶேஷமாக, விஸ்வாஸபாத்ரத்வக்ருத்தாவான இவர் ஸ்வரூபமும் போக்யதாதிஶயத்தாலே ஸர்வஸ்வமாய்க்கொண்டு, தன் ஸ்வரூபத்திற்காட்டிலு மேன்மைப்பட்டதோற்றுகிறதென்று கருத்தாலே முற்றுமென்கிறபடிம். உண்டு- அநுபவித்து, தானேயாகி- ஸம்ஶ்லேஷம் அதிஶயமாயிருக்கச்செய்தேயும் தானேயிதற்கு போக்தாவாய் ஸம்ஶ்லேஷம்தனக்கே ஸுகமென்றிருக்குமவனேயென்றபடி. நிறைந்து- அத்தாலே பரிபூர்ணனாய், ஸர்வஸ்வதாயகனாயென்றபடி. எல்லாவுலகும்- ஸகலலோகங்களும், உயிரும்- சேதநாசேதநப்ராணிகளும், தானேயாய்- ஸர்வஸ்வஶரீரகனாயென்றபடி. என்னைய நுபவிக்கப்பெறுகையாலேயிப்போது ஸர்வேஶ்வரனானவனென்றபடி. யானென்பான்- நானென்றுசொல்லப்படுகிறவன், தானேயாகி- தான்தானேயாய், ஸஹஸம்பந்தஸம்வதமநபதி தானேயாம்படி ஶரீரகனாயென்றபடி. தன்னை- உபயவிபூதிவிஶிஷ்டனான தன்னை, தானேதுதித்து- ஶரீரகனான தானேஸ்துதித்து, வேதநர்செய்கிறவ்யாபாரத்திலும் ப்ரயோஜககர்த்ருத்வம் இவனேயிறே. எனக்கு- தன்னாலே விஷயீகரிக்கப்பட்டவெனக்கு, தேனே- தேனாகவே. இதற்கு ஆகியென்கிறத்தோடே அந்வயம். ஸ்வகாரணத்தால் தேன்போலேயிருக்கையன்றிக்கே தேன்தானேயாய் என்றபடி. பாலே- பாலாகவே, கன்னலே- இக்ஷுஸாரமாகவே, அமுதே- அம்ருதமாகவே, ஆகி என்றநுஷங்கித்தநுப்பது. திருமாலிருஞ்சோலைக்கோனேயாகி- திருமாலிருஞ்சோலையென்கிற திருமலைக்கு நாயனேயாகி, நின்றொழிந்தான்- நிலைநின்றுவிட்டான், என்னோடு ஸம்ஶ்லேஷிக்கைக்காகத் திருமாலிருஞ்சோலைக்கு நாயனாய்நின்றநிலை ஸஹஜமாய் க்ருதக்ருத்யனானானென்றபடி. ॥௨॥

மூ—என்னைமுற்றுமுயிருண்டே னென்மாயவாக்கையிதனுட்புக்கு[புகுந்து]* என்னைமுற்றுந்தானேயாய்நின்றமாயவம்மான் சேர்* தென்னன்திருமாலிருஞ்சோலைத்திசைகைகூப்பிச்சேர்ந்தயான்* இன்னம்போவேனேகொலோவென்கொலம்மான்திருவருளே* ‖ க ‖

ஆ—என்னை ஸ்ருஜித்து என்னைமுற்றவுந்தானேயானவன், இப்பேறுபெறுகைக்கு ஹேதுவென்னவென்னில்? அவன்சேர்தென்னன் திருமாலிருஞ்சோலைத்திசை கைகூப்பப்பெற்றேன், என்னுடனிப்படியே கலந்துபரிமாறியும் பின்னையுங்கலந்து பரிமாறுதானாயடிதொட்டுங்கலந்து பரிமாறுகையிலே பாரித்தநாளாநின்றான், இன்னமிதற்குமேலொருஸம்ஶ்லேஷமுண்டோ திருவுள்ளமென்தானென்கிறார். ‖ க ‖

இ—(ஈனிதவாக்யால்)ப்ரக்ருதயினுள்ளேயென்கிறது-ப்ரக்ருதிபரிணாமமான ஶரீரத்துக்குள்ளேயென்றபடி. என்னைமுற்றுமுயிருண்டேயென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னைஸ்ருஜித்துஎன்று) கீழ்மேலுள்ள பாட்டுகளில்போலே யிப்பாட்டிலும் திருமாலிருஞ்சோலையிலே நின்றருளுகிறானவனென்றிவ்வளவும் சொல்லாதே திசைகைகூப்பினதைச் சொல்லுவானேனென்ன வவதரிப்பிக்கிறார் (இப்பேறிதவாக்யால) சேர்ந்தயானென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னுடனிப்படியிதவாக்யால்) இன்னம்போவேனேகொலோ வென்கொல்லென்கிறவிடத்தில் ஸ்வாபிப்ராயமருளிச்செய்கிறார் (பின்னையுமிதவாக்யால) அடிதொட்டுமென்றது- அடிதொடங்கியென்றபடி. இத்தால்கீழ்ப்பாட்டிலே தம்மைக்கொண்டு கவிபாடுவித்துக்கொண்டு க்ருதக்ருத்யனானென்று வீற்றிருந்தவரிப்பாட்டிலே பின்னையுமுத்தரோத்தரஸம்ஶ்லேஷத்துக்கு ப்ரார்த்திக்கிறானென்று வீற்றிருக்கிறானென்று ஸங்கதியும்ஸூசிதை. தாரீயவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இன்னமிதற்குமேலுமிதவாக்யால்) ‖ க ‖

ஈ— என்- தன்னுடையதான, எனக்கு ஜ்ஞாநாதிகளையுண்டாக்குகைக்கு ஹேதுவான வென்றபடி. மாயமாயாமயமான, ப்ரக்ருதிபரிணாமரூபமான என்றபடி. ஆக்கையிதனுள்- இந்த ஶரீரத்துக்குள்ளே, ஆக்கை- ஶரீரம், ப்ரத்யக்ஷஸித்தஸ்வதோஷமலிநமான ஶரீரத்துக்குள்ளே என்றபடி. புகுந்து- விடாய்த்தவன் அம்ருதஸரஸ்ஸைக்கண்டால் ப்ரவேசிக்குமாப்போலே ப்ரவேசித்து. என்னை- தனக்குஶேஷபூதனானவென்னை, உயிர்- ஆத்மாவை, என்னுடைய வாத்மாவையென்றபடி. "ஜ்ஞாநீத்வாத்மைவமே மதம்"மென்கிறபடியே தனக்குயிரானவென்னை யென்றுமாம். முற்றும்- நிஶ்ஶேஷமாக, உண்டு- அநுபவித்து, என்னை- வதஶரீரஸம்பந்தியானவென்னையும், முற்றவும்- ஸ்வஸத்தையும், யென்னதென்றபிமானிக்கப்படுகிற தேஹாதிகளையும், குறித்து என்றொருவஸ்துஸாமாந்யமாத்ரம். தானேயாய்- தானே அபிமானியாய், இவ்விரண்டையும் தான் ஸ்வாதீநமாகஸம்ஶ்லேஷிக்கையாலே தன்னில்காட்டில் ப்ருதக்காகக்காண வொண்ணாமையாலிவையிரண்டும் தானேயாயென்றபடி. நின்ற- இத்தாலே விடாய்கெட்டு ஸுஸ்தனான, மாயவம்மான்- இப்படியாஶ்சர்யசேஷ்டிதனான ஸர்வேஶ்வரன், சேர்- தனக்கு வாஸஸ்தானமாகவந்து சேர்ந்திருக்கிற, தென்னன்- தக்ஷிணதேஶத்துக்குநல்லதான, தக்ஷிணதேஶாலங்காரபூதமான என்றபடி. நல் என்கிறவிடத்தில் லகாரலோபமும் னகாரதேஶமும். யத்வா—தென்னனென்று தக்ஷிணதேஶத்து ராஜாவைச்சொன்னபடி. தென்னன் திருமாலிருஞ்சோலை- தக்ஷிணதேஶராஜாவினுடைய திருமாலிருஞ்சோலையினுடைய, அவனாலே பரிபாலி[வாஹி]தமான திருமாலிருஞ்சோலையினுடைய என்றபடி. திசை- திக்கைக்குறித்து, கைகூப்பி- அஞ்ஜலிபண்ணி, சேர்ந்தயான்- அவனையிப்படிக்கிட்டப்பெற்ற நான், இன்னம்போவேனேகொலோ- இதற்கு மேலும்போவேனேபோ? நானிவ்வளவில் பர்யவஸியாதே இதற்குமேலுஞ்சில ஸம்ஶ்லேஷத்தைப்பெறவு ப்ரார்த்திக்கிறவன்தானேயோ இதற்குமேலுமொரு ஸம்ஶ்லேஷப்ரகாரமுண்டோ என்று கருத்து. அவதாரணத்தால் என்னையெம்பெருமானிதுக்குமேலும் சில ஸம்ஶ்லேஷத்தைப்பெறவு ப்ரார்த்திக்கிறவனாயே நிர்மித்தானோ என்றபடி. இதுக்குமேலில்லாதபடியான ஸம்ஶ்லேஷத்தைப்பெற்று நான் பரிபூர்ணனாயிருக்க விவனிதற்காகவிங்ஙனே யாத்ரோத்தரம்ஹிமிவேசிக்கிறானென்கிறார்மேல். அம்மான்திருவருள்- ஸர்வஸ்வாமியானவனுடைய க்ருபையானது, அவனுடையவபிநிவேசமானதென்றபடி. என்கொல்- என்னவாயிருக்கிறது, இனியெதற்காக விவ்வபிநிவேசமென்றபடி. ‖ க ‖

மூ—என்கொலம்மான்றிருவருள்களுலகுமுயிருந்தானேயாய்* நன்கென்னுடலங்கைவிடான் ஞாலத்தூடே நடந்துழக்கித்* தென்கொடிசைக்குத்திலதமாய்நின்ற திருமாலிருஞ்சோலை* நங்கள்குன்றங்கைவிடா னண்ணாவசுரர்நலியவே* ॥ச॥

ஆ—(என்கொல்) என்னுடைய ப்ரக்ருதியினுள்ளேபுகுந்து இவ்வாத்மாவை ஸ்ருஜித்தருளுகையுமன்றியே ஸர்வேஶ்வரனுமிருந்தான், என்னுடைய ப்ரக்ருதிதன்னையுங்கூட தனக்கு போக்யமாகக்கொண்டொருக்ஷணம் கைவிடுகிறிலன், இப்படியென்னோடுள்ள ஸம்ஶ்லேஷம்பெறுகைக்கீடான தேஶமேதோவென்று தேடிக்கொண்டு திருமலையிலேவந்துபுகுந்துதான் கருதினபடியே யங்கே ஸம்ஶ்லேஷித்து ஸ்ரீதனு யிந்த ஸம்ருத்தியெல்லாம் விளைவித்தது திருமலையிறேயென்றுகொண்டு திருமலையையு மென்னுயிருமுடலும்போலே தனக்கு போக்யமாகக்கொண்டு கைவிடுகிறிலன், என்னுயிரையுமுடலையுந் திருமலையையுமநுபவித்தது ஸ்ரீதனுனன் ப்ரதிகூலரிந்த ஸம்ருத்தியைக்கண்டு பொறுக்கமாட்டாதே தரைப்படும்படி ஸ்ரீதனுனென்கிறார். ॥ச॥

*நாலாம்பாட்டு.*

இ—உலகுமுயிருந்தானேயாய் நன்கென்னுடலங்கைவிடானென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னுடையவித்யாதியால்) அன்றியேயென்கிறதற்கு விடுகிறிலனென்கிறத்தோடே பர்யம், இத்தாலகீழ்ப்பாட்டிலே யோக்யமான தம்முடையஶரீரத்திலே புகுந்தானென்று ஸ்ரீதரானவரிப்பாட்டிலே யப்படியதிலேபுகுந்த மாத்ரமன்றிக்கே யதைத்தனக்கு போக்யமாகப்பத்திபொருக்ஷணமும் விடமாட்டுகிறிலனென்றும் ஸ்தலஸம்ஸர்க்கத்துக்கு நிதாநமாயிற்றென்கிற ஸ்ரீதியாலே திருமாலிருஞ்சோலைமலையையும் விடமாட்டுகிறிலனென்றும் சொல்லியநுபவிக்கிறாரென்று ஸங்கதியும்ஸமுச்சயமாயிற்று. ஞாலத்தூடேநடந்துழக்கி என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இப்படிஎன்னோடுள்ளவித்யாதியால்) நங்கள்குன்றமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தான்கருதினபடியேவித்யாதியால்) கைவிடானென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இந்த ஸம்ருத்தியெல்லாமித்யாதியால்) வாக்யத்வயத்துக்கும் ஸமுசித தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னுயிரையுமித்யாதியால்) நண்ணாவசுரர்நலிய என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ப்ரதிகூலரித்யாதியால்) ।ச।

ஶ—உலகும்- லோகங்களும், உயிரும்- அந்தலோகங்களிலேயிருக்கிற ப்ராணிகளும், தானேயாய்- தத்ஸம்ஸ்ருஷ்டங்களுக்குத்தானே ப்ரயோஜனவிஷயனும்படி தத்ஸப்ரகாரகனுமென்றபடி. ஸர்வகாரணத்தாலவனுக்கு ப்ராயோஜ்யவிவக்ஷிதம், ஸர்வேஶ்வரனு யிருந்துவைத்துஎன்றபடி. நன்கு- நன்மையான, ஸர்வஸ்வாஸ்ய போக்யமானவென்றபடி. என்னுடலம்- என்ஶரீரத்தை, கைவிடான்- விடமாட்டுகிறிலன், ஞாலத்தூடே- ஸம்ஸ்த்ருத்திலே, நடந்து- ஸஞ்சரித்து, உழக்கி- எங்குமொக்கமிதித்துப்பார்த்து, உழக்குகை- எங்குமொக்கமிதித்துப்பார்க்கை, ஆழ்வாரோடு ஸம்ஶ்லேஷம்பண்ணுகைக்கீடான தேஶமேதோவென்று தேடிப்பார்த்துஎன்று வ்யாக்யானம், இதுக்கு நங்கள்குன்னங் கைவிடானென்கிறத்தோடே பர்யம். த்ரிவிக்ரமனுப் ஸம்ஶ்லேஷங்களைத் தம்மைப்பெறுகைக்கீடான தேஶமெதோவென்று ஸம்ஶ்லேஷிக்கும்மிதித்துப்பார்த்தபடியாகவினைத்தருளிச்செய்தபடி. தென்கொள்- தெற்காகக்கொள்ளப்படுகிறதான, திசைக்கு- திக்குக்கு, தெற்கென்று ப்ரஸித்தமானதிக்குக்குஎன்று வ்யாக்யானம், திலதமாய்நின்ற- திலகமாய்நின்றதான, நித்யாலங்காரபூதமானஎன்றபடி. திருமாலிருஞ்சோலை- திருமாலிருஞ்சோலையாகிற, நங்கள்குன்றம்- நம்முடைய ஸம்பந்தத்தை, அவன்கருதினபடியே அவனுக்கு நம்மோடு ஸம்ஶ்லேஷத்தையுண்டாக்கினதான திருமலையையென்றபடி. நண்ணாவசுரர்- நண்ணாதவர்களான அஸுரர்கள், நண்ணுகை- கிட்டுகை, தன்பக்கல்விமுகரான ப்ரதிகூலஜநங்களென்றபடி. நலிய- நஶிக்கும்படி, நலிகை- நஶிக்கை, இவனுடைய ஸம்ருத்திகளைக் (கண்டு) கேட்டுப் பொறுக்கமாட்டாதே துக்கவாஹுல்யாலே துஸ்ஸஹம்படியென்கை, கைவிடான்- ஒருக்ஷணமும் விடமாட்டுகிறானில்லை, ஆழ்வார்திருமேனிதனக்கு ப்ராப்யமாகையாலே விடமாட்டுகிறிலன், திருமாலிருஞ்சோலையதுக்கு ப்ராபகமாகையாலே விடமாட்டுகிறிலன் என்றதாயிற்று, அம்மான்திருவருள்- ஸ்வாமியினுடைய க்ருபையானது அவனுடையஸௌஶீல்யமானதென்றபடி, என்கொல்?- என்னாயிருக்கிறது, என்னவாஶ்சர்யமாயிருக்கிறது வென்றபடி. ।ச।

மூ— அருளாயேயென்னம்மானேயென்னும் முக்கணம்மானும்* நருள்கொள்பிரமனம்மானுந்தேவர்கோனுந் தேவரும்* இருள்கள்கடியும்முனிவருமேத்துமம்மான் றிருமலை* மருள்கள்கடியும்மணிமலைதிருமாலிருஞ் சோலைமலையே* ௭

திருமாலிருஞ்சோலைமலையே திருப்பாற்கடலே யென்றலையே* திருமால்வைகுந்தமே தண்டிருவேங்கடமே

ஆ— (அருளாயே) இஸ்ஸம்ருத்தியெல்லாந் திருமலையையாச்ரயித்தன்றே வந்ததென்றுகொண்டு திருமலையைக்கொண்டாடுகிறார். ௭

(திருமாலிருஞ்சோலைமலையே) விளைந்தஸம்ருத்திதானே தென்னிலென்கிறார், திருமாலிருஞ்சோலைமலை- திருப்பாற்கடல்- திருநாடு- திருமலைத்தொடக்கமாகத் தானெழுந்தருளியிருக்குந் திருநகரிகளெல்லாவற்றிலுமுள்ள

✳ ஏழாம்பாட்டு. ✳

இ— தம்மோடவன் ஸம்ச்லேஷித்தவாஸ்யங்களைச் சொல்லியநுபவியாநின்றவ ரிப்பாட்டிலே திருமாலிருஞ்சோலையை யேத்துகை பரமப்ரயோஜனமென்றோவென்ன வருளிச்செய்கிறார் (இஸ்ஸம்ருத்தியெல்லாமித்யாதியால்) ௭

✳ எட்டாம்பாட்டு. ✳

அவன்றமமுடைய திருமேனியில்பண்ணும வ்யாமோஹாதிசயங்களை யநுபவிக்கவந்தவ ரிப்பாட்டிலே ப்ராப்யஸ்தலங்களில் அவனுடைய வ்யாமோஹாதிசயத்தை யநுஸந்திக்கை பரமப்ரயோஜனமன்றோவென்ன விதுக்குத் தாத்பர்யஞ்சொல்லுகைக்காக அவதாரிப்பிக்கிறார் (விளைந்தவித்யாதியால) இப்படி நீர் திருமலையைக்கொண்டாடுகைக்கு அததால்விளைந்த ஸம்ருத்திதானேதென்னிலென்றபடி. இது-என்று ஸம்வாதத்தை நிகமிப்பித்தபடி, ப்ராப்யஸ்தலங்களில் அவனுடைய வ்யாமோஹாதிசயத்தைச்சொன்னது த்ருஷ்டாந்தமென்றுகாட்டுகிறார் (திருமாலிருஞ்சோலையித்யாதியால) பாட்டிலே ப்ராப்யஸ்தலங்களைக்

ம— என்னம்மானே- என்னுடையநாயகனே, அருளாயே- க்ருபையைத்தந்தருளும், ஈகை- தருகை, என் பக்கலிலே க்ருபைபண்ணியருளுமென்றபடி. என்னும்முக்கணம்மானும்- இப்படிச்சொல்லி ஆச்ரயிக்குமவனான ருத்ரனாகியும், இப்படி ஸர்வேச்வரனையாச்ரயித்து தத்ப்ரஸாதத்தாலே ஜகத்ஸ்ரஷ்டாவான ருத்ரனுமென்றபடி. நருள்கொள்- ஜ்ஞானத்தைக்கொண்டிருக்கிற, ருத்ராதிகளுக்கும் ஜ்ஞானப்ரதனும் படி ஜ்ஞாநாதிகனானவென்றபடி. ஒருஸமயத்திலேகலங்கி ஸர்வேச்வரனோடே எதிராடும் ருத்ரனைப் போலன்றிக்கே "யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம்" என்கிறபடியே ஸதாஸர்வகாலமாத்ருஜ்ஞாநமுடையானென்கை. பிரமனம்மானும்- ப்ரஹ்மாவாகிற ஜகத்கர்த்தாவும், தேவர்கோனும்- தேவேந்த்ரனும், தேவரும் - த்ரயஸ்த்ரிம்சத்கோடிஸங்க்யரான தேவர்களும், இருள்கள்- ஸம்சயங்களை, ஸம்சயவிபர்யயரூபமான அஜ்ஞானம், அந்யதாஜ்ஞானம், விபரீதஜ்ஞானம், மிவையாகிற ஸம்சயங்களை யென்றபடி. கடியும்முனிவரும்- ஸ்வாத்மாநுபவத்தாலே நிரஸிக்குமவரான ஸ்ரீவைகுந்தர் ஸம்ப்ருதிகளான திவ்யஸூரிகளும், கடிகை- நிரஸிக்கை, ஏத்துமம்மான்திருமலை- ஸ்துதிக்கும்படியிருக்கிற ஸ்வாமியுடையதிருமலையான, அவனுக்கு ஸ்ரீபோகஸ்தானமானவென்றபடி. மருள்கள்- அஜ்ஞானங்களை, ஸம்ஸாரபாவகங்களாய் தேஹாத்மாபிமானங்களான விரோதிகளையென்றபடி. கடியும்மணிமலை- நிரஸிக்குமதாய் அதிசயபோக்யமானமலை, திருமாலிருஞ்சோலைமலையே- திருமாலிருஞ்சோலைமலையென்கிற திவ்யதேசமே, ஸம்ஸாரநிவர்த்தகமாதலால் ஸர்வப்ராப்யமானமற்றுள்ளவைகளொன்றுக்கு மில்லாதிசயமிலலையென்றபடி.

திருமாலிருஞ்சோலைமலையே- திருமாலிருஞ்சோலையென்கிற திருமலையைத்தானே, திருப்பாற்கடலே- க்ஷீராப்தியைத்தானே, என்தலையே- என்னுடையசிரஸ்ஸைத்தானே, ஒருமாநொடியும்- ஒருக்ஷணமும் ப்ரமாணத்தில ஸம்சயவிபர்யயஸம்பாவனைகளுக்குப்பேர், நொடி- க்ஷணம், க்ஷணத்திலொரு ஸம்சய விபர்யயங்களுமென்றபடி. பிரியான்- விச்லேஷிக்கிறானில்லை, இங்குமுதல்ஸ்தலங்களால ஸம்ஸாரஸம்பந்தரான திவ்யஸூரிகளுடைய திருமாளிகைகளிற்போலே தத்தத்ஸ்தலங்களிலே ப்ராப்ய விசேஷமாய்விட்ட நவஸிக்கினறானென்றுதோற்றும்படி ஸந்நிதிபண்ணி தத்தத்ஸ்தானங்களில் வாஸம்பண்ணுகிறானென்றபடி. இப்படி மேலுங்கண்டுகொள்வது, திருமால்வைகுந்தமே- ச்ரிய:பதியினுடைய வைகுண்டத்தைத்தானே, "ச்ரியாஸார்த்தம் ஜகத்பதி:" என்கிறபடியே பெரியபிராட்டியாரும்தானுமாக நித்யமாயெழுந்தருளியிருக்கிற ஸ்ரீவைகுண்டத்தைத்தானே யென்றபடி. தண்டிருவேங்கடமே- சீதளமான

மே—யெனதுடலே* அருமாமாயத்தெனதுயிரே மனமே வாக்கே கருமமே* ஒருமாநொடியும்பிரியானென்னூழி முதல்வனொருவனே* ॥ அ ॥

ஊழிமுதல்வனொருவனேயென்னுமொருவனுலகெல்லாம்* ஊழிதோறுந்தன்னுள்ளே படைத்துக்காத்துக்

ஆ— ஸம்ஶ்லேஷத்தினால் ஸ்ரீ தனுமாப்போலே யென்னுடையவவயவங்களிலே யோரோரவயவத்தோடுள்ள ஸம்ஶ்லேஷத்தினாலே ஸ்ரீ தனுப் என்னை யொருக்ஷணம்பிரிவில் ஸஹிக்கமாட்டுகிறிலன், ஒருவனுடைய ஸந்நிவேஶம் இருக்கும்படியே யிதுவென்கிறார். ॥ அ ॥

(ஊழிமுதல்வன்) நமக்கிந்தஸம்ருத்தியெல்லாந் திருமலைபாலேவந்த ஸம்ருத்திகிடாய்நெஞ்சே? இனித்திருமலையைக் கைவிடாதேகிடாயென்று நெஞ்சைக்குறித்துச்சொல்லி யிவ்வாழ்வாருடைய நிகமனம்

இ— கணாரவெணத்ருஷ்டாந்தமாக நிர்தேஶித்ததாலே த்ருஷ்டாந்திகத்துக்கு அநந்யகாரித்வம் தோற்றி யத்தாலே ஸாத்ருஶ்யத்ருஷ்டாந்தங்களிற்போலே த்ருஷ்டாந்தாபேக்ஷயா கிஞ்சித்வைலக்ஷண்யம் தோற்றுமென்றுபார்த்து அப்படி வைலக்ஷண்யம்தோற்றாமே யதாஸாத்ருஶ்யம் தோற்றுகைக்காக "ஜானகீக்லேஶஸந்தப்தா ஸமானாத்யந்தயோஷிதா । லோகவிலோபஸ்ஸௌஶ்ரீ ஶ்ரீதேஹஸ்வர்க்கே ஸமாநவி" என்கிற அர்த்தயோஜனா தாலங்காரப்ரகாரத்தாலே த்ருஷ்டாந்தத்ருஷ்டாந்திகங்களை ஸமானமாக நிர்தேஶித்திருக்கிறதென்று கருத்து. இப்பாஸுரத்திலே திவ்யதேஶங்களிரண்டையும் தம்மவயவங்களிலொன்றையும் நிர்தேஶிக்கையாலே பவைமகங்களிலுண்டாம் ஸ்ரீதிவ்யதேஶங்களொன்றிலே யுண்டாகிறதாக விவக்ஷிதமென்று நினைத்தருளிச்செய்கிறார் (என்னுடையவித்யாதியால்) ஒருமாநொடியும் பிரியானென்கிறவிடத்தில் ஸம்பந்தவிஶேஷிக்கிறவர்த்தத்தை யருளிச்செய்கிறார் (ஸம்ஶ்லேஷத்தினாலே ஸ்ரீ தனுவென்று) தாத்பர்யத்துக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (என்னையித்யாதியால்) ॥ அ ॥

## ✳ ஒன்பதாம்பாட்டு. ✳

என்னம்மான்தண்டிருமாலிருஞ்சோலையென்கிற ஸங்க்ஷேபத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நமக்கித்யாதியால்) உடலுமுயிருமங்கவொட்டேனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இவ்வாழ்வாருடையவித்யாதியால்) இத்தால்கீழ்ப்பாட்டுக்களிலே யவனுக்குத்தம்முடைய திருவுடம்பிலுள்ள வ்யாமோஹத்தை யநுஸந்தித்தவரிவன் நம்முடையவிஷயத்திலே இத்தனைவ்யாமோஹமுடையனாயிருக்கையாலே நம்மையிந்தவிஷயத்தோடே

ஈ— ஸ்ரீவேங்கடகிரியைத்தானே, ஸம்ஸாரபந்தமோசகமான ஸ்ரீவேங்கடகிரியைத்தானே யென்றபடி, எனது- ஸ்வீயமான, உடலே- ஶரீரத்தைத்தானே, ஒருமாநொடியும்பிரியானென்று பரத்வஸந்நிதிப்பது அரு- அருமையான, "ஸுதுர்லப:" என்கிறபடியே துர்லபமானவென்றபடி, மா- மஹத்தான், அநந்தபாஶவிஸ்தாரமான, மாயத்து- ப்ரக்ருதியில், எனதுயிரே- ஸ்வீயாத்மாவையே, திருமேனிவஸந்தவஸ்தி வஸந்திவைபவமாய்க்கொண்டநாதியாக ப்ரக்ருதியிலேகிடந்து அஹங்காரமமகாராதிதூஷிதமாயிருந்த வென்னுடையஸ்வரூபத்தைத்தானே என்றபடி. மனமே- என்னெஞ்சைத்தானே, வாக்கே- என்வாக்கைத்தானே கருமமே- என்க்ரியையைத்தானே, ஒருமாநொடியும்பிரியான்- இவ்வெம்பேவிருத்தவிஶிஷ்டவேஷணவென்கிரியைகளுக்கு நிர்ஹேதுக விஷயமாயிராநின்றானென்றபடி. என்னூழிமுதல்வன்- என்னுடையவனான ஸத்தைக்கு காரணபூதனானவன், ஊழி- காலம், இது ஸகலபதார்த்தோபலக்ஷணம், என்னைப்பெறுகைக்காக காலாதிஷ்டாத்ருத்வாதி ஸகலபதார்த்தங்களையும் ஸ்ருஷ்டித்தவனான ஸர்வேஶ்வரனென்று தாத்பர்யம், ஒருவன், லோகவிலக்ஷணன், அத்யாஶ்சர்யமான வாத்ரிதஸம்ஶ்லேஷாபிநிவேஶத்தை யுடையவனென்றபடி. ॥ அ ॥

ஊழிமுதல்வனொருவனேயென்றும்- காலோபலக்ஷிதஸகலபதார்த்தங்களுக்கும் காரணபூதனொருவனேயென்று "ஏகமேவாத்விதீயம்" இத்யாதிஶ்ருதிகளாலே சொல்லப்படுமவனான, ஒருவன்- விஶ்வவிலக்ஷணனான, காரணாவஸ்தையில் விஷவித்துக்களுடைய ஸத்தைத்தன்னபிநமாம்படி யிருக்குமவனிப்போது ஸஸத்தையென்னபிநமாம்படி யிரானின்றானென்று கருத்து. உலகெல்லாம்- லோகங்களெல்லாவற்றையும், ஊழிதோறும்- கல்பங்கள்தோறும், தன்னுள்ளே- ஸ்வஸங்கல்பைகதேஶத்துக்குள்ளே, படைத்துக்காத்துக்கெடுத்

மூ—கெடுத்துழலும்* ஆழிவண்ணனென்னம்மான் தண்திருமாலிருஞ்சோலை* வாழிமனமே கைவிடேலுடலு ‖௯‖
முயிருமங்கவொட்டே*
மங்கவொட்டுன்மாமாயைத்திருமாலிருஞ்சோலைமேய [வ]* நங்கள்கோனேயானே நீயாகியென்னையளித்
தானே* பொங்கைம்புலனும்பொறியைந்துங்கருமேந்திரியமைம்பூதம்* இங்கிவ்வுயிரேய்

ஆ—பாராதே யித்தோடே கலந்தருளினாயேயாகிலுமென்னுடைய ஹேயமானவிந்த ப்ரக்ருதியிலபிநிவேசத்
தை விட்டருளவேணுமென்றெம்பெருமானை ப்ரார்த்திக்கிறார். ‖௰‖

(மங்கவொட்டு) தாமிப்படி ப்ரார்த்திக்கச்செய்தேயும் தம்முடைய ப்ரக்ருதியிலுள்ள மோஹத்தினாலெம்
பெருமான் தம்முடைய சொல்லை யாதரியாதிருக்கவவனுக்கிதினுடைய ஹேயதையை ப்ரகாசிப்பித்திந்த

இ— திருநாட்டிலே கொண்டுபோகப் பார்த்தருளுகிறானென்றவனுடைய ஔத்ஸுக்யத்தையறிந்து இவ
ரிப்படி இச்சரீரத்திலே அபிநிவேசிக்கில் நமக்கிந்த ஹேயஸம்பந்தம் ஒருக்காலும் நிவர்த்தியாதொழியு
மென்று பார்த்ததற்காகவவனை நீயிந்தவபிநிவேசத்தை விட்டருளவேணுமென்று ப்ரார்த்திக்கிறாரென்று
ஸங்கதியும் ஸூசிதை. ‖௰‖

✱ பத்தாம்பாட்டு. ✱

மங்கவொட்டென்று கீழ்ப்பாட்டிலே ப்ரார்த்தித்தவத்தையே இப்பாட்டிலும் ப்ரார்த்திப்பானேனென்
னுமவதாரிப்பிக்கிறார் (தாமிப்படியித்யாதியால்) இவ்வவதாரிகையிலே பாட்டின்வ்யாவ்ருத்தமுமுக்தம்,
ஆறிலிதினுடைய வித்யாதியாலே உத்தராயத்தின் தாத்பர்யமிந்த ஹேயமானவித்யாதியாலே வர்ணிதா

ப—துழலும்- ஸ்ருஷ்டித்து ரக்ஷித்து ஸம்ஹரித்து இதுவே யாத்ரையாய் நடக்குமவனான, ஆழிவண்ணன்-
ஸமுத்ரஸ்வபாவனான, ஆழி- ஸமுத்ரம், வண்ணம்- ஸ்வபாவம், ஸமுத்ரம்போலே கம்பீரஸ்வபாவனானவென்
றபடி. என்னம்மான்- என்னோடிப்படி பஹுப்ரகாரமாக ஸம்ச்லேஷித்தருளின ஸ்வாமியுடைய, இதற்குத்
திருமாலிருஞ்சோலையோடே பர்யாயம். அம்- அழகியதான, தண்- சீதளமான, அவனுக்குங்கூட நிரதி
சயபோக்யமானவென்று விசேஷணம். திருமாலிருஞ்சோலை- திருமாலிருஞ்சோலையென்கிற திருமலையை, ம
னமே- என்னுடைய மனஸ்ஸே, கைவிடேல் - ஒருநாளும் கைவிடாதேகொள், நித்யமாக அநுஸந்தி என்றபடி. வா
ழி- உனக்கு க்ஷேமமுண்டாகவேணும், இத்திருமலையை அநுஸந்திக்கையாகிற ஸம்பத்தியே உனக்கு நித்யமா
யிருக்கவேணும், இப்படி நெஞ்சைக்குறித்து அருளிச்செய்து ஸர்வேச்வரனைப்பார்த்து, விண்ணப்பஞ்செய்கி
றார், உடலும்- என் சரீரத்தையும், உயிரும்- என் ப்ராணனையும், மங்கவொட்டு- நசிக்கும்படி நீ ஸம
கரித்தருளவேணும், என் தேஹத்திலுனக்குள்ள அபிநிவேசத்தாலே இத்தை நசிக்கவொட்டவொண்
ணாதே யென்கிற அபிநிவேசத்தைவிட்டு தேஹப்ராணாதிஸம்பந்தரூபமான விந்த ப்ரக்ருதிஸம்பந்தவிநா
சத்தை நீ ஸம்கரித்தருளவேணுமென்றபடி. ‖௰‖

• திருமாலிருஞ்சோலைமேய- திருமாலிருஞ்சோலைமேவாநின்ற, மேவுகை- பொருந்துகை, திருமாலிருஞ்சோலை
யிலே நித்யவாஸம்பண்ணுகிறவனான என்றபடி. நங்கள்கோனே- எங்களுடைய நாயகனே, பரமபதத்தை விட்டு
நீ திருமாலிருஞ்சோலையிலே வந்து நின்றருளுகிறது நாங்கள் பாவித்தபடி செய்கைக்காகவன்றோவென்று க
ருத்து. நீயேயானாகி- என் ரக்ஷணத்திற்கு நான் யத்னிக்கவேண்டாதபடி, நீயே நானாய் என் ரக்ஷணத்துக்கு
நான் பண்ணவேண்டும் யத்னங்களையெல்லாம் நீயே பண்ணினவனாயென்றபடி, என்னையளித்தானே- என்னை
ரக்ஷித்தருளினவனே, நான் வெறுக்கவறியாதிருக்கச்செய்தே அநாதியாகத்துடங்கி ஸ்வயமேவ யத்னம்
பண்ணி என்னை இவ்வளவாக ரக்ஷித்தருளின நீ இப்போதென்ன வேக்ஷையை ப்ரதீக்ஷித்திருக்கவேணு
மெம்பிரானே என்று கருத்து. பொங்கு- பொங்காநிற்கிற, ஸ்வஸ்வகார்யாநுகூலதை. நானாவித ப்ரவ்ருத்திகளாய்
க்கொண்டு விஜ்ரும்பிதங்களாயிருக்குமவையான என்றபடி. ஐம்புலனும்- சப்தாதிகளான பஞ்சவிஷயங்
களும், புலன்- விஷயம், பொறியைந்தும்- அவ்விஷயங்களிலே பாகவிக்கத்து ஸம்பவிக்கும் ஜ்ஞானேந்த்ரிய
பஞ்சகமும், பொறி- இந்த்ரியம், கருமேந்திரியம்- அவ்விஷயங்களில் ப்ரவ்ருத்திக்கு ஸாதனங்களான கர்மேந்
த்ரியங்களும், ஐம்பூதம்- இந்தசப்தாதிவிஷயங்களுக்கு இந்த்ரியங்களுக்கு ஆச்ரயமாய் சரீராரம்பண
ஸமர்த்தங்களாயிருக்கிற பஞ்சமஹாபூதங்களும், இங்கு- இந்த ஸம்ஸாரதேசத்திலே, இவ்வுயிரேய்- இவ்வுயிரை

மூ—மானுங்காரத்திவைபத்தும் திருமாலிருஞ்சோலைமலைக்கே* ॥௧௧॥

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

---

ம— ஸஹஸ்ரத்துக்குள்ளே, மானுங்காரத்திவைபத்தும்- ஓஹஸஹஸ்ரத்திலிப் பத்துப்பாட்டுகளும், மான்- ஓஹத்து, இங்கு ஸஹஸ்ரமென்றது- ஸஹஸ்த்தைச்சொன்னபடி, ஸர்வேஶ்வரன் ஆழ்வார்பக்கல்பண்ணின நிர்ஹேதுகஸம்ஶ்லேஷரஸத்தாலே யாழ்வாருக்குப்பிறந்த ஓஹஸஹஸ்த்திலுண்டான விப்பத்துப் பாட்டுக்களுமென்றபடி. திருமாலிருஞ்சோலைமலைக்கே- திருமாலிருஞ்சோலையென்கிற திருமலையிலே, அக்கரைக்கே இக்கரைக்கேயென்னுமாப்போலே மலைக்கேயென்றது ஸப்தம்யர்த்தம், திருமாலிருஞ்சோலைமலைவிஷயமாகச்சொன்னவையென்றபடி. ஆதலாலெம்பெருமானுக்கு மிகவும்ப்ரியங்களாயிருக்குமென்றுகருத்து. தல்லக்ஷணஶ்ருதித்தை யஹ்ருஸியுங்கோளென்று வாக்யார்த்தம், இத்திருவாய்மொழியிற்சொன்ன ஸம்ஶ்லேஷங்களெல்லாமெம் பெருமானுக்குத் திருமாலிருஞ்சோலையோடுள்ள ஸம்பந்தத்தாலேவந்தவையாயித்திருவாய்மொழியிலவனுடைய ஸம்ஶ்லேஷங்களைச்சொன்னவிடமெல்லாம் 'தஸ்மாத்ஸம்ஸாரஹ்ருணீஜமள' என்கிறகணக்கிலேதிருமாலிருஞ்சோலையிலே வ்யக்தமென்றுகருத்தாலே யித்திருவாய்மொழி திருமாலிருஞ்சோலைவிஷயமென்கிறார். ॥௧௧॥

ஜ்ஞானவைராக்ய நிஷ்டாநவமஸ்ரீ வேதாந்தாசார்ய ராமானுஜ மஹாதேஶிகாய நம:.

---

ஸ்ரீ:.

த்ரமிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி:.

(செஞ்சொற்கவிகாள்.)

சித்ரஸ்வாத்மானுபூதிப்ரதமுநிஹ்ருதய: ஸ்வஸ்துதிவ்யாஜஶாலீ

ஸர்வாத்மா ஸர்வஸம்ஸ்தோத்ருதிஸ்வகவிதா நஸ்வதுஷ்டிர்வதாத்மா ।

ஸ்வஸம்பந்தஸ்யபோத ஸ்வஹ்ருதயஸவிதா ஞானவேத்யோநகேஶ:

ஸ்ரீராஷ்ட்ராதேர்ஸ்வராஜநவரிதஸ்வாத்மஸ்வம்ஜதேர் ॥௧௧0॥

(சித்ரஸ்வாத்மானுபூதிப்ரத) மாமாயன்மாயக்கவியாய் வந்தென்னெஞ்சுமுயிரு முள்கலந்து- ஸ்வரூபவைஷ்ட்யங்களை யுடையவனைக்கொண்டு ஸ்ரீகருடைய ஹ்ருதயத்தனாயிருக்கையாலும், (ஸ்வஸ்துதிவ்யாஜஶாலீ) தானேயானென்பானாகித் தானே துதித்து- ஸ்வவிஷயஸ்தோத்ரத்திலே ஸ்ரீகரைப்ரேரிக்குமவனுகையாலும், (ஸர்வாத்மா) நின்றமாயவம்மான்சேர்- எல்லாருக்கும் நிராவாயிகஸ்வாமியாகையாலும், (ஸர்வஸம்ஸ்தோத்ருதிஸ்வ) உலகுமுயிரும்தானேயாய்- ஸர்வஸம்ஸ்துதங்களுக்கு ஓஜோதாரவாய்நிற்கையாலும், (ஸ்வகவிதாஸ்வகவிதா) யானுப்த்தன்னைத்தான்பாடி- அப்படியே ஸ்ரீகற்கு மஹாதாதயாயிருந்து தன்னைத்தானே ஸ்துதிக்குமவனுகையாலும், (ஸ்வஸம்பந்தஸ்யபோத) செழுமூவுலகும் தன்னொருமாவயிற்றினுள்ளேவைத் தூழியூழிதலையளிக்கும்- ப்ரளயந்தோறும் எல்லாலோகங்களையும் திருவயிற்றிலேவைத்து ரக்ஷிக்குமவனுகையாலும், (ஸ்வஹ்ருதயஸவிதாஞானவேத்ய) அம்மான்திருமலை மருள்கள்கடியும் மணிமலைதிருமாலிருஞ்சோலைமலையே- திருமாலிருஞ்சோலைமலையே திருப்பாற்கடலேயித்யாதி- ஸஹவியங்களான ஸ்ரீவநாத்ரி க்ஷீராப்தி வைகுண்டவேங்கடாசல ஸ்ரீமதிரஸ்ரீராத்ரநாகங்களிலே ஸவஸதிக்குமவனுகையாலும், மேலிரண்டுபாட்டிலும் 'ஊழிமுதல்வனொருவனேயென்னு மொருவனுலகெல்லாமூழிதோறும் தன்னுள்ளேயடைத்துக்காத்து' என்றும் 'நங்கள்கோனேயானேநீயாகியென்னையளித்தானே' என்றும் ரக்ஷகஸ்வாமிகளைத்தானே யருளிச்செய்கையாலே இவைகீழ்வ்யூஹமாகையாலே ஸம்ஹ்ருதீகமாயிற்றென்று திருவுள்ளம், ஸகலஸம்பந்தனை ஸ்ரீவநாத்ரியிலெம்பெருமான் ஸ்ரீகருடைய ஶரீரஸம்பந்திகளிலும் ஸங்கோசாரம்பண்ணுகின்றானென்று "செஞ்சொற்கவிகாள்" என்கிறதஶகத்திலே ஶடகோபரருளிச்செய்தாரென்கிறார். ॥௧௧0॥

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

பத்தாம்பத்தில் ஏழாந்திருவாய்மொழிமுற்றிற்று.

# எட்டாந்திருவாய்மொழி.

ஆ— (திருமாலிருஞ்சோலைமலை) இப்படி பக்திவிஷ்டனைக்கொண்டென்னோடுகலந்து பரிமாறுகைக்கு ஹேதுவென்னென்ன, எம்பெருமானைக் கேட்டால் அங்ஙனே பக்திவிஷ்டனாயிருந்த வஸனும் வஸிகளவுமான ஹேதுக்களில் ஒரு ஹேதுவுமென்பக்கலுண்டாகச்சொல்லவொண்ணாது இனி என்பக்கலில்லாதஹேதுவை யென்பக்கலிலே யத்யாரோபித்துச்சொல்லப்பார்க்கும் திருமாலிருஞ்சோலைமலையென்று மிச்சொல்லைச்சொன்னேனென்று மேற்பட்டச்சொல்லாவதொரு ஹேது வென்பக்கலிலேயில்லை, இச்சொல்லித்தனையு

---

## எட்டாந்திருவாய்மொழி.

இ— திருமாலிருஞ்சோலைமலையென்றேனென்கிறவிடத்தில் ஸங்கதியருளிச்செய்கிறார் (இப்படியி த்யாதிசொல்லப்பார்க்கிலென்னுமளவாலே) அதிலிப்படி பக்திவிஷ்டனைக்கொண்டென்னோடுகலந்துபரிமாறுகைக்கு ஹேதுவென்கிறவளவாலே இத்திருவாய்மொழிக்கு ஸம்பந்தமும்ஸங்கதியுமிதை. எங்ஙனேயென்னில்? அருள்பெறுவாரடியாரென்கிற திருவாய்மொழியிலேயவன் தம்மைத்திருநாட்டிலேகொண்டுபோகையிலே த்வரிதனாயிருக்கிறபடியையும் தான்த்வரிதனாயிருக்கச்செய்தேயும் 'ஆஜ்ஞாப்யாஸம் தவஸ்ரீநாம்' என்கிறபடியே தமக்குப்ராப்தாஜ்ஞனைக்கொண்டு தம்முடைய ஆஜ்ஞாப்ரதீக்ஷனாயிருக்கிறபடியையும் செஞ்சொற்கவியிலே தன்திறத்தில் ஸ்நேகாதிசயத்தாலே தம்முடையதிருமேனியிலும் நிரதிசயமாக க்கலந்தருளித் தம்மை இத்தேஹத்தோடே திருநாட்டிலேகொண்டுபோகவுமபேக்ஷிக்கிற வ்யாமோஹாதிசயத்தையும் தானித்தனை பக்திவிஷ்டனாயிருக்கச்செய்தேயும் 'மங்கவொட்டுன்மாமாயை' யென்று தாமபேக்ஷித்தவாறே தன்னபிநிவேசத்தைத்தவிர்ந்து தாமருளிச்செய்தபடியே செய்தருளக்கடவனாய்நிற்கிற நிரதிசயப்ராவண்யத்தையு மநுஸந்தித்து மிகவும் விஸ்மிதரானவாழ்வார் ஸநாதிபாக ஸர்வேச்வரனாய் ஸம்ஸாரிகஸ்பரிதஸஹஸ்ர ஶீர்ஷனாய்க்கிடந்த என்திறத்திலே ஸர்வேச்வரனான ஸர்வேச்வரன் ஷனித்தனை பக்திவிஷ்டனாயிப்படி கலந்தருளுகைக்கு என்பக்கலுள்ள ஹேதுவேதோவென்று விஸ்மயாதிசயத்தாலே நிரூபித்துப்பார்த்தவிடத்தில தம்பக்கலுள்ள ஸாதனாநுஷ்டாநத்தாலே யாத்ருச்சிக மாயிருப்பதொரு ஸாதனகணிகாஸூத்ரமாய் மேலுள்ள ஸாதனஸம்பத்தெல்லாமித்தை ஸ்வீகரித்துக்கொண்டு உத்தரோத்தரஹேதுஹேதுவேந அவன்தானேயுண்டாக்கினவையாய்ந்த யாத்ருச்சிக ஸாதனந்தானும் 'ஸர்வஸ்வ ஸாதநம் யத்ருச்சாஸாதநம்' என்கிறபடியே தம்முடைய அநாதிஸம்ஸாரத்தில் ஸம்ஸாரப்ரதீக்ஷனாயிருந்த அவனுடைய கேவலஸாதனத்தாலே ஜநிதமாயிருந்தபடியைக்கண்டு கீழ்த்திருவாய்மொழியிலே விஷயமெல்லாமொரு தோஷமென்னும்படி பகவத்ப்ரஸாத விஷயமான கைங்கர்யநிஷ்டராய் பொய்ந்நின்றஞானந்தொடங்கி இவ்வளவாகத்தன்பக்கலவன்செய்தருளின ஸாதனாதிசயங்களெல்லாமிப்படி நிர்ஹேதுகஸாதனத்தாலே செய்தருளினானித்தன்ன வாத்ஸல்யமெ ன்றந்த விஸ்மயாதிசயமுள்ளடங்காமையாலே பாவித்துக்கொண்டு அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி ஸங்கதியிதை யாகிறது. இத்தாலித்திருவாய்மொழிக்கு யத்ருச்சாஸாதநமென்கிற ஸம்பந்தம் ப்ரதிபாத்யமென்றதாயிற்று. என்பக்கலுண்டாகச்சொல்லவொண்ணாது என்பது- 'யத்ருச்சாஸாதநம் விஷ்ணோ கடாக்ஷ' மென்கிற வாக்யகடாக்ஷத்துக்கு முந்தினகாலத்திலே என்பக்கலுண்டாயிருந்ததாகச் சொல்லவொண்ணாதென்றபடி. என்பக்கல் கர்மயோகாதிகள் ஸாதநமேயில்லை யாத்ருச்சிகஸாதனாதிகள். ஸ்வ ஸ்நேஹமாகவில்லையென்றுகருத்து. அத்யாரோபித்துச் சொல்லப்பார்க்கிலுமென்றது- 'மேஷமேனுவாஸ்த்ரம்' மென்கிறபடியே அஜ்ஞானீகனை வென்றுமாநகதர்வாணகயாலே உச்சிஷ்டனை அவன்பக்கலிலே ஜநித்திருந்த ஹேதுவை விசேஷஸாதனை அவன்பக்கல் தாத்பர்யமன்றிக்கே விசேஷண ஸாதனனை என்பக்கலிலே அத்யாரோபித்துச்சொல்லப்பார்க்கிலுமென்றபடி. *

## முதற்பாட்டு.

திருமாலிருஞ்சோலைமலையென்றேனென்கிறவிடத்தில் ஸ்வவிசேஷத்தாலே ஸஞ்ஜிக்கிற ஸந்தர்ப்பத்தையரு ளிச்செய்கிறார் இதற்குமேலப்பட்டவித்யாதியால்) என்னவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இச் சொல்லித்தனையும்ப்ரத்யாதியால்) சொன்னேனென்றது- சொன்னேனாகவென்றபடி. தான்ஹேதுவாயென்றது-

